# இயேசுவின் திருஇருதய
# வணக்கமாதம்



நாஞ்சில் பதிப்பகம், நாகர்கோவில்.

## இயேசு கிறிஸ்துவின் நாமத்தில் அன்பின் வாழ்த்துக்கள்

ஏறக்குறைய 7 ஆண்டுகளாக பல இடங்களிலிருந்து சேகரித்த சுமார் 200 ஆண்டுகளுக்கு முன்பு வரை அச்சடிக்கப்பட்ட, ஆரோக்கிய உபதேசங்கள் அடங்கிய, கிறிஸ்தவ ஆவிக்குரிய புத்தகங்களை, பல மணி நேரம் கொடுத்து, பல இலட்சங்கள் செலவு செய்து மின் நூல்களாக (E-Books) இலவசமாக (மத்தேயு 10:8) உங்கள் கரங்களில் கொடுப்பதற்கு, அற்பரும் நீசருமான எங்களை பயன்படுத்தின உன்னத தேவனுக்கே சகல கனமும் மகிமையும் துதியும் உரித்தாவதாக. இதைப் போன்ற இன்னும் ஆயிரக்கணக்கான புத்தகங்களை தரவிறக்கம் (Download) செய்ய எங்களுடைய இணையதளத்தை சொடுக்கவும்/பார்க்கவும்: www.WordOfGod.in

95 சதவீத புத்தகங்கள் அச்சில் இல்லாதவைகளும், காப்புரிமை முடிந்தவைகளுமே. மீதமுள்ள புத்தகங்கள், நல்ல உபதேசங்களை கொண்டிருப்பதால், முடிந்தவரை ஆசிரியரின் உரிமையோடு மின்-நூலாக, இலவசமாக வெளியிடுகிறோம். ஒருவேளை உங்களுடைய புத்தகம் இப்படி இலவசமாக மின்-நூல் (E-Book) வடிவில் வரக்கூடாது என்று நினைத்தீர்களானால், தயவு செய்து எங்களை மன்னித்துக்கொள்ளுங்கள். எங்களுடைய WhatsApp எண்ணிற்கோ, மின் அஞ்சலிலோ (Email) எங்களுக்கு தெரியப்படுத்துங்கள். உடனடியாக எங்களுடைய இணைய-தளத்திலிருந்து எடுத்துவிடுகிறோம்.

*WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599*

*Email: wordofgod@wordofgod.in*

## *Wishing you in the mighty name of Jesus Christ*

*We had collected several thousands of old Tamil Spiritual Books which are rich in Sound Doctrines across various places of India for 7 years. Some of them are more than 200 years old books. We have spent millions of hours and money in scanning them and coverting them to E-Books. The work is still in progress. These E-books are published completely free of cost (Matt 10:8) forever. We give all the praise and glory to God for giving this wonderful opportunity to server Him. You can download thousands of similar Tamil Christian E-books from our website www.WordOfGod.in completely free of cost at any time.*

*95% of these E-Books are not being printed now and their copyrights are already expired. The remaining books are sent as E-Books mostly with the permission from the Authors. If you feel that your books should not be published as E-Book freely, kindly execuse and forgive us. Please let us know the book details by WhatsApp or Email we will remove them from our website.*

*WhatsApp/SMS: +91 90 190 490 70 / +91 7676 50 5599*

*Email: wordofgod@wordofgod.in*

# இயேசுவின் திருஇருதய வணக்கமாதம்



அருட்பணி பிரான்சீஸ் டி சேல்ஸ்

நாஞ்சில் புக் ஸ்டாஸ்
67/1 கோர்ட் ரோடு,
நாகர்கோவில் - 629 001

## நூல் கட்டமைப்பு

நூல் அறிமுகம் : இயேசுவின் திருஇருதய வணக்கமாதம்

ஆசிரியர் : **பணி. பிரான்சீஸ் டி சேல்ஸ்**

அச்சும், அமைப்பும் : **நாஞ்சில் ஆப்செட் பிரிண்டர்ஸ்,**
67/1 கோர்ட் ரோடு,
நாகர்கோவில்.

விலை : ரூ. 72

கிடைக்கும் இடம் : **நாஞ்சில் புக் ஸ்டால்**
67/1 கோர்ட் ரோடு, நாகர்கோவில் - 1,
குமரி மாவட்டம்.
போண் : 04652 - 233853

மற்றும்
**கிறிஸ்தவ புத்தக நிலையங்கள்**



**நன்றி**

திருச்சி ஜேம்ஸ் ஆயரால் அங்கீகாரம் அளிக்கப்பட்டு தூய ஜோசப் இன்டஸ்ரியல் பள்ளி அச்சகத்தால் வெளியிடப்பட்ட இயேசுவின் திருஇருதய வணக்கமாதம் திருத்திய பதிப்புக்கு உதவிய அருட்பணி பிரான்சிஸ் டி சேல்ஸ் அவர்களுக்கும் அன்பின் நன்றிகள்.

*- பதிப்பகத்தார்.*


*இனி வரவிருக்கும் தலைமுறைக்கென*
*இது எழுதிவைக்கப்படட்டும்; படைக்கப்படவிருக்கும் மக்கள்*
*ஆண்டவரைப் புகழட்டும்.* (திருப்பா. 102 : 18)

## முன்னுரை

தூயமரியன்னையிடம் நாம் கொண்டிருக்கும் பக்தியானது இயேசுவின் திருஇருதயப் பக்திக்கு வழியாயிருக்கிறது. மரியன்னைக்கு ஒப்புக் கொடுக்கப்பட்டிருக்கிற மே மாதம் தேவதாயை மகிமைப்படுத்தினபிறகு கத்தோலிக்க திருச்சபை உலக மீட்பராகிய இயேசுவின் திருஇருதய மகிமை வணக்கத்திற்காகவும், அன்பிற்காகவும் ஜூன் மாதத்தை ஒப்புக்கொடுத்துள்ளது.

1835ம் ஆண்டு பாரிஸ் நகரில் மரியன்னையின் பெயர் கொண்ட ஒரு கன்னியர் மடத்தில் பக்தியுள்ள ஒரு சிறுபெண் மிகுந்த பக்தியோடு நற்கருணை உட்கொண்ட சிறுமி ஆண்டவரை நோக்கி, "என் இனிய இயேசுவே! உமது அன்பு நிறைந்த இதயத்தை மகிமைப்படுத்த நான் ஏதாவது செய்ய விரும்புகிறேன்" என்று கூறியதும் அச்சிறுமியின் இதயத்தில் ஒரு உந்துதல் எழுந்தது. தூய மரியன்னைக்கு வணக்கமாக ஒரு மாதம் இருப்பதுபோல் இயேசுவின் திருஇருதயத்தை மகிமைப்படுத்தவும் ஒரு மாதத்தை வணக்கமாதமாக ஏன் ஒதுக்கக்கூடாது? என்றக்கேள்விதான் அந்த உந்துதல். இந்தக் கேள்வியால் சிறுமி வெகுவாய் கலங்கி, தன் தலைமை சகோதரியிடம் தெரிவித்தார். ஏற்கெனவே இயேசுவின் திருஇருதய பக்தியால் நிறைந்திருந்த தலைமை சகோதரி இந்த நல்ல செய்தியை மிகவும் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொண்டு சிறுமியிடம் "இச்செயல் நடக்கும்" என்று தைரியம் கொடுத்தார்.

இச்செய்தி தன் தோழிகள் இதயத்திலும் பதியும்படி விரும்பினாள். திருச்சபை அனுமதிக் கொடுத்தால் திருஇருதய வணக்கமாதம் பக்திச்சிறப்புடன் கொண்டாடுவதாக கூறினார்கள். அதே வருடம் மே மாதம் 29ம் தேதி பாரிஸ் நகர் ஆயர் அம்மடத்திற்கு வருகைதர நேரிட்டது. ஆயர் மடத்தை விட்டுச் செல்வதற்குமுன் கன்னியர்கள் மற்றும் பிள்ளைகளோடும் உரையாடிக் கொண்டிருந்தார். அப்போது சிறுமி தன் பக்திக்குரிய விண்ணப்பத்தை ஆயரிடம் வெளியிட்டாள். உடனே யோசித்துவிட்டு ஆயர் அவர்கள், மகளே நீ கேட்கிற வேண்டுதலுக்கு நாம் மிகுந்த விருப்பத்தோடு அனுமதி கொடுக்கிறோம். இயேசுவின் திருஇருதயத்திற்கு ஒரு மாதக் கொண்டாட்டத்தை ஜூன் மாதம் முதல் தேதியில் நீங்கள் ஆரம்பிக்கலாம். இந்த பக்தி திருச்சபை முழுவதும் பொதுவான பக்தி ஆகுமென்பது நமது நம்பிக்கை என்றார். ஆயர் அவர்கள் கூறிய வார்த்தைகள் நிறைவேறிற்று. இந்த பக்தியானது திருத்தந்தையின் ஆசிர்பெற்று உலகமெங்கும் பரவி ஆத்துமப் பலத்துக்குரியவைகளை ஏராளமாய்க் கொடுத்தது.

இயேசுவின் திரு இருதயப் பக்தி என்பது இறைமகன் இயேசுவின் மானிட அன்பையும், தெய்வீக அன்பையும் சிறப்பிப்பதாகும். திருநூலில் சில நிகழ்வுகளும், வசனங்களும் இயேசுவின் திரு இருதயத்தோடு தொடர்பு கொண்டு, அவரது அன்பு, அருள் ஆகியவற்றைப் பிரதிபலித்து, இயேசுவின் திருஇருதயப் பக்திக்கு இறையியல் அடிப்படை இருப்பதைக் காட்டுகின்றன.

நம் ஆண்டவர் இயேசுவின் அன்பின் அருட்சின்னம் அவருடைய திருஇருதயம். இயேசு சிலுவையில் அறையப்பட்டு தொங்கியபோது படைவீரருள் ஒருவன் இயேசுவின் விலாவை ஈட்டியால் குத்தினான். உடனே இரத்தமும் தண்ணீரும் வடிந்தன (யோவான் 19: 34) உயிர்த்த இயேசு, திருத்தூதர் தோமையாரை நோக்கி, "உன் கையை நீட்டி என் விலாவில் இடு. ஐயம் தவிர்த்து நம்பிக்கை கொள்" என்று அழைக்கிறார். தோமா அவரைப் பார்த்து, நீரே என் ஆண்டவர்! நீரே என் கடவுள்!! என்றார் (யோவான் 20 : 27,28) இவைதான் இயேசுவின் திருஇருதயப் பக்தியின் முதல் வெளிப்பாடுகள்.

பிரான்ஸ் நாட்டின் பாரலே மோனியல் என்ற இடத்திலிருந்த மினவுதல் சபையை சேர்ந்த மார்கரீத் மரிய அலக்கோக் என்ற கன்னிகைக்கு இயேசுவின் திருஇருதயப் பக்தியைப் பற்றி திருஇருதயநாதர் பலமுறை தோன்றி காட்சி கொடுத்துள்ளார்.

இயேசுவின் திருஇருதயப் பக்தியை உலகெங்கும் பரப்ப திருச்சபையில் திருத்தந்தையர்களும், இயேசு சபையாரும் பல முயற்சிகள் மேற்கொண்டு கி.பி. 1835- ஆம் ஆண்டுமுதல், ஜூன் மாதத்தை இயேசுவின் திருஇருதய வணக்க மாதமாகச் சிறப்பிக்க திருச்சபை ஆணை பிறப்பித்தது. இச்சிறப்பு நிகழ்வுக்கு உந்துதலா யிருந்தவர் பாரிஸ் மரியன்னை சபையைச் சேர்ந்த ஓர் இளம் கன்னிகையாவர்.

ஜூன் மாதத்தில்தான் இயேசுவின் திருஉடல் - திரு இரத்தத்தின் திருநாள், இயேசுவின் திருஇருதயப் பெருவிழா உட்பட அனைத்து விழாக்களும், இல்லங்களில் இயேசுவின் திருஇருதய அரசாட்சி நிறுவுதல் போன்ற பக்தி நிகழ்வுகளில் இயேசுவின் திருஇருதயம் மகிமைப்படுத்தப்படுகின்றது.

இந்நூலில், இயேசுவின் திருஇருதய வணக்கமாதம் ஜூன் மாதத்தின் ஒவ்வொரு நாளுக்கும் ஒவ்வொரு தலைப்புகளில் வரலாறு, நற்செயல், செபம், பரிகாரம், நம்பிக்கை, நன்றி ஆகியவற்றின் முக்கியத்துவத்தையும் பலன்களையும் உணர்த்துகின்றன.

# என்னுரை

இறை மக்கள் சமூகத்தில்

பொது நிலையினர் தலைமை ஏற்று நடத்தும் பல பக்தி முயற்சிகள் நம் கத்தோலிக்க பாரம்பரியத்தில் காலம் காலமாக இருந்து வந்திருக்கிறது. அவைகள், ஒவ்வொன்றாக பொருள் இழந்துபோய் வெறும் சடங்குகளாகவும் சம்பிரதாயங்களாகவும் மாறிப்போயின. அதனால் அப்படிப்பட்டவைகள் 'தேவைதானா' என்ற கேள்வி எழத் தொடங்கியது. காலப் போக்கில் பக்தி முயற்சிகள் எல்லாம் ஒவ்வொன்றாக மறைந்துபோய்விட்டன. எனவே "வழிபாடு" குருக்கள் தலைமை ஏற்று நடத்துவதுதான் 'வழிபாடு' என்றாகிவிட்டது. இறுதியில் இறைமக்களின் செபவாழ்வில் பின்னடைவு ஏற்பட்டது. இதனால் ஆன்மீக வாழ்வில் ஏற்பட்ட வெற்றிடத்தை நிரப்ப மக்கள் அங்குமிங்கும் அலைந்து திரிந்து, "பெந்தகோஸ்த்" சபைகளைத் தேடிப் போகிறார்கள்.

இறைமக்களின் உடல் உள்ள ஆன்ம நல வாழ்வுக்கு தேவையானவை பல இன்று குறைபடுகிறது. ஞான போதனை கேட்பதும், அமைதியில் நிலைப்பதும், சிந்தித்துத் தியானிப்பதும் மிகவும் இன்றியமையாததவையாகப் படுகிறது. அதற்கு உறுதுணையாக திகழும் பக்தி முயற்சிகளில் ஒன்றுதான் **'திருஇருதய பக்தி'**.

இயேசுவின் திரு இருதய பக்தி என்பது இறைமகன் இயேசுவின் மானிட அன்பையும், தெய்வீக அன்பையும் சிறப்பிப்பதாகும். இந்த பக்தி நம்மில் நிலவுகின்றபோது அதே மானிட அன்பும், தெய்வீக அன்பும் நம்மிலும் நிச்சயம் மலரும். இந்த நம்பிக்கையோடுதான் ஏற்கனவே அச்சிடப்பட்டிருந்த "இயேசுவின் திருஇருதய வணக்கம்" என்ற இப்புத்தகத்தில் ஆங்காங்கே சில திருத்தங்கள் செய்து மீண்டும் அச்சிட முனைந்துள்ளேன். அதற்கான முழுப்பொறுப்பையும் ஏற்ற **நாஞ்சில் பதிப்பகத்தார்க்கு** என் மனமார்ந்த பாராட்டுகள். இப்புத்தகம் நம் அனைவர் மத்தியிலும் இயேசுவின் திருஇருதய பக்தியை மேலும் வளரச்செய்ய ஒரு சிறு கருவியாகட்டும். இயேசுவின் இறை இரக்கமும் அன்பும் என்றும் உங்களை வழிநடத்துவதாக.

பெரியகாடு
25-03-2004

அருட்பணி. **பிரான்சீஸ் டி சேல்ஸ்**

# பதிப்புரை

"ஜூன் மாதம்"! இயேசுவின் திருஇருதய வணக்க மாதம்! முப்பது நாட்களும் பரிகாரத் தினங்களாகும். எல்லா நாட்களும், குறிப்பாக இப்பரிகாரத் தினங்களில் இதய அரசின் இரக்கத்தை போற்றிப் படிக்கவும், தியானிக்கவும், இறை அனுபவத்தில் ஊறித் திழைக்கவும் வழிகாட்டும் கையேடுதான் இது.

சிங்கார வனத்தில் சீருடன் வாழ படைக்கப்பட்ட முதல் மனிதர் ஆதாம் - ஏவாள். அவர்களை சாத்தான் பசப்புச் சொல்லாலும், செயலாலும் ஏமாற்றினான். இதனால் மனுக்குலத்தையே சீரழித்து விட்டான். இந்த மனுக்குலத்தை மீட்பதற்காக கன்னியின் உதரத்தில் தூய ஆவியால் உருவாகி நம்மில் ஒருவராய் பிறக்கத் திருவுளம் கொண்டார் இயேசு சுவாமி. சிங்காரவனத்தின் மரத்தினால் வந்த தீமையை முறியடிக்க கல்வாரி மலையில் மரத்தினால் ஆன சிலுவையில் அறையப்பட்டு, உயிர்விட்டு மனுக்குலம் முழுவதையும் மீட்டார்.

சிலுவையில் தொங்கும் பொழுது, அவர் இதயம் ஈட்டியால் குத்தி திறக்கப்பட்டது. அங்கிருந்து இரக்கத்தின் ஊற்றாகிய இரத்தமும் நீரும் வெளிவந்தது. மீட்பரின் திறந்த இதயத்தில் அனைவரும் ஈர்க்கப்பெற இயேசு நம் ஆண்டவர் காத்திருக்கிறார். அதற்காக புனித மார்க்கரீத் மரியம்மாளிடம் இயேசு தம் இதயத்தைக் காட்டி மனுக்குலத்திற்காக ஏங்கும் தம் இதயத்திற்கு ஆறுதல் தர கேட்டுக் கொண்டார். இதுவே திருஇருதய பக்தியாக உருவெடுத்து ஜூன்மாத வணக்கமாகி இறைமக்கள் மத்தியில் நடைபெற்று வந்தது.

பலருடைய வேண்டுகோளுக்கு இணங்க, நீண்ட காலமாக மக்களுக்கு கிடைக்காமலிருந்த இயேசுவின் திருஇருதய ஜூன் மாத வணக்கம் என்ற இந்த புத்தகத்தை திருத்தம் செய்து தர முன்வந்தார்கள். அருட்திரு பிரான்சீஸ் டி சேல்ஸ் அவர்கள். அரும்பெரும் முயற்சியால் உருவாக்கப்பட்ட **இயேசுவின் திருஇருதய வணக்கமாதப் புத்தகம்** அனைத்து இறைமக்களின் கரங்களிலும் தவழ வேண்டும், இதனால் மீண்டும் திருஇருதய பக்தி, மக்கள் மத்தியில் மலர்போல் மணம் பரப்ப வேண்டும் என்ற நோக்குடன் **நாகர்கோவில் நாஞ்சில் பதிப்பகம்** இப்புதிய பதிப்பை வெளியிடுகிறது. இந்நூல் வெளிவர உதவிய ஆசிரியை தெரசம்மாள், கள்ளிக்குளம் கல்லூரி நூலகர் லாரன்ஸ் மேரிக்கும், ஒளிவெள்ளம் ஆசிரியர் பிதலிஸ் அவர்களையும் நன்றி உணர்வுடன் நினைக்கிறேன்.

இதை ஒவ்வொருவரும் படித்து மற்றவர்களுக்கும் அறிமுகப்படுத்துவ தோடு இயேசுவின் திருஇருதயத்திற்கும் நன்றி கூறுவோம். இயேசுவின் அருள் ஒளி எங்கும் பரவ செபிப்போம்.

நாஞ்சில் பதிப்பகம் பணிவுடன்
67/1 கோர்ட் ரோடு, நாகர்கோவில் - 1 **N.D. ஜோசப்**

## பொருளடக்கம்

## முதல் தேதி ****************************



# இயேசுவின் திருஇருதய வணக்க மாதம் செய்ய வேண்டியவை.

இயேசுவின் திரு இருதயத்தின்மேல் நமக்கு மிகுந்த பக்தியிருக்க வேண்டும். அளவற்ற அன்பு நிறைந்த இயேசுவின் திருஇருதயத்திற்கு மனிதர்களால் வரும் நிந்தை அவமானங்களுக்குப் பரிகாரமாகவும், அன்புக்கு பிரதி அன்பு காட்டவும், மனிதர்களுடைய இருதயங்களில் உண்டாகிற பற்றுதல்தான் திருஇருதயப்பக்தி. நம்முடைய ஆராதனைக்கும், வணக்கத்திற்கும் அன்புக்கும் தகுதியுடையவரான தூய வார்த்தையாகிய தமத்திரித்துவத்தின் இரண்டாம் ஆளான இயேசுக் கிறிஸ்துவின் உயிருள்ள இரத்தமும் உடலுமான இருதயம்தான் இயேசுவின் திருஇருதயம் இயேசு கிறிஸ்து நம்மீது கொண்டிருக்கும் அளவிடமுடியாத அன்புதான். அவர் நமது மீட்புக்காக சிலுவையில் இரத்தத்தைச் சிந்தவும், நமது பீடங்களின்மேல் தூய அப்ப வடிவில் அற்புதமாய் வீற்றிருக்கவும் செய்கிறது.

ஆதலால், மனிதர்களை அன்பு செய்யும்படி இயேசுவின் திரு இருதயத்தில் அக்கினிபோல் எரிந்துக் கொண்டிருக்கும் இறைவனுடைய அன்பை அறிந்து ஆராதித்து அன்புக்கு அன்பு காட்டுவதுதான் திருஇருதய பக்தியாகும். நம் ஆண்டவர் புனித மார்கரீத் மரியாவுக்கு தமது இதயத்தைக் காண்பித்து கூறியது போல், நம்மையும் நோக்கி, மனிதர்களை அதிகமாக நேசிக்கும் இந்த இதயத்தைப் பாருங்கள். இதற்குப் பலர் நிந்தை அவமானத்தை வருவிக்கிறார்கள். நன்றியறியாமையும், அசட்டைத்தனமும், அவமரியாதையுமே அவர்கள் நமக்குச் செய்யும் பிரதி நன்றி. நமது அன்புக்குப் பதில் அன்பு சிறிதளவாகிலும் செலுத்துவார்களேயாகில் நாம் அவர்களுக்காக செய்த அனைத்தும் ஒன்றுமில்லை என்று எண்ணுவதோடு, வேண்டுமானால் இன்னும் அதிகமாக அவர்களுக்காகப் பாடுபடவும் தயாராயிருக்கிறோம்.

“மகளே, மகனே, நீயாகிலும் அவர்களுடைய நன்றிகெட்டதனத்துக்குப் பரிகாரமாக நமக்கு சற்று ஆறுதல் கொடுக்கமாட்டாயா?” என்று நம் ஒவ்வொருவரையும் கேட்கிறார். நாம் கட்டிக் கொண்ட சகல பாவங்களும் திருஇருதயத்தின் தேவ அன்பின் சுடரால் சுட்டெரிக்கப்பட்டு நமது தீயகுணம் நிறைந்த வாழ்நாள் முழுவதும் சுத்தப்படுத்தப்படும்படி நாம் ஆண்டவர் இயேசுவின் அன்பில் நிலைத்து

இந்தமாதம் முழுவதும் அவர் இதயத்தில் குடியிருப்போமாக! தூய பவுலடியார் கூறியதுபோல வாழ்வது நானல்ல, கிறிஸ்துவே என்னிடம் வாழ்கிறார் என்று நாமும் சொல்லலாம்.

புனித மார்கரீத் மரியா கூறியது போல, 'ஓ என் ஆண்டவரே! என்னிடம் ஆயிரம் இருதயங்கள், ஆயிரம் உயிர்கள் இருந்தாலும் அவைகளை எல்லாம் உம்முடைய ஊழியத்துக்கும் அன்புக்கும் ஒப்புக் கொடுக்கிறே'னென்று நாமும் சொல்லலாம்.

**இயேசுவின் திருஇருதய வணக்கமாதத்தை பக்தியோடு கொண்டாடி இறை அருளை நிரம்பப் பெற நாம் செய்யவேண்டியது :**

இம்மாதத்தில் இயேசுவின் திருஇருதயத்துக்கு நமது அன்பைக் காண்பிக்க எந்தெந்தக் கோவில்களில் அல்லது ஜெபக்கூடங்களில் இத்திருஇருதய வணக்க மாதத்தை வெளி ஆடம்பரத்தோடு கொண்டாடுகிறார்களோ, அங்கே நாமும் சேர்ந்து சிறப்போடு கொண்டாடுவோமென்று நல்ல தீர்மானம் செய்கிறது அல்லது ஒவ்வொரு குடும்பத்திலும் திருஇருதயப் படம் ஸ்தாபித்து தினமும் குடும்ப ஜெபமாலைச் சொல்லி தங்களை முழுவதும் அத்திரு இருதயத்துக்கு ஒப்புக்கொடுக்க வேண்டியது, அதனால் திருஇருதயத்தின் ஆசீர்வாதம் கிடைக்கும். திருஇருதயத்திற்கு விரோதமான எந்தக் காரியத்தையும் செய்யலாகாது.

**வரலாறு**

புனித மார்கரீத் மரியாவுக்கு தன் சுயநல எண்ணங்கள், செயல்களை வெல்வது மிகவும் கஷ்டமாக இருந்தது. ஒருநாள் நமது இரட்சகர் தனது காயங்களைக் காண்பித்து, தன் தீயசெயல்களை எதிர்த்து போராடப் போதுமான தாராள குணம் மார்கரீத் மரியாவிடத்தில் இல்லாததைப் பற்றிக் கண்டித்தார். நவ கன்னிகையான மார்கரீத் மரியா ஆண்டவரை நோக்கி, "சுவாமி! நான் என்ன செய்வேன்? என் இருதயம் மிகவும் பலவீனமுள்ளதாயிருக்கிறது, எனவே இயேசுவே என் இருதயத்தை உமது திருஇருதய காயத்துக்குள் எப்போதும் வைத்தருளு"மென்று வேண்டினார்.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

# 2-ம் தேதி



## திருஇருதயப் பக்தி எதில் அடங்கியிருக்கிறது.

இயேசுவின் திருஇருதயத்தை அன்பு செய்து பக்தி செய்ய அனைவருக்கும் விருப்பம். ஆனால் பக்தியில் தவறான எண்ணங்கள் உண்டு. "இயேசுவின் திருஇருதயமே! உம்மை அன்பு செய்கிறேன்" என்று அடிக்கடி சொல்லுவதிலும், நீண்ட செபங்கள் சொல்வதிலும், பாடல்கள் பாடுவதிலும், திருஇருதயப் பீடங்களில் மலர்களை வைத்து தீபங்களை ஏற்றுவதிலும் அடங்கியுள்ளது என சிலர் நினைக்கிறார்கள். இவையெல்லாம் (நல்ல காரியங்கள் எனினும் இவை) திருஇருதய பக்தியின் வெளி அடையாளங்கள் மட்டுமே ஆகும்.

*"நீங்கள் என்மீது அன்பு கொண்டிருந்தால்*
*என் கட்டளைகளைக் கடைப் பிடிப்பீர்கள்." (யோ 14 :15)*

*"என் கட்டளைகளை ஏற்றுக் கடைப்பிடிப்பவர் என்மீது அன்பு கொண்டுள்ளார். என்மீது அன்பு கொள்பவர் மீது தந்தையும் அன்பு கொள்வார். நானும் அவர்மீது அன்பு கொண்டு அவருக்கு என்னை வெளிப்படுத்துவேன்." (யோ 14 :21)* என்றும் கூறுகிறார் இயேசு. உண்மையான அன்பு வார்த்தையில் மட்டுமல்ல, செயல்களிலும்தான் முக்கியமானதாய் விளங்குகிறது என்று அனைவரும் அறிந்துகொள்வர்.

என் தந்தையை வெகுவாய் அன்பு செய்கிறேனென்று சொல்லுகிற மகன், தந்தையுடைய கட்டளைகளைப் பரிகசித்து, அவருக்குக் கீழ்ப்படியாமல் தன் நடத்தையால் அவருடைய இதயத்தை வேதனைப்பட செய்வானேயாகில், அவன் தன் தந்தையை உண்மையாகவே அன்புசெய்கிறானென்று சொல்லலாமா?

இயேசுவின் திருஇருதயத்தை அன்பு செய்கிறாயா இல்லையா என அறியவேண்டுமா? இதோ,

மனது பொருந்தி எந்தப் பாவத்தையும் கட்டிக்கொள்ளாதபடி எச்சரிக்கையாயிருக்கிறாயா? தேவனுடையக் கட்டளைகளையும் திருச்சபைக் கட்டளைகளையும் கடைப்பிடிக்கிறாயா? குருக்களுக்கு

மரியாதை செய்து கீழ்ப்படிகிறாயா? திருஇருதயத்துக்கு வணக்கமாக தனியாக முயற்சி செய்து உன்தீய விருப்பங்களின்மேல் வெற்றி கொண்டு, சில குறைந்த நிந்தைகளையாகிலும் பொறுமையோடு ஏற்றுக் கொண்டு சகலருக்கும் பிறரன்பைக் காட்டுகிறாயா? செபம், புத்திமதி மற்றும் உன் நன்மாதிரிகையால் ஆத்துமாக்களை மீட்க முயற்சி செய்கிறாயா? இவைபோன்ற முயற்சிகள்தான் இயேசுவின் திருஇருதயத்தை நாம் அன்பு செய்கிறோம் என்பதற்கு அடையாளம். வார்த்தைகளால் மட்டுமல்ல; செயல்களாலும், ஒறுத்தல் முயற்சிகளாலும் விளங்குகிற அன்புதான் இயேசுவின் திருஇருதயத்தின் உண்மையான அன்பு ஆகும்.

இயேசுக்கிறிஸ்து நமக்காக இவ்வுலகத்தில் வந்து பாடுபட்டு நமது அன்பிற்காக தமது 33 வருடங்களும் நிந்தை அவமானங்கள் அனுபவித்து சிலுவையில் வருந்தி பாடுபட்டு தமது இரத்தமெல்லாம் சிந்தி உயிரைக் கொடுத்தார். உலகம் முடியும் மட்டும் நம்மோடுகூட இருக்கவும், நமது ஆன்மாவிற்கு உணவாகவும் நற்கருணையை உண்டாக்கினார்.

இயேசு நமது மட்டில் காண்பித்த இந்த அன்பை உணர்ந்துதான் புனிதர்கள் நமது ஆண்டவரைப் பின்பற்றினார்கள். ஸ்மர்னா நகரத்து ஆயராகிய புனித இஞ்ஞாசியாரை மதத்திற்காக உயிரைவிட உரோமா புரிக்குக் கூட்டிக் கொண்டுபோகும் போது அவர் தமது கிறிஸ்தவர் களுக்கு எழுதியது: "நான் கிறிஸ்துவுக்காக என் உயிரை விடப் போவதை உங்களுக்கு அறிவிக்க நான் மிகுந்த பாக்கியம் பெற்றவன், என்னை சுட்டெரிக்கலாம், சிலுவையில் அறையலாம் அல்லது விலங்குகளுக்கு இரையாக்கலாம் பரவாயில்லை. இவைகளையெல்லாம் ஆண்டவருக்காக மிக சந்தோஷமாய் அனுபவிப்பேன். இவை என்னை, என் உயிரும் அன்புமாகிய கிறிஸ்துவிடம்" கொண்டு சேர்க்கும்.

இதுவே திருத்தூதர்களிடத்திலும், வேதசாட்சிகளிடத்திலும், புனிதர்களிடத்திலும் விளங்கிய உன்னதமான பற்றுதல். இப்போதுகூட எத்தனையோ மத போதகர்கள், தங்கள் தாய் தந்தையர், சுற்றத்தார், நண்பர்கள், சொந்தநாடு முதலானவைகளை விட்டு மிகத் தொலைவான வேறு நாடுகளுக்குச் சென்று கிறிஸ்தவர்களை மீட்கவும், பிற மதத்தினருக்குப் போதிக்கவும் வருந்தி உழைத்து, தங்கள் வாழ்நாட்களை செலவழிக்கிறார்கள். இதற்குக் காரணம், இயேசுவின் அன்புக்கும் அவருடைய திரு இரத்தத்தால் மீட்டு இரட்சிக்கப்பட்ட ஆத்துமாக்களின் அன்புக்குமேயன்றி வேறல்ல.

கிறிஸ்தவ நாடுகளிலுள்ள மருத்துவமனைகளைப் பாருங்கள். அங்கே தங்கள் சொத்து, சுகம், விருப்பங்கள் அனைத்தையும்

கடவுளுக்காக வெறுத்து ஒதுக்கிவிட்ட கன்னியர்கள், துறவியர்கள் தாங்கள் ஒருபோதும் கண்டிராத நோயாளிகளுக்கு அக்கரையுடன் பணிவிடை செய்து வருவதைக் காண்பீர்கள். இச்செயலைச் செய்ய தூண்டுவது இயேசுகிறிஸ்துவின் அன்பு மட்டுமே. இன்னும் புண்ணியவான்களாகிய சில கிறிஸ்தவர்கள், தங்கள் நன்மாதிரிகையாலும், தாராள குணத்தினாலும், மற்ற கிறிஸ்தவர்களுக்கு முன்னுதாரணமாக நடக்கவும், தங்கள் சகோதரருடைய முன்னேற்றத்துக்காக உழைத்து துன்பப்பட வேண்டிய பிரமாணிக்கத்தையும், தளராத ஊக்கத்தையும் அவர்கள் இதயத்தில் தூண்டி வளர்ப்பது இயேசுவின் பேரில் அவர்கள் வைத்த அன்பே. எடுத்துக்காட்டாக அன்னைத் தெரசாவின் தீவிர செயல்கள்.

நமது ஆண்டவரை உண்மையாகவே அன்பு செய்கிறோமென்று காட்ட நாம் இப்போது என்ன செய்கிறோம்? இனி என்ன செய்யப்போகிறோம்? இரண்டாம் முறையாக இயேசு அவரிடம் *"யோவானின் மகன் சீமோனே நீ என் மீது அன்பு செலுத்துகிறாயா? என்று கேட்டார். அவர் இயேசுவிடம், ஆம் ஆண்டவரே, எனக்கு உம்மிடம் அன்பு உண்டு என உமக்குத் தெரியுமே! என்றார். இயேசு அவரிடம், என் ஆடுகளை மேய் என்றார்" (யோ 21 :16)*. பேதுருவிடம், *"சீமோனே நீ என்மீது அன்பு செலுத்துகிறாயா என்று கேட்டதுபோல் நம்மிடமும் கேட்டால் நாமும் சீமோன் பேதுருவைப்போல ஆண்டவரே உமக்கு எல்லாம் தெரியுமே! எனக்கு உம்மீது அன்பு உண்டு என்பது நீர் அறியாத ஒன்றா" (யோ 21 :17)*

என்று பதில் சொல்லுவோமா? பேதுருவைப் போன்று நாமும் இயேசுவின் திருஇருதயத்திற்கு நமது அன்பைக் காண்பிக்க வேண்டுமானால் நம்முடைய வாழ்வு உண்மையான கிறிஸ்தவனுக்குரிய உத்தம வாழ்வாகவும், இயேசுவின் திருஇருதயத்திற்கு விருப்பமான வாழ்வாகவும் இருக்கவேண்டும். இவ்வுலக தீயநாட்டங்களை விலக்கித்தள்ள வேண்டும். கிறிஸ்தவ கடமைகளை நிறைவேற்றுவதிலும், இயேசுவின் திருஇருதயத்திற்கு உகந்த புண்ணியங்களாகிய தாழ்ச்சி, பிறரன்பை கடைப்பிடிப்பதிலும் முழுக் கவனம் செலுத்த வேண்டும்.

நமது இருதயத்தில் திருஇருதய அன்பும், பாவ நாட்டமும் ஒன்றாகக் குடியிருக்க முடியாதென்பதை மறந்துப் போகக் கூடாது. நமது விருப்பு வெறுப்புகளை இயேசுவின் திருஇருதய அன்பிற்காக வெறுத்து வெற்றி கொண்டு புனிதர்களைப் போல் திருஇருதயத்தோடு என்றும் நிலைத்திருக்க தீர்மானிப்போம்.

புனித மார்கரீத் மரியா சொல்வதைக் கேளுங்கள் : நமது இதயம் எவ்வளவு சிறிதாக இருக்கிறதென்றால் அதில் இரண்டு அன்பு இருக்க இடமில்லை. தேவனுடைய அன்புக்காக மட்டும் நமது இதயம் படைக்கப்பட்டிருப்பதால் அந்த இதயத்தில் வேறு அன்பும் நுழைவதால் அதற்கு சமாதானமே கிடையாது.

**வரலாறு**

மதுரை மிஷன் மத போதகர்களின் நிருபங்களில் பின்வரும் வரலாற்றைக் காணலாம்.

ஒரு கிராமத்தினருகில் உள்ள காட்டில் வாழ்ந்த ஒரு கொடிய புலி கடவுள் நம்பிக்கையற்ற பலரை அடித்துக் கொன்றுவிட்டது. ஒருநாள் ஒரு கிறிஸ்தவன் காட்டில் மரம் வெட்டிக் கொண்டிருந்தான். அவனைக் கண்ட புலியானது அவன் மீது பாய்ந்தது. கிறிஸ்தவன் மிகவும் பயந்து நடுங்கி, இயேசுவின் திருஇருதயமே என்று அலறினான். கொடிய புலி அவனை ஒரே தூக்காய்த் தூக்கி தன் குகைக்குக் கொண்டுச் செல்கையில் புலியிடம் மாட்டிய கிறிஸ்தவன் முன்னிலும் அதிக சத்தத்தோடு, “இயேசுவின் திருஇதயமே! என்னைக் காப்பாற்றும்” என்று திரும்பத் திரும்பக் கத்தினான். இரக்கம் நிறைந்த இயேசுவின் திரு இருதயம் அவன் அழுகைக் குரலைக் கேட்டு மனமிரங்கியது. தீடீரென அப்புலி மனமாற்றமடைந்து மனிதனை அப்படியேப் போட்டுவிட்டு காட்டுக்குள் ஓடி மறைந்தது. புலியிடமிருந்து தப்பிய கிறிஸ்தவன் இயேசுவின் திருஇருதயத்திற்கு நன்றி கூறினான். இந்நிகழ்ச்சியை தன் பங்கு குருவிடம் கூறினான். இருவரும் இரக்கமும் அன்பும் நிறைந்த இயேசுவின் திருஇருதயத்திற்கு நன்றி கூறி புகழ்ந்தனர்.

நாம் சோதனைகளால் துன்புறும்போது இயேசுவின் திருஇருதயத்தை துணைக்கு அழைப்போமாக! தீய ஆவியின் தொல்லைகளிலிருந்து விடுதலைபெற இயேசுவின் திருஇருதயத்தை நோக்கி மன்றாடுவோமாக!

இப்படி செய்யும்போது இயேசு நம்மை சகல தீங்குகளிலிருந்துக் காப்பாற்றி அவருடைய தூய அன்பில் நம்மை வைத்து ஆதரித்து நித்திய வான்வீட்டிற்கு அழைத்துச் செல்வார்.

செபம் :

**இயேசுவின் மதுரமான திரு இருதயமே, என் சிநேகமாயிரும்.**

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

# 3-ம் தேதி ****************************



## இயேசுவின் திருஇருதயப் பக்தியால் விளையும் பயன்கள்

இயேசுவின் திருஇருதயப் பக்தியை கிறிஸ்தவர்கள் எல்லா இடங்களிலும் எவ்வளவு விடா முயற்சியோடும் நம்பிக்கையோடும் பின்பற்றி செபிக்கிறார்கள் என்பதை நாம் பார்க்கும்போது நாம் மகிழ்ச்சியடைகிறோம். மாதத்தின் முதல் வெள்ளிக்கிழமையைத் திருச்சபையின் முக்கியமான திருநாட்களில் ஒன்றாகப்பாவித்து பல பங்குகளில் மிக பக்தி ஆடம்பரத்தோடு கொண்டாடுகிறார்கள். முதல் வெள்ளிக்கிழமைகளில் பல கிறிஸ்தவர்கள் நற்கருணை பெற்றுக் கொள்கிறார்கள். சிலர் இதற்காக மிகத் தொலைவிலிருந்து வர வேண்டியதிருந்தாலும் தங்கள் முயற்சியை இயேசுவின் திருஇருதய அன்புக்காக சந்தோஷமாய் ஒப்புக்கொடுக்கிறார்கள். இந்த உன்னத பக்தி முயற்சிகளையும் இவ்வளவு அன்பு ஈடுபாட்டையும் பார்க்கும்போது இயேசுவின் திருஇருதயம் எவ்வளவோ ஆறுதலடைகிறது!

இயேசுவின் திருஇருதயப் பக்தியால் ஏற்படும் அபரிமிதமான பலன்களைப்பற்றி நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. ஏனென்றால் மதப் போதகர்கள் மற்றும் விசுவாசிகளுடைய ஆத்ம மீட்புக்கு திருஇருதயப் பக்தி மிகவும் உபயோகமாக இருக்கும் என்று புனித மார்கரீத் மரியாவுக்கு ஆண்டவர் தாமே காட்சியில் அறிவித்துள்ளார்.

**துறவற சபைகள் :**

இயேசுவின் திருஇருதயப் பக்தியை அதிகரிக்கச் செய்ய இயேசு சபைக்குருவான அருட்திரு. குருவாசே ஆவலாயிருந்தார். அவருக்கு புனித மார்கரீத் மரியா பின்வருமாறு எழுதினார். தூய இருதயத்திற்கு தங்களை முழுவதும் ஒப்புக்கொடுத்து தங்களாலான ஆராதனை வணக்கமும், அன்பும் காட்டுகிறதைவிட, புண்ணிய பாதைக்கு அதிக உறுதியான வழிவேறில்லை. எந்த மடங்களில் திருஇருதயத்துக்கு சிறப்புமிக்க ஆராதனை நடந்து வருகிறதோ, அங்கே பிறரன்பு; சகோதர ஒன்றிப்பு ஆகியவை திருஇருதயத்தின் பராமரிப்பில் உண்டாகும்.

இயேசுவின் திருஇருதயமானது அளவிடமுடியாத தேவ வரப்பிரசாதங்களும், ஆசீர்வாதங்களும் நிறைந்த ஞானக் களஞ்சியம், ஆசீர்வாதங்களும் நிறைந்த ஞானக் களஞ்சியம். இந்த திருஇருதயப்

பக்தியைப்போல் மிக விரைவில் மிக மேலான புண்ணிய செயல்களுக்கு ஆத்துமாவை அழைத்துக் கொண்டு போகக்கூடிய பக்தி முயற்சி வேறெதுவுமில்லை.

விசேஷமாய் துறவற வார்த்தைப்பாடு கொடுத்தவர்கள் இந்தப்பக்தியை அனுசரிக்கும்படி தூண்டுங்கள். இந்தப் பக்தியால் அவர்கள் எவ்வளவு பலன் அடைகிறார்களென்றால், தளர்ந்து போன பழைய ஞான சுறுசுறுப்பைத் திரும்பப் புதுப்பிக்கவும், ஒழுங்கில் அசட்டைத்தனமாய்வாழ்ந்த மடங்களில் ஒழுங்கை நன்றாய் கடைப்பிடிக்கச் செய்யவும், ஏற்கெனவே சபை ஒழுங்கைச் சரியாய் அனுசரிப்பவர்களை மோட்சத்தின் முடியில் கொண்டுபோய்ச் சேர்க்கவும் இப்பக்தி ஒன்றே போதுமானது.

**குருக்கள் :**

புனித மார்கரீத் மரியா சொல்லுகிறதாவது : "கல்லான இதயத்தை இளகச் செய்யும் வரத்தை ஆத்ம மீட்புக்காக உழைக்கிற வேத போதகர்களுக்கு அளித்தருளுவோமென்று மீட்பர் எனக்குத் தெரிவித்திருக்கிறார். திருஇருதயத்தின் பேரில் அவர்களுக்கு உருக்கமான பற்று இருந்தால் ஆச்சரியப்படத்தக்க வகையில் உழைப்பார்கள். அவர்கள் வாயிலிருந்து புறப்படுகிற வார்த்தைகளுக்கு திருஇருதயமானது தமது அன்புச்சுடரால் மிகவும் கடினமான இருதயங்களை இளக்கி, ஊடுருவி, தேவ அன்பினால் பற்றி எரியச் செய்யும் சக்தி அவ்வார்த்தைகளுக்கு உண்டாகும். இவ்வகையாய் மிகவும் அக்கிரமம் நிறைந்த ஆத்துமங்கள் மீட்பு விளைவிக்கும் ஒப்புரவு வழிக்கு வந்து சேருவார்கள்."

**பொதுநிலையினர் :**

புனித மார்கரீத் மரியா பொதுநிலையினரைப் பற்றி பின்வருமாறு எழுதுகிறார் :

அவர்கள் தங்கள் தகுதிக்கேற்ப அவசியமான எல்லா உதவிகளையும் இந்த இன்பந்தரும் திருஇருதயப் பக்தியால் கண்டடைவார்கள். தங்கள் குடும்பத்தில் சமாதானமும், தங்கள் அலுவல்களில் ஆசீர்வாதமும் இப்பக்தியால் உண்டாகும். தங்கள் வாழ்நாளிலும் முக்கியமாய் மரண வேளையிலும் இத் திருஇருதயம் அடைக்கலமாயிருக்கும்.

"திருஇருதயத்தை மற்றவர்களும் அறிந்து ஆராதிக்க வேண்டுமென்று ஆசை கொண்டிருந்த பலருடைய பெயரைத் தமது இருதயத்தில் என்றும் அழியாத விதமாய் எழுதியிருந்ததை நான் பார்க்கும்படிச் செய்தார்.

ஆதலால் இயேசுவின் திருஇருதயப் பக்தியானது இவ்வுலக வாழ்க்கையில் ஆசீர் பொழியும் ஊற்றாகவும், மறுமையில் நித்திய மகிமைக்கு தொடக்கமாகவும் இருக்கிறதாக மேற்சொன்ன வாக்குத்தத்தங்களால் அறிந்து கொள்ளலாம். மற்றெந்த பக்தியையும் விட இந்தப் பக்தியானது இயேசுவின் அன்பிற்காக நமது தீயகுணங்களில் வெற்றி கொள்ளவும், புனித தன்மைக்கு அவசியமானப் புண்ணியங்களைத் தேட தாராளகுணத்தோடு நாம் உழைக்கவும் நம்மைத் தூண்டி ஏவுகிறது. இயேசுவின் திருஇருதயத்திற்கு ஏற்றப் புண்ணியங்களை நாம் பின்பற்றும்படி நமது இருதயத்தைத் தூண்டி ஏவும்போது படைக்கப்பட்ட பொருட்களிலிருந்து நமது இருதயப் பற்றுதல்களை ஒறுக்கவும், கடவுளுடைய அளவற்ற அன்பையும், பரிசுத்ததனத்தையும் மாசுபடுத்தக்கூடிய எந்தத் துர்க்குணத்திலிருந்தும் நம்மைக் காப்பாற்றவும் உதவியாயிருக்கிறது. வருகிற சகல துன்பங்களையும் தாராள குணத்தோடு ஏற்றுக் கொண்டு, ஒறுத்தல் முயற்சி செய்து, நமது இருதயத்தை இயேசுவின் திருஇருதயத்துக்கு ஒத்தாகக்கூடிய சகல புண்ணியங்களையும் செய்ய இந்த பக்தி மிகவும் ஏதுவாயிருக்கிறது.

**வரலாறு :**

மறவன் தேசத்தில் வேதம் போதித்துக்கொண்டிருந்த ஓர் போதகரிடம் ஒருநாள் ஒரு எளிய பெண் வந்து வணக்கம் சொன்னாள். அவளிடமிருந்த புத்திசாலித்தனத்தையும், பக்தியையும் கண்டு குருவானவர் மகளே, உனது ஊர் எது எனக் கேட்க, அந்தப் பெண், "நான் எந்த நேரம் எங்கே இருக்கிறேனோ அதுதான் என் ஊர். என்தாய் தகப்பன் இறந்து விட்டனர். என் வாழ்க்கைக்கு எது கிடைத்ததோ அதைக் கொண்டு உயிர் வாழ்ந்து வருகிறேன்" என்றாள். அதற்கு குருவானவர், நீ என்ன வேலை செய்கிறாய்? என்று கேட்டார். அதற்கு அவள் "நான் நாள்தோறும் விறகு பொறுக்கி, சந்தையில் கொண்டு போய் விற்றுக் கொண்டு வருகிறேன்" என்றாள். இதில் உனக்கு வருமானம் உண்டா? என குருவானவர் கேட்க, சில சமயத்தில் 50 பைசா இலாபம் கிடைக்கும்; மற்ற நாட்களில் ஒன்றும் கிடைக்காது என அவள் பதிலளித்தாள். அப்படியானால் நீ சாப்பிடுகிறது எப்படி? என குருவானவர் வினவ, "சாப்பாடு இல்லாத நாட்களில் ஒருசந்தி இருந்து இயேசுவின் திருஇருதய அன்புக்காகவும், கிறிஸ்தவரல்லாதவர் மனந்திரும்புவதற்காகவும் ஒப்புக் கொடுக்கிறேன்" என்றாள். இப்பதிலைக் கேட்ட குருவானவரின் இதயம் இரக்கத்தால் துடிக்க உடனே தன் பையிலிருந்து ஒரு ரூபாய் கொடுத்தார். இந்த ரூபாயைக் கண்டதும் ஏதோ புதையலைக் கண்டதுபோல் அவளுடைய இதயம் மகிழ்ச்சியடைந்தது. தந்தையே என் கணவர் இறந்து மூன்று

வருடமாகிறது. எனக்கு எப்போது ஒரு ரூபாய் கிடைக்கும்; அவரது ஆன்ம இளைப்பாற்றிக்கு திருப்பலி நிறைவேற்றக் கொடுக்கலாம் என எதிர்பார்த்தேன். எனவே, தயவு செய்து இந்த ரூபாயை வாங்கிக் கொண்டு திருப்பலி நிறைவேற்றுங்கள். நான் இயேசுவின் திருஇருதயத்திற்கு தபசு, ஒருசந்திக் கடைப்பிடித்து வருவேன் என்றாள். இதைக் கேட்டு குருவானவர் மகளே, இந்த ரூபாயை உன் உணவிற்காக வைத்துக்கொள்; நான் நாளைக்கு உன் கருத்துக்காக திருப்பலி செய்து ஒப்புக்கொடுப்போம் என்றார்.

இயேசுவின் திருஇருதயப் பக்தர்களுக்கெல்லாம் இந்த ஏழைப்பெண் முன்மாதிரியாய் இருக்கிறாள். திருஇருதயத்திற்கு அன்புச் செய்கிறேனென்று காட்டுவதற்கு நாமும் சில ஒறுத்தல் முயற்சிகள் செய்து ஒப்புக்கொடுக்க வேண்டும்.

இயேசுவின் திருஇருதயப் பக்தியானது நம்முடைய சகோதரர்களுடைய ஆத்ம மீட்புக்காக நம்மைத் தூண்டுவதோடு இம்மையிலும் மறுமையிலும் திருஇருதயத்தினோடு அன்பில் ஒன்றித்திருக்கவும் செய்யும்.

**செயல் :**

நமது இதயத்திலும், பிறரது இதயத்திலும் இயேசுவின் திரு இருதயம் எப்போதும் வாழ நம்மாலான முயற்சி எடுத்துக் கொள்வோமாக. இரவு படுக்கைக்குப் போகுமுன் அத்திருஇருதயம் அன்று நமக்கு செய்தருளிய சகல உபகார சகாயங்களுக்கும் நன்றியறிந்த புகழ் செலுத்திய பிறகு நாம் நமது சிந்தனை, வாக்கு, செயல்களால் கட்டிக்கொண்ட சகல பாவங்களையும் நினைத்து வருத்தப்பட்டு பிரதிக்கினை செய்து அத்திருஇருதயம் அவைகளை சுத்தப்படுத்தும்படியாக உருகி மன்றாடுவோமாக!

செபம் :

**இயேசுவின் திருஇருதயமே என் நம்பிக்கையெல்லாம் உமது பெயரில் வைக்கிறேன்.**

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 4-ம் தேதி ************************



### இயேசுவின் திருஇருதயமும், பரிசுத்த தேவ நற்கருணையும்

இயேசுகிறிஸ்து திருஇருதய அன்பினால் ஏவப்பட்டு நமது ஆத்துமங்களுக்கு உணவாகவும், உயிராகவும் மீட்பாகவும் இருக்கும்படி நம்மோடுகூட தூய தேவநற்கருணையில் வீற்றிருக்க ஆவல் கொண்டார். நமது மீட்பருடைய தூய உடலை நாம் இந்த நற்கருணையில் ஆராதித்து அன்பு செய்கிறோம். இயேசுவின் திருஇருதயநாதர் தமது அன்பின் உயிருள்ள பலியான தேவ நற்கருணையில் மெய்யாகவே நிறைந்து இருக்கிறார்.

தேவ நற்கருணைக்கும் தமது திருஇருதயத்திற்குமுள்ள ஒற்றுமையை நமக்கு காட்டும் பொருட்டு புனித மார்கரீத் மரியா தேவ நற்கருணைக்கு முன்பாக ஆராதனை செய்துகொண்டிருக்கும் நேரத்தில் திருஇருதயமானது மூன்று முக்கியமான காட்சிகளைக் கொடுக்க விரும்பியது. தேவ நற்கருணைத் திருவிழாவின் எட்டாம் நாளைத் தெரிந்து கொண்டு அன்பில் நிறைந்த திருஇருதயம் புனித மார்கரீத் மரியாவை நோக்கி, மனிதர்களை முழுமையாய் அன்பு செய்த இந்த இதயத்தை இதோபார் என்று காண்பித்து கூறியதாவது -

மகளே, உனக்கு எத்தனை தடவை நற்கருணைப் பெற்றுக் கொள்ள அனுமதி கிடைக்கிறதோ, அத்தனை தடவையும் நற்கருணைப் பெற்றுக்கொள். விசேஷமாய் மாதத்தின் முதல் வெள்ளிக்கிழமைகளில் நற்கருணைப் பெற்றுக்கொள். வருடாவருடம் மிகுந்த ஆடம்பரத்தோடு நமது திருஇருதயத் திருவிழாவைச் சிறப்பித்து அன்று பரிகார நற்கருணை பெற்று ஒப்புக்கொடு.

நல்ல கிறிஸ்தவர்களையும், பக்தியுள்ள ஆன்மாக்களையும் ஏமாற்றும் பொருட்டு, தூய தேவநற்கருணைக்கு மிகுந்த வெளி மரியாதையைக் காண்பித்து அதற்குப் புகழ்ச்சியாக இனிமையான பாடல்களையும், செபங்களையும் ஏற்படுத்து. ஒரு பக்கத்தில் கடவுளுடைய மகிமைக்கும் அவருடைய பரிசுத்ததனத்தையும், நீதியையும் எடுத்துக்காட்டி வேறோர் பக்கத்தில் மனிதர்கள் இந்த தூய தேவனை அண்டிப் போகாமல் துர்ப்பாக்கியசாலிகளாக இருக்கிறார்களென்பதை ஞாபகப்படுத்தி, தேவ நற்கருணையை விட்டு ஆத்துமாக்களைப் பிரித்து வந்தார்கள். தேவ

நற்கருணை நம்முடைய அன்றாட உணவாகவும், நமது ஆத்துமத்தின் உயிராகவும் இருந்து நமது இருதயத்தை தூய்மைப்படுத்தி தேவ வரப்பிரசாதங்களினால் அதை அலங்கரித்து, தமது திருஇருதயத்தில் எரிகிற தேவ சினேக அன்பு சுடரால் நிரப்புவதற்காகவே இயேசுகிறிஸ்து இந்த அருட்சாதனத்தை உருவாக்கினார். ஆதலால் தேவ நற்கருணை பெறுவோர் எண்ணிக்கை நாளுக்குநாள் சுறுசுறுப்பு, தேவ அன்பு திருஇருதயப் பக்தியை தூய மார்கரீத் மரியாவுக்கும் உலகத்துக்கும் வெளியிட்டு மனிதர்களுடைய இதயங்களில் தேவ அன்பில் பற்றுக் கொள்ளச் செய்தார். திருஇருதயப் பக்தியானது எந்தெந்தப் பங்குகளில் விளங்கி வருகிறதோ அந்தப் பங்குகளிலெல்லாம், முன் தேவ நற்கருணை பால் அக்கறைக் கொள்ளாத பல கிறிஸ்தவர்கள் அடிக்கடி இன்னும் நாள்தோறும் தேவ நற்கருணை பெற்று வருகிறார்கள். இது தவிர, பல இடங்களில் மாதத்தின் முதல் வெள்ளியானது சகலமும் பரிகாரமாகப் பொதுநன்மை பெற்றுக் கொள்ளும் நாளாக அனுசரிக்கப்பட்டு வருகிறது.

புனித திருத்தந்தையரின் விருப்பப்படி தினமும் அல்லது அடிக்கடி உட்கொள்ளுகிற இந்த தேவ நற்கருணையிலிருந்து அடையக்கூடிய பலன்களையெல்லாம் பல கிறிஸ்தவர்கள் உயிருள்ள விசுவாசமில்லாமலும், தக்க ஆயத்தம் இல்லாமலும் இந்த அருட்சாதனத்தை உட்கொள்ளுகிறார்கள். சிலருக்கு நற்கருணை உட்கொள்ளுவது வழக்கம். வேறு சிலருக்கு தேவ நற்கருணை உட்கொள்ளுவது ஒரு சடங்கு. நற்கருணை வாங்கியபிறகு பலர் சரியான நன்றி செலுத்துவதில்லை. இயேசுவின் திருஇருதயத்திற்குத் தங்களைத் திரும்பவும் ஒப்புக் கொடுக்கிறதில்லை.

மேற்கூறிய கிறிஸ்தவர்களைப் போல் நாமும் நடக்கக் கூடாது. தக்க ஆயத்தத்தோடும் உயிருள்ள விசுவாசத்தோடும் முன்மாதிரியோடும் தேவ நற்கருணையை நாடிச் செல்ல வேண்டும்.

**வரலாறு**

சில வருடங்களுக்கு முன் சிரியா நாட்டிலுள்ள ஒரு கிராமத்தில் வாந்திபேதி நோய் பரவியது. அங்கு பெரும்பாலோர் கிறிஸ்தவர்கள், மீதிபேர் முகமதியர்கள். பங்கு பணியாளர்களும் கிறிஸ்தவர்களும் பொது செபம் செய்து ஆண்டவர் தங்கள் மேல் இரங்கி இந்தக் கொடிய நோயிலிருந்து தங்களைக் காப்பாற்றும்படியாகத் தங்கள் கிராமத்தின் தெருக்கள் வழியாகத் தேவ நற்கருணையைப் பவனியாகக் கொண்டுச் சென்றனர். அவர்களுடைய வேண்டுதலை ஆண்டவர் கேட்டருளினார்; அக்கிராமத்தில் அன்றே வாந்தி பேதி நின்றுவிட்டது. இத்தருணத்தில் பக்கத்து கிராமத்தைச் சேர்ந்த முகமதிய பிரபு இந்தக் கிராமத்திற்கு

வந்தார். தேவ நற்கருணை பவனியால் உண்டான அதிசயத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டார். தன் சொந்த ஊருக்கு திரும்பிப் போன போது அங்கேயும் அந்த நோய் வந்திருப்பதாகக் கேள்விப்பட்டார். உடனே இவர் குருவானவரிடம் சென்று தங்கள் கிராமத்திலும் தேவ நற்கருணைப் பவனி நடத்தும்படி கெஞ்சிக் கேட்டுக் கொண்டார். ஆனால் குருவானவரோ, எல்லா இடங்களிலும் தேவ நற்கருணை பவனி நடத்தக்கூடாது, அங்கே முகமதியர் அதிகாரத்தில் இருக்கிறார்கள். எனவே இவ்வித இடங்களில் பவனி நடத்துவது தேவ நற்கருணைக்கு அவமரியாதை செய்வது ஆகும் என்றார். உடனே முகம்மதிய பிரபு நான் அதற்கு உறுதி தருகிறேன், எந்த ஒழுக்கக் கேடும் நேராதபடி பார்த்துக் கொள்வது என் பொறுப்பு என்றார். ஆனால் குருவானவர் மீண்டும் முகமதியர்களும் கிறிஸ்தவர்களுடன் சேர்ந்து ஒழுங்காய் பவனியில் வரவேண்டியது என்றார்.

மறுநாள் அங்கு தேவநற்கருணை பவனி சிறப்புடன் நடந்தது. வாந்தி பேதி நோய் முற்றிலும் நீங்கியது. இச்செய்தி நாடு முழுவதும் பாவி தேவநற்கருணையில் வீற்றிருக்கும் இயேசுவின் திரு இருதயத்துக்கு மகிமையும், வணக்கத்தையும் கொடுத்தது.

இதைக் கேட்கிறவர்களே, நீங்களும் தேவ நற்கருணையில் உண்மையாகவே வீற்றிருக்கும் இயேசுவின் திருஇருதயத்தை அதிகமாய் மகிமைப்படுத்தி உங்கள் முழு இருதயத்தோடு அன்பு செய்யுங்கள். அடிக்கடி ஆண்டவரை உட்கொள்ளுங்கள். இயேசுவின் திருஇருதயப் பக்தியும், தேவ நற்கருணைப் பக்தியும் இவ்விரண்டும் நாம் இயேசுவோடு மிக நெருக்கமாவதற்கு உத்தமமான வழியாகும். நீங்களும் இயேசுவின் திருஇருதயத்திற்கு மனிதர்கள் காண்பிக்கிற அசட்டைத்தனம், நன்றியறியாமை இவைகளுக்குப் பரிகாரமாக தேவ நற்கருணையை அடிக்கடி உட்கொண்டு முடிந்தவரையில் அவரை சந்தித்து ஆராதிக்க முயற்சிப்பீர்களாக!

**செயல்**

உன் இதயமானது ஆண்டவர் குடியிருக்கும் ஆலயமென்று எப்போதும் நினைத்து அதை எந்த ஒரு சிறிய மாசும் இல்லாமல் காப்பாற்றுவாயாக.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 5-ம் தேதி ****************************



## இயேசுவின் திருஇருதயமானது நம் பாவத்தை வெறுத்து விலக்கப் படிப்பிக்கும் ஆசிரியர்

இயேசுவின் திருஇருதயமானது, தமது தேவ பிதாவின் பேரிலும் நமது ஆத்துமங்களின் பேரிலும் அளவு கடந்த அன்பு வைத்திருக்கிறதும் தவிர பாவமானது கடவுளுக்கு அளவில்லாத நிந்தையையும், ஆத்துமங்களுக்கு நித்திய நாசத்தையும் வருவிக்கிறபடியால், அதையும் மட்டற்ற விதமாய்ப் பகைக்கிறது. பாவத்தின் மேல் வெறுப்பு இருந்தாலொழிய அன்பு இருக்கவே முடியாது. பாவமானது உலகத்திலுள்ள சகல தீங்குகளிலும் பெரிய தீங்கு.

சாவான பாவத்தைக் கட்டிக் கொள்ளுகிறவர்கள், தங்கள் ஆத்துமத்தை தீய ஆவிக்கு விற்கும் பொருட்டு அதற்கு அடிமைகளாகிறார்கள் என்கிறார் புனித அகுஸ்தீன். *"பாவமும் அநீதியும் புரிவோர் தங்களுக்குத் தாங்களே கொடிய எதிரிகள்" (தோபி 12 : 10)* என்று பாவத்தை விலக்கி நடக்கும்படி தொபியாசுக்கு வானதூதர் இரபேல் அறிவுரைக் கூறியுள்ளார்.

இயேசு நமது பாவங்களுக்கு பரிகாரமாகவும், நமது ஆத்துமங்களை மீட்கவும் நமது பாவங்களைத் தன்மேல் சுமந்து பயங்கரமான தண்டனைகளுக்குத் தம்மை முழுதும் பலியாக ஒப்புக் கொடுத்தார்.

இயேசுவின் திருஇருதயத்தை அன்பு செய்ய வேண்டுமானால், நீ முன் செய்த பாவங்களுக்குப் பரிகாரம் செய்வதோடு, இனி மனது பொருந்தி யாதொரு பாவத்தையும் செய்யாமல் விலகி நட. சில தீய கிறிஸ்தவர்கள் தங்கள் உடலுக்கு வரும் நோயை விலக்க மிகக் கவலையோடு தங்கள் ஆத்துமா முழுவதையும் கவனியாமல் விட்டுவிடுவார்கள். இவர்களைப் போல் நீங்கள் நடக்க வேண்டாம். நோய் வந்தால் மருத்துவரைக் கூப்பிட்டு கசப்பான மருந்தையும் உண்டு மிகுந்த வேதனைக்குரிய சிகிச்சை செய்து கொள்ள சம்மதிக்கிறவர்கள், உடல் சுகத்தைவிட விலையுயர்ந்த ஆத்தும பலத்துக்கான சிறிய வருத்தங்களையும், தியாகத்தையும் ஏற்று கொள்ளமாட்டார்கள்.

**வரலாறு**

ஒரு கிராமத்தில் எல்லோரும் நல்ல கிறிஸ்தவர்களாய் வாழ்ந்து வந்தனர். தன் விருப்பு வெறுப்புகளுக்கு இடம் கொடுத்து மிகவும் மோசமாக நடந்து வந்த தீய கிறிஸ்தவன் ஒருவனை அவனது நண்பர்கள் புத்திச் சொல்லி நல்வழிப்படுத்த முயற்சித்தனர். ஆனால் அவன் அவர்களைக் கேலி செய்தான். நான் முட்டாள் அல்ல, மரணம் வருமுன் நான் ஒப்புரவுப் பெற்றுக் கொள்வேன். இப்போதும் இன்பங்களை என்மனம் போல் அனுபவித்து விட்டு, மறுமையிலும் விண்ணகம் சேருவேன் என்று நாசூக்காகப் பேசுவான். ஆனால் ஒரு நாள் இந்த தீயவன் கீழேவிழுந்து ஒரு வார்த்தையும் பேசமுடியாமல் அவலமாய் இறந்தான்.

நாம் செய்த பாவங்களை ஒப்புரவு அருட்சாதனத்தால் கழுவி தபசு செய்து அன்பு நிறைந்த என் இயேசுவின் திருஇருதயத்துக்கு இனி ஒருபோதும் வருத்தம் செய்யவேமாட்டேன் என்று நல்ல தீர்மானம் செய்வோம்.

பிரான்ஸ் நாட்டு பக்தியுள்ள அரசக்குல பெண் இளவரசனான தன் மகனுக்குச் சொன்ன அருமையான வார்த்தைகளை மற்ற பக்தியுள்ள தாய்மார்களும் தங்கள் தங்கள் பிள்ளைகளுக்குச் சொல்வார்களாக! என் மகனே, நான் உன்னை எவ்வளவு அன்பு செய்கிறேனென்பதை நீ அறிவாய்; என்றாலும் நீ ஒரு சாவான பாவத்தால் இறைவனுக்குத் துரோகம் பண்ணுகிறதை நான் பார்க்கிறதைவிட நீ சாகிறதை நான் பார்க்கிறது எனக்கு நலம் என்பாள். தன் அன்பு தாயாருடைய வாயிலிருந்து புறப்பட்ட இந்த உருக்கமான போதனையால் இந்த இளவரசன் எவ்வளவு பயன் அடைந்தாரென்றால், அவர் புனிதரானார். அவர்தான் பிரான்ஸ் நாட்டு புனித ஞானப் பிரகாசியார்.

நம்முடைய முதல் பிதா மாதாவாகிய ஆதாம் ஏவாள் இன்பத்தால் அலைக்கழிக்கப்படாத தூய அந்தஸ்தில் படைக்கப்பட்டிருந்தாலும் பாவத்தில் விழுந்தார்கள். நாம் நமது ஆத்துமாவை மீட்க வேண்டுமானால் தூய ஆவியானவர் விவிலியத்தில் கூறியுள்ளபடி நடக்கவேண்டும். *"உங்கள் வலக்கண் உங்களைப் பாவத்தில் விழச்செய்தால் அதைப் பிடுங்கி எறிந்து விடுங்கள். உங்கள் உடல் முழுவதும் நரகத்தில் எறியப்படுவதைவிட உங்கள் உறுப்புகளில் ஒன்றை நீங்கள் இழப்பதே நல்லது."* ***(மத் 5 : 29)*** ஆண்டவர் நமது உடலின் வலது கண்ணைப் பிடுங்கி எறியச்சொல்லுவது இல்லை. படைக்கப்பட்ட வஸ்து அல்லது ஒரு அன்பு உன் கண்ணைப்போல் உனக்கு அவ்வளவு அருமையாய் இருந்தாலும் அது உனக்கு பாவ சுமையாய் இருக்கும் போது அதை நீ தாராள

குணத்தோடு விட்டுவிலக வேண்டும். இரவில் எரிகிற விளக்கைச் சுற்றி, பறக்கிற விட்டில் பூச்சியைப் பார். அது நெருப்பிலே விழுந்து அதிலே சாகிறது. பாவ நேரங்களும் அப்படித்தான். அதைவிட்டு விலகாவிட்டால் கட்டாயம் பாவத்தில் விழவேண்டியதுதான்.

திருஇருதய அன்பர்களாகிய நீங்கள் பாவ சமயத்துக்கு ஒருபோதும் மனம்பொருந்தி இடம் கொடுப்பதில்லை என்றும் திரு இருதயத்துக்கு வருத்தம் தரக்கூடிய எந்த ஒரு குற்றத்தையும் செய்வதில்லை என்றும், தாராள குணத்தோடு உறுதியான தீர்மானம் செய்யுங்கள். இயேசுகிறிஸ்து தாமே புனித மார்கரீத் மரியா மூலமாய் நமக்குச் சொல்வதாவது : பிசாசு உன்னைச் சோதிக்கும் போது நமது கண்களை உடனே உயர்த்தி இயேசுவின் திருஇருதயமே, நீர் என்னுடைய பலமும் ஆதரவுமாயிரும். நான் உமக்குத் துரோகம் பண்ண விட்டுவிடாதேயும். நான் உமக்கு எப்போதும் சொந்தமாய் இருக்க விரும்புகிறேன். என்னை உம்முடைய உடமையாக வைத்துக் காப்பாற்றியருளும் என்று சொல்லவும்.

புனிதர்கள் பிறக்கும்போதே புனிதர்களாகப் பிறக்கவில்லை. நம்மைப்போல் பலவீனமுள்ள சரீரத்தோடு பிறந்தவர்கள். என்றாலும் துர்க்குணங்களோடு ஓயாமல் போராடினார்கள். ஆதலால் நீங்களும் அவர்களைப்போல் கடைசிபரியந்தம் யுத்தம் செய்யுங்கள். அவர்களைப்போல் நித்திய மகிமை முடியை சுதந்தரித்துக் கொள்வீர்கள். நீங்கள் நம்மைச் சிநேகித்தால் சகலமும் உங்களுக்கு இலகுவாயிருப்பதோடு கூட சகலமும் உங்களுக்கு கைகூடும்.

## இயேசுவின் திருஇருதயத்திற்கு தன்னை முழுதும் ஒப்புக் கொடுக்கும் செபம்

இயேசுவின் திருஇருதயமே! உமது மட்டில் எங்களுக்குள்ள அன்பைக் காண்பிக்கவும், எங்கள் பாவங்களுக்குப் பரிகாரம் பண்ணவும், எங்கள் இருதயத்தையும், எங்களை முழுமையாக உமக்கு ஒப்புக்கொடுக்கிறோம். உமது உதவியைக் கொண்டு ஒருபோதும் எந்தப் பாவத்தையும் செய்கிறதில்லை என்று பிரதிக்கினை பண்ணுகிறோம். ஆனால் எங்களுடைய பலவீனம் உமக்கு நன்றாய்த் தெரியும். உமது உதவியில்லாமல் ஒரு நன்மையும் எங்களால் செய்யமுடியாது. நீர் செய்ய வேண்டாமென்று விலக்குகிற தீமையை விலக்கி, நீ செய்யென்று கட்டளையிடுகிற நன்மைகளையும், புண்ணியங்களையும் கடைப்பிடிக்க எங்களுக்கு வேண்டிய பலத்தைக் கொடுத்தருளும்.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 6-ம் தேதி ******************************



### இயேசுவின் திருஇருதயம் புண்ணிய பரிசுத்ததன வாழ்வுக்கு மாதிரிகை
**(சாங்கோபாங்கத்துக்கு மாதிரிகை)**

இயேசுவின் திருஇருதயமானது சாங்கோபாங்கத்துக்கு ஊற்றும் மாதிரிகையுமாயிருக்கிறது. நமது ஆண்டவர் இவ்வுலகில் வாழ்ந்த முப்பத்துமூன்று ஆண்டுகாலமும் சகல புண்ணியங்களிலும் உலகத்துக்கு மாதிரிகையாயிருந்தார். எவ்வித முயற்சியும், தியாகச், சிந்தனையுமில்லாமல் இயேசுவின் திருஇருதயப் புண்ணியங்களைப் பின்பற்றி புனிதத் தன்மையடைய பல கிறிஸ்தவர்களுக்கு ஆசையுண்டு. ஆனால் இது சரியான ஆசையல்ல. ஏனென்றால் இவர்கள் சாங்கோபாங்கம் எதிலடங்கியிருக்கிறதென்று கண்டுபிடிக்க வேண்டும்.

இப்போது மோட்ச மகிமையில் தங்கள் புண்ணியங்களுக்காக நித்திய பலனை அனுபவிக்கிற கிறிஸ்தவர்கள் பிறக்கும்போதே புனிதர்களாய்ப் பிறந்தார்களா? தேவ கொடைக்குக் காதுகொடுத்து, தங்கள் விருப்பு வெறுப்புகளை வென்று, தேவ காரியங்களிலும், கிறிஸ் தவர்களுக்குரிய புண்ணியப் பயிற்சியிலும் தங்களை முழுதும் தாராளமாய்க் கையளித்ததினாலல்லவா பரிசுத்ததனத்தை அடைந்தார்கள்.

நாமும் எவ்விதத்திலும் உத்தம கிறிஸ்தவர்களாயிருக்க நல்ல தீர்மானம் செய்து சாகும் மட்டும் அதைக் காப்பாற்ற நம்மாலான முயற்சி செய்வோம். இயேசுகிறிஸ்துவின் அன்புக்காக நமது சாதாரண செயல்களை உத்தமமாய்ச் செய்து நமது அனுதின கடமைகளைப் பிரமாணிக்கமாய் நிறைவேற்றி, கிறித்துவர்களுக்குரிய புண்ணியப் பயிற்சியில் நாள்தோறும் விருத்தியடைவதில்தான் மீட்பு அடங்கியிருக்கிறது. வணிகர்களைப் பாருங்கள். லாபம் அடைய எப்போது மிக்க அபூர்வமான நேரம் வருமென்று காத்துக் கொண்டிருக்கிறதில்லை; தாங்கள் விற்கிற ஒவ்வொரு பொருளிலும் சிறிதளவு லாபமாவது அடையக் கருத்தாயிருந்து வர வர சிறிது சிறிதாய் பெரிய இலாபம் அடைகிறார்கள். விவிலியத்தில் இயேசு இரட்சகர் நாம் இந்த உலகத்தில் ஞான வியாபாரிகளாயிருக்கிறோமென்று எடுத்துக் காண்பித்து, தாம் வருகிறவரையில் நன்றாய் வியாபாரம் பண்ண வேண்டுமென்றும் சொல்லுகிறார்.

இவ்வுலக இன்பத்தைத் தேடித்திரிகிற கிறிஸ்துவர்களுக்கு மேற்கூறிய தியாக வாழ்வு கடுமையானதாயிருக்கும். சுறுசுறுப்புள்ள கிறிஸ்தவர்கள் இவ்வுலகத்திலேயே மிக்க பாக்கியவான்களாய் வாழ்கிறார்கள். சுய பரித்தியாகப்பலியில் உண்மையாகவே இவர்கள் இயேசுக்கிறிஸ்துவைப் பின்பற்றி நடக்கிறார்கள். தேவ அன்புக்காக செய்கிற இந்தப் பலிகளிலுள்ள சுமையை திவ்விய இயேசுவின் கொடைகளும் ஆசீர்வாதமும் எளிதாக்குகிறதோடு கூட, தேவ ஊழியத்தில் தாராள குணமுள்ள இவர்களுடைய இதயத்தை ஞான ஆறுதலால் நிரப்பவே இவர்களுடைய முகத்தில் சந்தோஷக் கதிர் வீசுகிறது.

அநேக கிறிஸ்தவர்களுக்கு தாங்கள் வேதபடிப்பினைப்படி ஒழுங்காய் நடக்க வேணுமென்கிற ஆசையிருந்தாலும் எனக்கு நேரமில்லை என்பார்கள். உண்மையும் உறுதியுமான நல்ல மனதில்லாமைதான் குறை. உலகத்தில் ஒரு நல்ல நிலைமைக்கு வர அல்லது சீரும் செல்வாக்கும் பெற ஓர் அரசு வேலையை பெற அவர்கள் விரும்பும் போது அவர்கள் நடக்கிற விதம் எப்படி என்று பார். தங்கள் உடல் நலத்தையும் பலத்தையும் கவனியாமல், இராப்பகலாய் எவ்வளவு உற்சாகத்தோடு உழைக்கிறார்கள்! தாங்கள் கொண்ட கருத்து நிறைவேறும்படி என்ன களைப்பு தவிப்பு வந்தாலும் அவர்கள் அதைக் கவனிக்காமல் இருக்கிறார்கள்.

உலகக் காரியங்களில் இவ்வளவு ஆர்வமிருக்கும்போது ஊழியத்தில் திருஇருதயப் பக்தர்களுக்கு எவ்வளவு தாராள குணம் உண்டாக வேண்டும்! இயேசுவின் திருஇருதயத்துக்குப் பிரியப்பட பரித்தியாகங்கள் செய்யாதிருக்கலாமா?

**வரலாறு**

ஒரு கிராமத்தில் கத்தோலிக்க போர் வீரன் இருந்தான். இவன் நாள்தோறும் தன் ஊருக்குப் பக்கத்திலிருந்த கோவிலுக்குப் போய் அங்கே தேவ நற்கருணை முன்பாக, அரசன் முன்னிலையில் போர் வீரன் பாரா கொடுப்பது போல் அசையாமல் ஒருமணி நேரம் நின்று கொண்டிருப்பான். இவன் நாள்தோறும் இப்படிச் சென்று வருகிறதைக் கண்ட ஒரு குருவானவர் இவனுடைய பக்தியின் அடையாளத்தை பற்றிச் சற்றுப் புகழ்ந்து பேசி, ஏன் இப்படி நாள்தோறும் காவல் காப்பவனைப் போல் நின்று வருகிறாயென்று கேட்டார். போர் வீரன் குருவானவரை நோக்கி சுவாமி, என் படைத்தலைவரின் வீட்டு முன் அவரை மகிமைப்படுத்த காவற்காரன் இருக்கிறான். திவ்விய இயேசு என் படைத்தலைவரைவிட ஆயிரமடங்கு அதிக மகிமைக்குரியவர் என்றாலும் இந்த ஆண்டவருக்கு முன்பாக ஒரு போர்வீரனையும் காணோம். இதனால்தான் நான் நாள்தோறும் என் ஆண்டவருக்கு முன்பாக ஒருமணி நேரம் போய் நிற்கிறேன் என்றான். நீ அப்படி அங்கே நிற்கும்போது ஆண்டவரை நோக்கி என்ன சொல்லுகிறாய்? என்று கேட்கையில், சுவாமி, போர்வீரனாகிய எனக்கு என்ன செபம்

தெரியும்? போர்ச்சேவகர்களுக்கு செபமும், பக்தி முயற்சிகளும் அதிகம் தெரியாது. நான் ஆண்டவருக்கு முன்பாக நிற்கும் போது என் ஆண்டவரே! நீர் அங்கேயிருக்கிறீர், உம்மை மகிமைப்படுத்த நான் இங்கேயிருக்கிறேன் என்கிற வார்த்தைகளைத்தான் சொல்லுகிறேன் என்றான்.

குருவானவர் தன்னால் முடிந்ததை செய்துவந்த இந்த போர்வீரனுக்கு உண்டான நல்ல மனதைக் கண்டுமிக்க ஆச்சரியப்பட்டார். திருஇருதய அன்பர்களும் இந்தப் போர்வீரனைப்போல் தங்கள் சோம்பேறித்தனத்தை ஜெயித்து, கெட்ட கிறிஸ்தவர்கள், பிறமதத்தினர் முதலானவர்களின் கேலிக்குப் பயப்படாமல் திருஇருதயத்துக்குப் பிரியப்பட தங்களாலானதைச் செய்யவும், நல்ல கிறிஸ்தவர்களாய் நடந்து தேவ ஊழியத்துக்கடுத்த ஞானக் காரியங்களையெல்லாம் தாராள குணத்தோடு நிறைவேற்றவும் உறுதியான தீர்மானம் செய்ய வேண்டியது.

தேவ கட்டளைப்படி மகாஉத்தமரான நோவே என்பவர் வெள்ளப் பெருக்கிலிருந்து தப்பித்துக் கொள்ளும்படி அந்தப் பிரமாண்டமான பெட்டகத்தைச் செய்யும்போது தீயவர்களும் அவரை இகழ்ந்து கேலி பண்ணினார்கள். நோவே தேவ வார்த்தையின்பேரில் நம்பிக்கை வைத்து அவர்களுடைய கேலிகளுக்குக் காது கொடாமல் தன் வேலையை நடத்திவந்தார். சிலநாட்களுக்குப் பிறகு வெள்ளப் பெருக்கு வந்தது. தன்னை நிந்தித்தவர்கள் படும் துன்பத்தையும் சாவையும் நோவே கண்டதுந்தவிர, தான் தன் குடும்பத்தோடு பெட்டகத்தின் முகமாய்க் காப்பாற்றப்பட்டதையும் அறிந்தார். அவர்கள் அறிவில்லாமல் நடந்து மடிந்தார்கள். ஆண்டவருக்கு உண்மையாயிருந்து அவர் கட்டளைப்படி நடந்த நோவே காப்பாற்றப்பட்டார்.

நோவே என்பவரின் பெட்டகத்தைவிட, உண்மையான தேவ பெட்டகமும், மனிதர்களுக்கு அடைக்கலமும் மீட்புமாகிய திரு இருதயத்திலிருந்து நம்முடைய விருப்பு வெறுப்புகளை ஜெயிப்போம். நாளுக்கு நாள் பக்தியில் வளர்வோம்.

**செயல்**

நமக்கு என்ன துன்பம் வந்தாலும் சரி, அன்புக்குரிய இயேசுவின் திருஇருதயத்தை நமது முழு மனதோடு அன்பு செய்வோமாக! ஒரு தடவை அவருக்கு நமக்குள்ள சகலத்தையும் கொடுத்தபிறகு திரும்ப ஒரு போதும் அவைகளில் எதையும் எடுத்துக் கொள்ளாமலும் நமதென்று யாதொன்றையும் வைத்துக் கொள்ளாமலும், எப்போதும் நாம் அவருக்கு முழுதும் சொந்தமாயிருப்போமாக.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

# 7-ம் தேதி ******************************



## இயேசுவின் திருஇருதயம் தாழ்ச்சிக்கு ஆசிரியர்

இயேசுவின் திருஇருதயப் பக்தியானது நமது ஆண்டவருடைய புண்ணியங்களைப் பின்பற்றி நம்முடைய அன்பை அவருக்குக் காண்பிப்பதில் அடங்கியிருக்கிறது. இந்தப் புண்ணியங்களுக்குள்ளே தாழ்ச்சியென்கிற புண்ணியத்தை விசேஷமாய் நமது ஆண்டவர் கற்பிக்கிறார். *தீர்ப்புநாளில் சோதோமுக்கு கிடைக்கும் தண்டனையை விட உனக்குக் கிடைக்கும் தண்டனை கடினமாகவே இருக்கும் என நான் உங்களுக்குச் சொல்லுகிறேன் (மத்தேயு11: 24)*

ஆண்டவருடைய அளவில்லாத மாட்சிமையையும் நமது ஒன்றுமில்லமையையும் நாம் அவர் பேரில் முற்றும் சார்ந்திருக்கிறோமென்பதையும் அங்கீகரிப்பதே தாழ்ச்சிக்கு அடித்தளம். ஆத்தும, சரீர விஷயங்களில் நாம் எவ்வித நன்மைகளை கொண்டிருந்தாலும், அல்லது நாம் எவ்வளவு சீரும் செல்வமும் உடையவர்களாயிருந்தாலும் அவைகளெல்லாம் நமது ஆண்டவர் நமக்கு தயவாய்க் கொடுக்கும் கொடைகளேயன்றி வேறல்ல. இந்த நற்கொடைகளை எப்படி உபயோகித்தோமென்று நாம் கண்டிப்பாக கணக்குக் கொடுக்கும் படியாயிருக்கும். இவையெல்லாம் ஆண்டவரிடமிருந்து நமக்கு வருகின்றன. எல்லாம் அவருக்கே சொந்தம். நமது பாவங்கள் நமது குற்றங்குறைகள் இவைகள்தான் நம்மிடமிருந்து வருபவை. நமது கண்ணுக்கு முன்னால் எப்போதும் இருக்கவேண்டிய உண்மை இது.

நாம் எவ்வளவு வசதி படைத்தவராயிருந்தாலும் எவ்வளவு நற்குணங்கள் அமைந்தவர்களாயிருந்தாலும் மனிதர்கள் நம்மைப் புகழ்ந்து பாராட்டினாலும் நாம் பெருமைப்படுவதற்குப் பதிலாய், சகல கொடைகளுக்கும் ஊற்றாகிய இறைவனுக்கு எல்லாப் புகழ்ச்சி வணக்கங்களும் உரியவை என்று எண்ணவேண்டும். ஆதலால் மற்றவர்களைவிட இறைவன் நமக்கு அதிகம் கொடுத்திருந்தால் அவருக்கு நன்றியும் வணக்கமும் செய்து, நமது அயலார்மட்டில் மிகுந்த மரியாதையோடு நடந்து கொள்ள வேண்டும்.

*"தம்மைத்தாமே உயர்த்துகிறவர் எவரும் தாழ்த்தப்பெறுவர். தம்மைத்ததாமே தாழ்த்துகிறவர் எவரும் உயர்த்தப்பெறுவர் (மத்தேயு 23 : 12).*

தாழ்ச்சி எவ்வளவு முக்கியமென்றால் எல்லா புண்ணியங்களுக்கும் அது அடித்தளமாயிருக்கிறது. வேரில்லாத மரம் ஒரு சிறு காற்று அடித்ததும் கீழே விழுகிறது போல், தாழ்ச்சியில்லாமல் மற்றெந்தப் புண்ணியமும் நிலைத்திருக்க மாட்டாது. தாழ்ச்சியானது விண்ணுலகில் நுழைய அவசியம் என்கிறார் புனித கிரகோரியார். ஆங்காரம் மற்றும் சுயநலம் போல் வேறெதுவும் ஆத்துமத்தை நித்திய அழிவுக்கு கொண்டு போகிறது இல்லை என்று தூய கிறிசோஸ்தோம் அருளப்பர் சொல்லுகிறார். தாழ்ச்சியுள்ளவர்களுக்குத் தமது அருட்கொடையை அளிக்கிறார் என்கிறார் புனித யாகப்பர்.

தாழ்ச்சி புனிதர்களுக்கு மட்டும்தான் என்றும் சாதாரண கிறிஸ்தவர்களுக்கு தேவையில்லை என்பதும் தவறு. ஆத்தும மீட்புக்கு எல்லா கிறிஸ்தவர்களுக்கும் தாழ்ச்சி அவசியம் என்பதை மறந்து போகக்கூடாது. தாழ்ச்சியென்கிற புண்ணியந்தான் நமக்கு இரட்சண்யமாகும். இதுதான் நம்முடைய துர்க்குணங்களோடு நாம் எதிர்த்துப் போராடவும், நம்முடைய பாவ அக்கிரமங்களினிமித்தம் நாம் தண்டனைக்கும், நிந்தை அவமானங்களுக்கும் உரியவர்கள் என்பதை ஞாபகப்படுத்தவும் உதவும்.

இயேசு தமது வார்த்தையைவிட தமது முன்மாதிரிகையால் தாழ்ச்சியென்கிற புண்ணியத்தைக் காண்பிக்கும் பொருட்டு தமது தேவ மகத்துவத்துக்குச் சரியான புகழுடன் இவ்வுலகில் வந்து தோன்ற சம்மதிக்கவில்லை. பெத்லகேம் ஊரிலுள்ள ஓர் எளிய மாட்டுக் கொட்டிலைத் தெரிந்துகொண்டார்.

திருப்பாடுகளின் போதுதான் இயேசுவின் திருஇருதயமானது தாழ்ச்சியென்னும் புண்ணியத்தில் மிகவும் வியக்கத்தக்க முன்மாதிரிகையை நமக்குக் காட்டுகிறது. நிந்தை அவமானங்களால் நிரப்பப்பட்டு, மிக்க கேவலமான சிலுவையின் சாவுக்குத் தீர்வையிடப்பட்ட திவ்விய இயேசு இந்த வேதனைகளை எல்லாம் மனப்பூர்வமாய் ஏற்றுக்கொண்டு மிகுந்த அன்போடு தமது தேவ பிதாவுக்கு அவைகளை ஒப்புக்கொடுத்தார். திவ்விய இயேசு நாம் நமது மகிமையைத் தேடுகிறதில்லை என்று உச்சரித்த தமது தெய்வீக வார்த்தையின்படி தமது ஆயுள்காலமெல்லாம் நடந்து வந்தார். நாமும் இப்படிச் சொல்லக்கூடுமா? நம் மாமனிதர்கள் தக்க விதமாய் மதிக்கவில்லையென்று நாம் உணரும் போதும், நம்முடைய வீண் பெருமையை குத்துவதற்கான வார்த்தைகள் நமது காதில் விழும்போதும், நாம் திவ்விய இயேசுவின் அன்புக்குரிய ஆச்சரியமான பொறுமையைப் பற்றுகிறோமா?

தாழ்ச்சிக்கு திவ்விய மாதிரிகையான இயேசுவை நாம் பின்பற்ற நமக்குத் தைரியமில்லையென்று உணர்ந்தால், நாம் நமது பேரில்

கொள்ளும் மோசமான எண்ணங்களை சில செபங்களாக இயேசுவின் திருஇருதயத்துக்கு ஒப்புக் கொடுக்கலாம். கடைசியாய் ஒரே வார்த்தையில் சொல்ல வேண்டுமானால் நமது சுயமகிமைக்காகவும் மனித புகழ்ச்சிக்காகவும் உழைக்கிறதற்குப் பதிலாய் மோட்ச மகிமைக்காக உழைப்போமாக.

**வரலாறு**

இயேசுவின் திருஇருதயப் பக்தி நாளுக்குநாள் வளர்ச்சியடைகிறதையும், அத்தகு இருதயத்துக்கு புகழ்ச்சியாகப் புதுத் தேவாலயங்கள் கட்டப்படுகிறதையும் நாம் பார்க்கும் போது நமக்கு இது மிக சந்தோசம் வருவிக்க வேண்டும். தென்னிந்தியாவில் ஓர் அழகான பெரிய தேவாலயம் இந்தியாவின் மீட்புக்காக மன்றாடும் இயேசுவின் திருஇருதயத்துக்கு புகழ்ச்சியாகக் கட்டப்பட்டு புனிதப்படுத்தப்பட்டது. மிக்க விலையுயர்ந்த இயேசுவின் திருஇருதய சுருபத்தை ஆபரணமாகக் கொண்டிருக்கிற இந்த ஆலயமானது நகரின் தலை வாசலில் ஒரு அழகிய குன்றின்மேல் நிற்கிறது. வானளாவிய இந்த உயர்ந்த சிம்மாசனத்தின் மீது வீற்றிருக்கும் இயேசுவின் திரு இருதயமானது தமது தெய்வீக கொடையை சுற்று வட்டாரத்திலுள்ள கிராமங்கள் மீதும் இன்னும் தென்னிந்தியாவின் மற்றெல்லா மாநிலங்களின் மீதும் பொழிந்து வருகிறது.

இயேசுவின் திருஇருதயப் பக்தர்களும் மரியன்னையின் மக்களாகிய பல திருயாத்திரைக்காரர்களும் இந்த புனிதப் படுத்தப்பட்ட இடத்தை அடிக்கடி சந்திக்க வருகிறார்கள். புனித மரியன்னை மோட்சத்திற்குக் கொண்டு போகப்பட்ட திருவிழாவுக்கு முந்தின நாள் இரவில் திருயாத்திரைக்காரர்கள் தேவ தாயாருடைய தேவாலயத்தை விட்டு கொடைக்கானல் பட்டணத்தின் வீதி வழியே செபம் செய்து கொண்டு தூரத்திலுள்ள இயேசுவின் திருஇருதய ஆலயத்துக்கு மெதுவாய் நடந்து பொழுது விடியுமுன் போய் சேருகிறார்கள். திருயாத்திரை ஸ்தலம் போய்ச் சேர்ந்ததும், தங்கள் வேண்டுதல்களையும் காணிக்கைகளையும் திருஇருதயத்துக்கு ஒப்புக்கொடுத்து, அங்கே நடக்கிற ஆடம்பர திருப்பலியில் கலந்து ஒப்புக்கொடுத்து தேவநற்கருணை உட்கொள்கிறார்கள்.

எந்தெந்த இடங்களில் தமது திருஇருதயத்துக்கு வணக்கம் புரிவார்களோ அந்தந்த இடங்களில் தமது ஏராளமான அருட்கொடைகளைப் பொழிவதாக இயேசுவின் திருஇருதயம் தூய மார்கரீத் மரியாவுக்கு வாக்குறுதி கொடுத்ததுபோல் கொடைக்கானல் பட்டணத்திலும் இந்த வாக்குறுதி நிறைவேறி வருகிறது. இந்த ஆலயம் திருஇருதயத்துக்குத் தோத்திரமாகக் கட்டி முடிந்த சில

வருடங்களுக்குள்ளாக இந்தப் பட்டணத்தில் வருடா வருடம் பலர் மனந்திரும்புவதையும், பிறமதத்தினர் இருளில் மூழ்கி பிறமதங்களைச் சேர்ந்த குடும்பங்கள் மீட்புப் பாதைக்கு வந்து சேருகிறதையும் பார்க்கிறவர்களுடைய மனம் சந்தோஷத்தால் பூரித்து ஆறுதலடைகிறது. இந்தியாவின் மீட்புக்காக மன்றாடும் இயேசுவின் திரு இருதயத்துக்காகக் கட்டப்பட்ட இந்தப் பக்தி அழகு நிறைந்த ஆலயத்தில் போய் வேண்டிக்கொள்ளுகிற திருயாத்திரைக்காரர்கள் வழியாய் திருஇருதயமானது தமது ஆசீர்வாதத்தை அவர்கள் வசிக்கிற ஊர்களிலெல்லாம் பொழியுமென்பது உறுதி.

**செயல்**

நீ செய்யும் நன்மைகளால் உனக்கு வரும் பலனை இழந்து போகாதபடி நீ செய்கிற புண்ணியத்தை வேறு நபர் அறியாமல் செய்.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*
*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 8-ம் தேதி ******************************



# இயேசுவின் திருஇருதயம் பிறரன்புக்கு ஆசிரியர்

இயேசுகிறிஸ்து நாமும் தம்மைப்போல் இருதயத்தில் தாழ்ச்சியும் சாந்தகுணமும் உள்ளவர்களாய் பிறரிடம் மிகுந்த பிறரன்பு மிக்கவர்களாய் வாழ வேண்டுமென்று தமது கட்டளைகளிலும் போதனைகளிலும் எடுத்துரைக்கிறார். "இதுவே என்னுடைய கற்பனை" என்கிறார்.

நாம் இயேசுவின் திருஇதயத்தை அன்பு செய்தால் நாம் இயேசுவை மட்டுமல்ல இன்னும் இயேசு தமது சகோதரர்களென்றும், தமது பரம பிதாவின் மகன்களென்றும் அழைக்கிற மற்றெல்லா மனிதர்களையும் அன்பு செய்வோம். நாம் இயேசுவின் அன்புக்காக எல்லா மனிதர்களையும் மரியாதையோடும், அன்போடும் நடத்துவோம். தவிர அவர்களுடைய மனதைப் புண்ணாக்கி அவர்களுடைய பெயரை களங்கப்படுத்தும் எதையும் தவிர்த்து நடக்க கவனமாயிருப்போம். நல்ல கிறிஸ்தவர்கள் தங்களுடைய பிறரிடத்திலுள்ள குறைகளைப்பார்க்கிலும் அவர்களது புண்ணியங்களைப்பற்றி அதிகமாய் கவனிப்பார்கள். சில சமயங்களில் தங்களுடைய பிறரிடம் குற்றம் உண்டென்று அவர்களுக்கு உறுதியாய் தெரிந்தாலும் அதை அவசரமின்றியும் தக்கக் காரணமின்றியும் வெளியே சொல்லாதிருப்பதோடுகூட அவர்களுடைய நல்ல பெயரையும் தங்களாலியன்ற மட்டும் காப்பாற்றுவார்கள். அன்னப்பறவை நீரைப் பிரித்து பாலை மட்டும் குடிப்பதுபோல் நல்லக் கிறிஸ்தவர்கள் தங்கள் பிறரிடத்தில் எது குற்றம், எது துர்மாதிரிகையென்று பாராமல், அவர்களிடத்திலுள்ள நன்மையை மட்டும் கவனித்து வெளியே பேசுவார்கள்.

அதற்கு மாறாக தீய கிறிஸ்தவர்கள் பிறர் குடும்பங்களில் காணும் புண்ணியங்களை விட்டு விட்டு கண்ணை மூடிக் கொண்டு அவர்களுடைய குறைகளை மட்டும் பேசுவார்கள். பிறரிடம் தீயக் காரியங்களைக் கண்டால் அவர்களைத் திருத்த வேண்டும். அவனுக்கு நன்மை செய்ய வேண்டும் என்பதற்கு பதிலாக தீமையாய் அறிவிப்பார்கள். இப்படியாக அவர்களுடைய நல்ல பெயரை கெடுத்து விடுவார்கள்.

**வரலாறு**

நாகரீகமற்ற மக்கள் வாழ்ந்துவந்த ஓர் ஊரில் ஒருவன் தன் மனைவியைக் கொலை செய்து விட்டான். இவர்களுடைய இனத் தலைவன் இதை விசாரித்தான். அதில் அவ்வூரிலுள்ள பெண் அவதூறாய், அநியாயமாய் மேற்கூறிய மனிதனிடம் அவனது மனைவிக்கு விரோதமாய் அவதூறாய் சொல்லி கோபம் மூட்டியதால் தான் கணவன் மனைவியை கொலை செய்திருக்கிறான் என்று அறிந்து கொண்டான். உடனே தன் இன மக்களையெல்லாம் அழைத்து கூட்டம்கூட்டி அந்த மோசமான பெண்ணை அழைப்பித்து, அவளை அங்கு நின்ற மரத்தில் பிடித்துக் கட்டும்படி கட்டளையிட்டான். இனத் தலைவன் தன் கையில் வைத்திருந்த ஈட்டியுடன் அவள் முன் நின்று கொண்டு உன் நாக்கை வெளியே நீட்டு என, நீட்டப்பட்ட நாக்கிலே தன் கையில் வைத்திருந்த ஈட்டியின் முனையால் இலேசாகக் கீறிச் செல்வான் தற்சமயம் உன் நாவில் படர்ந்திருக்கிற அந்த விஷத்தை மட்டும் எடுத்து விடுவது போதுமென்று நினைக்கிறேன்; மறு சமயமோ தப்பாது விஷத்தை மாத்திரமல்ல, உன் நாக்கையே துண்டித்து விடுவேன் என்று கூறினான். இது அங்கிருந்த மக்களின் காதிலேயும் விசேஷமாய் இந்த படுபாதகியின் காதிலேயும் இடியைப் போல் பாய்ந்தது. அதன்பின் அந்த இனத்தாரும், அந்த பெண்ணும் தங்கள் தங்கள் நாவை வெகு எச்சரிக்கையாய்க் காபந்து பண்ணினார்கள்.

பிறர் சிநேகத்துக்கு விரோதமாய்ப் பேசி குடும்பங்களிலும், மடங்களிலும், ஊர்களிலும் பிரிவினையென்கிற விதையை விதைத்த அநேகம் பேர் இறந்தபின் உத்தரிக்கிற இடத்திலே அநேக வருடங்களாய் மிக பயங்கரமான துன்பங்களை அனுபவிக்கிறார்கள். இத்தகைய ஆத்துமங்கள் அந்தப் பயங்கரமான சிறைச்சாலையை விட்டு வெளியே வந்து மற்றவர்களுக்குத் தங்களைக் காண்பித்து தங்களுக்காக அவர்கள் வேண்டிக் கொள்ளும்படி கெஞ்சி மன்றாட இறைவன் சில வேளையில் உத்தரவு கொடுக்கிறதுண்டு. அப்படியே ஒருநாள், புனித மார்கரீத் மரியாவுக்கு ஓர் ஆத்துமம் தன்னைக் காண்பித்து சகோதரியே, நான் பொறுக்க இயலாத வேதனைப்படுகிறேன். பிறரன்புக்கு விரோதமாய் நான் சொன்ன குற்றச்சாட்டும், துர்க்குணமும் நிறைந்த சில வார்த்தைகளுக்கு தண்டனையாக என் நாவானது நெருப்பால் எரிக்கப்படுகிறது. பிரிய சகோதரியே, தயவு செய்து நீங்களும் இந்த மடத்திலுள்ள மற்ற சகோதரிகளும் என் ஆத்தும இளைப்பாற்றிக்காக வேண்டிக் கொள்ளுங்கள். நீங்களும் சொல்லுகிற வார்த்தைகளை மற்ற சகோதரிகள் நம்பும்படியாக, இதோ ஒரு அடையாளம் காட்டுகிறேன் என்று சொல்லி அந்த அறைக் கதவின்மேல் தன் கைகளை வைத்ததும், ஐந்து விரலும் கதவில் பதிந்து நெருப்புப் பற்றியெரிந்து அப்படியே கறுத்துப் போய் அந்த அறை முழுதும் பொறுக்கமுடியாத

துர்நாற்றம் வீசியது. அந்தப் புனிதர் விபரத்தை தன் மடத்திலுள்ள அனைவருக்கும் அறிவிக்க, அவர்களெல்லோரும் இந்தப் பயங்கரமான அக்காட்சியை பார்த்து அக்கன்னிகை கண்ட காட்சி மெய்தான் என்று நம்பினார்கள்.

உத்தரிக்கிற ஸ்தலத்தில் இவ்வளவு அகோர ஆக்கினை உண்டென்று அறிந்திருக்கிற நாம், பிறரன்புக்கு விரோதமான வார்த்தைகளையும், செயல்களையும் நம்மை விட்டு விலக்குகிறதுமல்லாமல், இயேசுவின் திருஇருதயத்தில் விளங்கும் பிறரன்பு மாதிரிகையைப் பின்பற்றி நடக்க மிக உறுதியான தீர்மானம் செய்ய வேண்டும்.

மற்றவர்களுடைய மனதை புண்படுத்தாமலும், அவர்களுடைய பெயரைக் கெடுக்காமலும் இருந்தால் போதுமென்று இயேசுவின் திரு இருதயப் பக்தர்கள் திருப்தியடையக் கூடாது. நமது திவ்விய இரட்சகர் சொன்ன ஒவ்வொரு வார்த்தையும் ஒவ்வொரு செயலும் அவர் மனிதர் பேரில் வைத்த மட்டில்லாத அன்பின் அத்தாட்சியே தவிர வேறல்ல. தம்மால் உண்டாக்கப்பட்ட படைப்புகளாகிய தூய மரியன்னை சூசையப்பருக்கும் கீழ்ப்படிந்து உலகின் கண்களுக்கு மறைந்து வாழச் சித்தமானார். சிறுபிள்ளைகளைத் தம்மிடம் வரவழைத்து தமது பாசம் நிறைந்த ஆசீர்வாதம் தந்தருள்வார். ஜெருசலேம் நகருக்கு சம்பவிக்கப் போகிற கொடிய அழிவை நினைத்து அதன் மேல் கண்ணீர் சிந்தியதோடு நமது துன்ப வேளைகளில் தாமும் நம்மோடு வருத்தப்படுகிறாரென்று காண்பிக்கிறதற்காக இலாசர் என்பவரை அடக்கம் பண்ணிய கல்லறையருகில் மார்த்தாள், மரியாளோடு கண்ணீர் சிந்தியழுதார்.

## செயல்

திவ்விய இயேசு உன்னிருதயத்தில் அடிக்கடி எழுந்தருளிவர ஏதுவாயிருக்கிற உன் நாவால் பிறர் சிநேகத்தைப் பங்கப்படுத்தக்கூடிய எந்தக் குற்றத்தையும் வெகு எச்சரிக்கையோடு அகற்றிவிடு. எல்லார் மட்டிலும் பொறுமையாய் நடந்துகொள். எல்லோரோடும் சிநேகமாயிரு. ஒருவரையும் பகைக்காதே. பரிசுத்த பிறர்சிநேகப் பயிற்சியால் இயேசுவின் திரு இருதயத்துக்குப் பிரியப்பட சமயந்தேடு. உன் அயலானைப்பற்றி எப்போதும் நன்மையாய் நினைக்கவும், பேசவும் கற்றுக்கொள். எளியவர்களிடமாய்த் திவ்விய இயேசு இருக்கிறாரென்றெண்ணி அவர்களுடைய ஆத்தும சரீரத்துக்கு உன்னாலான உதவியைச் செய். கடைசியாய் உனக்கு மற்றவர்கள் செய்யாதிருக்க விரும்புவதை, நீயும் மற்றவர்களுக்குச் செய்யாதே.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 9-ம் தேதி **********************



### இயேசுவின் திருஇருதயம் ஆத்தும இரட்சண்ய ஆவலுக்கு மாதிரிகை.

தங்கள் பக்திக் காரியங்களை பிரமாணிக்கமாய் நிறைவேற்றுவதினால் திவ்விய இரட்சகர் மட்டில் தங்களுக்கு உண்மையான அன்பிருக்கிறதென்று பல கிறித்தவர்கள் எண்ணிக் கொள்ளலாம். இவ்வகைப் பிரமாணிக்கமான அந்தஸ்து நல்லதுதான். என்றாலும் இதில் கிறித்தவர்களுக்குரிய கடமையெல்லாம் அடங்கி விட்டதென்று நினைக்கக் கூடாது. பக்திக்குரிய காரியங்களை பிரமாணிக்கமாய் அனுசரிக்கிறது கிறித்தவர்களுக்குரிய கடமைகளில் ஒரு சிறு பங்குதான். இறைவனின் எண்ணம் முழு இருதயத்தோடு இறைவனை அன்பு செய்கிறதுமல்லாமல் உன் அயலானையும் அவர் நிமித்தம் அன்பு செய் என்பதுதான். இந்த இரண்டு கற்பனைகளும் ஒரே கற்பனை. நாம் மீட்படைய இந்தக் கற்பனையை முழுதும் கடைபிடிக்க வேண்டும். நம்முடைய அயலாரை நாம் அன்புச் செய்யாமலும், அவர்களுடைய ஆத்தும இரட்சண்யத்துக்காக உழைக்காமலும், பிறரன்பு கற்பனையை அலட்சியம் செய்தால் தேவ சித்தத்திற்கு விரோதமாய் நடக்கிறோம். இறைவனுக்குத் துரோகம் செய்கிறோம்.

இயேசுவின் திருஇருதயமானது நமக்கு காண்பிக்கிற நன்மாதிரிகைகளைச் சற்று ஆராய்வோம். அவர் தமது தேவ பிதாவை அளவு கடந்த விதமாய்ச் சிநேகித்தார். தவிர, தமது பரம பிதாவும் ஆத்துமங்களின் பேரில் வைத்திருந்த அணை கடந்த அன்பை அறிந்த நமதாண்டவர், அந்த ஆத்துமங்களை நித்திய சாபத்திலே நின்று மீட்கவும், தாம் தமது பிதாவின் பேரில் வைத்த சிநேகத்தைக் காண்பிக்கவும், தம்மைத்தாமே பூரண பலியாக ஒப்புக்கொடுத்து மானிட உருவம் கொண்டு நிந்தை அவமானமும் துன்பமும் நிறைந்த வாழ்வு வாழ்ந்து மிகக் கொடூரமான பாடுகளை அனுபவித்து தமது இரத்தமெல்லாம் சிந்தி, நமது மீட்புக்காகச் சிலுவையில் உயிர் விட்டார்.

திவ்விய இயேசு பொதுத்தீர்வை நாளில் திருவுளம்பற்றும் வார்த்தைகளைக் கவனிப்போமானால், நாம் கடவுளை அன்புச் செய்தோமா என்பதைப்பற்றியல்ல, நமது அயலாரை அன்புச் செய்து அவர்களுடைய இரட்சண்யத்துக்காக முயற்சி செய்தோமா என்பதைப்

பற்றி அதிகமாய்க் கணக்கு கொடுக்க நேரிடுமென்று நினைக்க வேண்டியிருக்கிறது. நமது அயலாருடைய ஞான நன்மைக்காகவும் ஆத்தும இரட்சண்யத்துக்காகவும், நம்மை முழுதும் கையளிப்பதுதான். இந்த ஞான நன்மையை முற்றிலும் நமக்குப் பிரியமானவர்களுக்குத் தேட வேண்டும். அப்படியே பக்தியுள்ள தாய், தகப்பன் தங்கள் குடும்பத்தின் ஆசீர்வாதத்திற்காக தங்களாலான முயற்சி எடுக்க வேண்டும். தங்கள் குழந்தைகளைப் பரிசுத்தத்தனத்திலும், உறுதியான பக்தியிலும் வளரும்படி கவனித்து தீய நண்பர்களுடன் அவர்கள் பழகாதபடியும் அவர்களுக்கு நற்படிப்பினையை நாளுக்குநாள் ஊட்டி, தங்கள் வார்த்தையிலும், செயலிலும் அவர்களுக்குச் சகலத்திலும் நன்மாதிரிகையாயிருந்து நசரேத்தூரில் வாழ்ந்துவந்த திருக்குடும்பத்தைப் போல் நடந்து வர வேண்டும். நமக்கு கிடைக்கும் நல்ல பத்திரிகைகள், புத்தகங்களைக் கிறித்தவர்களிடத்திலும், மற்றவர்களிடத்திலும் கொடுத்து வாசிக்கச் செய்ய வேண்டும். படிப்பில் தேர்ச்சியில்லாத கிறிஸ்தவர்கள் பிறர் ஆத்தும இரட்சண்யத்துக்காக உழைக்க வேண்டும்.

**தர்மம் செய்தல் :**

சில கிறிஸ்தவர்களுக்கு இறைவன் மிகுந்த செல்வத்தைக் கொடுத்திருக்கிறார். இதை வீண் செலவு செய்ய அல்ல. ஆனால் நமது செல்வத்தைக் கொண்டு ஆத்தும இரட்சண்யத்துக்கு உதவியான பிறரை பிறரன்பு பணிகளைச் செய்து நிலைநிறுத்தி அவைகளை வளர்ச்சி செய்யும்படியாகவே கொடுத்தார்கள். சிலரிடம் அவ்வளவு செல்வம் இல்லாவிட்டாலும் அவர்கள் இருதயத்தில் இயேசுவின் திருஇருதய அன்பு பற்றுதலும் ஆத்துமங்களை இரட்சிக்க வேண்டுமென்கிற ஆவலுமுண்டு. அவர்களும் தர்மம் செய்ய பணம் மிச்சம் பிடிக்கலாம். வீண் ஆடம்பர செலவுகளைக் குறைத்து தர்மம் செய்வார்களேயானால் இயேசுவின் திருஇருதய ஆசீர்வாதம் அவர்களுக்கும் குடும்பத்துக்கும் நிறைவாய் கிடைக்கும்.

செபம் :

**ஆத்தும இரட்சண்யத்துக்கு செபம் முக்கியம். பாவிகள் மனம் திரும்ப செபத்தால் முடியும். இது எல்லோராலும் கூடும். ஏழைகள் முதலாய் இதைச் செய்யலாம்.**

புத்திமதி :

நீ வேலை செய்யும்போது அவர்கள் மத்தியில் இருக்கிறாய். ஆத்தும இரட்சண்ய அலுவலைப் பற்றி சில வார்த்தைகள் நட்போடும், பிறரன்போடும் சொல்வானேயாகில் உடன் பலன் கிடைக்காவிட்டாலும் அவர்கள் இறக்கும் போதாகிலும் அவர்கள் மனந்திரும்புவர். இவ்வித நல்ல தருணங்களை வீணில் இழந்து போகாதே.

**நன்மாதிரிகை :**

தங்களைச் சுற்றி வாழும் கிறிஸ்தவர்களுடைய நன்மாதிரிகை அல்லது துர்மாதிரிகையின்படியே பிறமதத்தினர் நமது சத்திய வேதத்தை மதிக்கிறார்கள். தவிர நன்மாதிரிகையானது மற்ற கிறிஸ்தவர்களும் அதிக பக்தியுடன் நடப்பதற்கு மிகவும் ஏதுவுண்டு. வேதத்துக்கடுத்த கடமைகளிலும், கிறிஸ்தவனுக்குரிய புண்ணியப் பயிற்சிகளிலும் தளராத பிரமாணிக்கமாய் நடக்கிற கிறிஸ்தவன், தன் பங்குக் கிறிஸ்தவர்களுக்கு எவ்வளவு பெரிய நன்மைச் செய்கிறான்.

**வரலாறு**

புதுச்சேரியில் இயேசுவின் திருஇருதய ஆலயம் ஒன்றுண்டு. மேதகு காந்தி ஆண்டகை அவர்கள் இந்த ஆலயத்தை 1901 - ஆம் ஆண்டு கட்டினார். இந்த ஆண்டகை இயேசுவின் திரு இருதயத்தின் பேரில் மிகுந்த பக்தி உடையவர். அவர் தமது மேற்றிராசனத்திலுள்ள குருக்களுக்கும், கிறிஸ்தவர்களுக்கும் இந்தப் பக்தியைக் கொண்டாடவும், பரப்பவும் போதித்து வந்தார். ஆலயம் கட்ட இடம் தேடினார். ஆனால் இடம் கிடைப்பது சிரமமாக இருந்தது. பின்னர் இடம் விற்கவேமாட்டோமென்று இருந்த நகர பரிபாலன சபையார் அவர்களும் இணங்கி விலைக்குக் கொடுத்தனர். பின்னர் கட்டிடம் ஆரம்பமானது. ஆண்டகை முதல் கல் மந்திரித்து அஸ்திவாரமிட்டார்கள். இக்கல்லில் ஒரு விசேஷம் உண்டு. அதாவது இது ஒரு இந்து கோவிலின் வாசலிலிருந்த கல். இதில் ஒன்பது துவாரம் உண்டு. இந்தத் துவாரங்களின் வழியாகத்தான் தங்கள் தேவதையை பிறமதத்தினர் கண்டு தரிசித்தார்களாம். இப்போது இக்கல்லின் மேல் இயேசுவின் திருஇருதயம் இருக்கிறது. சாத்தானுடைய கோவில் வாசற்கல்லின் மேல் மனிதர்களை புனிதப்படுத்தி இரட்சிக்கத் தம்மிடம் அழைக்கிற இயேசுவின் திரு இருதய ஆலயம் தலைவாசற்படி நிற்கிறது.

தற்போது ஆலயம் புகழ்பெற்று விசுவாசிகளிடம் விளங்கும் திரு இருதயப் பக்தியானது மேலும் மேலும் அதிகரித்து வருகிறது. முப்பது வருடங்களுக்கு அதிகமாய்ப் பசாசினுடைய ஆளுகையிலிருந்து இந்த இடத்தில் இப்போது இயேசுக்கிறிஸ்துவின் ஆட்சி நிறுவப்பட்டு தமது திருஇருதயத்திலிருந்து நித்திய வாழ்வையும், மீட்பையும் அடைய சகல சனங்களையும் அழைக்கிறதை நாம் பார்ப்பது எவ்வளவோ மன நிறைவைக் கொடுக்கிறது. இந்த ஆலயத்தைத் தரிசிக்க வரும் சகலரும் அலங்கரித்த வடிவு காட்சியைக் கண்டு ஆச்சரியப்பிரமை கொள்ளுகிறார்கள். இவ்வாலயத்தின் விசேஷம் என்னவென்றால் பல வர்ணக் கண்ணாடிகளால் கண்களைப் பறிக்கக் கூடிய இயேசுவின்

திருஇருதயச் சாயல் மரியன்னையின் சாயல், பல புனிதர்களின் சாயல் அமையப் பெற்ற சன்னல்களே.

உண்மையின் பிரகாசமும், அன்பின் காந்தியும் வீசும் ஞான சூரியனாகிய இயேசுவின் திருஇருதயமானது ஆத்துமாக்கள் மேல் வீசி அவைகளைப் பிரகாசிப்படையச் செய்து ஞான வாழ்வை உண்டு பண்ணி நித்திய மோட்ச பாக்கியம் கொண்டு வந்து சேர்ப்பதாகும்

**சுகிர்த பார்கவீத் மரியம்மாளின் சுகிர்த வாக்கியம்**

இயேசுவின் திருஇருதயத்தை அணிகிப்போ, புது ஜீவியத்தை அடைவாய். இந்த ஜீவியத்தில் திவ்விய இயேசுதான் உன்னிடம் இயேசு வாழ்கிறார். ஆதலால் பார்க்கிறது நீயல்ல. திவ்விய இயேசு பார்க்கிறார். செயல் உன்னுடையதல்ல. திவ்விய இயேசுவின் செயல். பேசுகிறது நீயல்ல திவ்விய இயேசுதான் பேசுகிறார். அன்புச் செய்வது உன் இருதயமல்ல. இயேசுவின் திருஇருதயமே.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 10-ம் தேதி ************************



### இயேசுவின் திருஇருதயம் விசுவாச வாழ்விற்கு ஆசிரியர்

பிதாவாகிய இயேசுகிறிஸ்து நாதர் இவ்வுலகத்துக்கு அனுப்பப்பட்டது தமது சத்திய வேதத்தின் உண்மையை மனிதர்களுக்கு அறிவித்து, சுபாவத்துக்கு மேலான வாழ்வையும், ஆத்தும மீட்பின் அவசியத்தையும் கற்பித்து இவ்வுலக காரியங்களிலிருந்து நமது இருதயப் பற்றுதல்களை நீக்கி நித்திய மோட்சானந்த பாக்கியத்தின் பற்றுதல்களை பலப்படும் படி செய்து விசுவாசமும் அன்பும் நிறைந்த புதுவாழ்வை கற்றுக்கொடுக்கவே இவ்வுலகத்துக்கு வந்தார்.

விசுவாசத்தால்தான் நாம் இறைவனையும் இயேசுக் கிறிஸ்துவையும் கடைசி நிலையையும் பரிசுத்த திருச்சபையையும், நமது திவ்விய வேதத்தையும், அதன் சத்தியங்கள் முழுமையையும் அறிகிறோம். உண்மையான விசுவாசத்துக்கும், அந்த விசுவாசத்தை அனுபவத்திற்கு கொண்டு வருகிறதற்கும் பெரிய தடையாயிருப்பது அறியாமைதான். மறைக்கல்வி தெரியாதவர்களுக்கு இயேசுவின் திரு இருதயப் பக்தர்கள் அதைக் கற்றுக் கொடுக்க வேண்டும். கத்தோலிக்கப் புத்தகங்கள், பத்திரிகைகளை வாசிக்கக் கொடுக்க வேண்டும் அல்லது அவர்களுக்கு வாசித்துக் காட்டவேண்டும். இப்படிச் செய்தால் அறியாமை நீங்கி புதுத் தெளிவு உண்டாகும். இயேசுவின் திருஇருதயத்துக்கு இதைவிட பிடித்தமானது வேறொன்றுமில்லை.

நல்ல கிறிஸ்தவர்களென்று அழைக்கப்படுகிறவர்கள் முதலாய் வேதப் படிப்பினையில் பின் தங்கிய நிலையிலிருக்கிறார்கள். ஆனால் குருக்களின் மறையுரைகளுக்கு காதுகொடுத்து, நாளுக்கு நாள் கத்தோலிக்க மறையின் உண்மையை அதிகமதிகமாய் அறிந்து கிறிஸ்தவர்களுடைய கடமைகளைச் செய்து தாங்கள் நன்முறையில் நடந்து மற்றவர்களிடத்தில் உற்சாகமும், பிரகாசமும் வளரப் பண்ணுவது சிறந்த முறையாகும். சில கிறிஸ்தவர்கள் அறியாமையினால் இறைவனுக்குகந்த கடமைகளை நிறைவேற்றாமல் விட்டு விடுகிறார்கள். அவர்களுக்கு நன்மையும் தீமையும் நன்றே. ஏதோ மறு உலக வாழ்வு இல்லாதது போலவும், நம் வாழ்வின் முடிவில் கணக்குக் கொடுக்க தேவையில்லையென்றும் வாழ்வார்கள். நித்திய வாழ்வுக்கடுத்த உண்மைகளைப் பற்றி அவர்களுக்கு தெளிந்த அறிவு இல்லை.

புண்ணிய பயிற்சியினாலும், நன்மாதிரிகையினாலும், தங்களுக்கும் பிறருக்கும் ஆத்தும மீட்பைத் தேடுவதற்குப் பதிலாய் சில பக்தி முயற்சிகளை கடமைக்கு அனுசரிப்பார்கள். திருஇருதய அன்பர்களோவென்றால் தங்களுடைய விசுவாசத்தை உயிர்ப்பித்து, இயேசுவின் திருஇருதய வாழ்வைத் தங்களிடத்தில் பிறப்பிப்பார்கள்.

நசரேத்தூரில் திவ்விய இயேசு வெளிப் பார்வைக்கு மற்ற சாதாரண குழந்தைகளைப்போல்தான் இருந்தார். ஆனால் உண்மையில் அவருடைய வாழ்வு முற்றிலும் வித்தியாசமான தெய்வீக வாழ்வு. தேவ குமாரனுடைய அளவில்லாத பரிசுத்தத்தனத்தால் நிறையப் பெற்ற வாழ்வு. நம்மிடத்தில் உயிருள்ள விசுவாசமிருந்தால் விசுவாசத்துக்குத் தகுந்தது போல் நம்முடைய வாழ்விருக்கும். இயேசுவின் திருஇருதய செயல்களோடு நம்முடைய செயல்களும் ஐக்கியப்படும். உலக நாட்டமும், தீய கிறிஸ்தவர்களுடைய தன்மையும் வேத விரோதிகளது எதிர் போக்கும் நம்மிடம் உண்டாகாமல் இயேசுவின் திருஇருதய நோக்கமும் புனிதர்களின் தன்மையும் நம்மிடம் குடிகொள்ளும்.

தங்களுடைய புண்ணிய மாதிரிகைகளால் மற்றக் கிறிஸ்தவர்களுக்கு மேலாய் தேவ ஊழியத்தில் விளங்கி வாழ்கிற சில கிறிஸ்தவர்கள் நமது பங்குகளிலிருப்பது மிகவும் அவசியமும் பயனுமுள்ளது. உயிருள்ள விசுவாசமும் அன்பும் நிறைந்த இருதயமுடைய இத்தகைய கிறிஸ்தவர்கள் ஒவ்வொரு பங்கிலும் இருப்பார்களேயாகில் நம் இந்திய நாட்டில் மாற்றம் உண்டாகும். எத்தனையோ பிற மதத்தினர் மனந்திரும்பி விண்ணரசு செல்ல உதவியாயிருக்கும். இறைவனை அன்புச் செய்து வணங்கவும், அதனால் தங்கள் ஆத்துமத்தை இரட்சிக்கவுமே அவர்கள் நன்றாய் அறிந்திருக்கிறார்கள். "ஆகவே *அனைத்திற்கும் மேலாக அவரது ஆட்சியையும் அவருக்கு ஏற்புடையவற்றையும் நாடுங்கள். அப்போது இவையனைத்தும் உங்களுக்குச் சேர்த்துக் கொடுக்கப்படும்"* ***(மத்தேயு 6:33)***

என்று கூறிய இயேசுக்கிறிஸ்துவின் கற்பனைக்கும் போதனைக்கும் ஒத்தபடி அவர்கள் வாழ்கிறார்கள். தவிர *மனிதர் உலகம் முழுவதையும் ஆதாயமாக்கிக் கொண்டாலும் தம் வாழ்வையே இழப்பாரெனில் அவருக்குக் கிடைக்கும் பயன் என்ன? அவர் தம் வாழ்வுக்கு ஈடாக எதைக் கொடுப்பார்?* ***(மத் 16 : 26)*** என்ற கிறிஸ்துவின் அருள்வாக்கு அவர்கள் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

லொயோலா பட்டணத்தில் தூய இஞ்ஞாசியார் இயேசுசபையை நிறுவி மேலான குணங்கள் உள்ள இளைஞனை தன் வசம் சேர்க்க முற்பட்டார். அந்த இளைஞன் உலக ஆசாபாசங்களில் மூழ்கியிருந்தான்.

தூய இஞ்ஞாசியார் அந்த இளைஞனைக் கண்டு மனிதர் உலகம் முழுவதையும் ஆதாயமாக்கிக் கொண்டாலும் தன் வாழ்வையே இழப்பாரெனில் அவருக்குப் பயன் என்ன? என்னும் கிறிஸ்துவின் வார்த்தையை அடிக்கடி நினைப்பூட்டுவார். அதனால் அவ்விளைஞன் அதை உணர்ந்து உலகத்தைத் துறந்து தன்னை முழுதும் இயேசுகிறிஸ்துவுக்குக் கையளித்து இயேசு சபையில் நுழைந்து குருவானார். இவர்தான் நாட்டுக்கு மீட்புக் கொண்டு வந்த புனித பிரான்சிஸ்கு சவேரியாராவார்.

இஸ்பான்ய தேசத்தில் சிறந்த பிரபு குடும்பத்தில் பிறந்து வளர்ந்த ஓர் இளைஞர் இருந்தார். இவருக்கு அரச அரண்மனையில் பொறுப்பான வேலை கிடைத்தது. இச்சமயம் இஸபெல்லா இராணி இறந்து போனார். அரச வம்சத்தாரோடு அடக்கஞ் செய்ய வேண்டியிருந்ததால் இராணியின் சடலத்தோடு இந்த இளைஞனும் போகவேண்டியிருந்தது. குறிக்கப்பட்ட இடத்தில் அடக்கம் செய்யுமுன் இது இராணியின் சடலந்தானென்று இந்தப் பிரபுவானவர் உறுதிமொழி கூறவேண்டியிருந்ததினால் அந்த சடலப் பெட்டியைத் திறந்தார்கள். அந்த இளைஞர் இராணியின் முகத்தைப் பார்த்தார். சாவானது அழகு முகத்தை எவ்வளவு சீர்குலைத்துவிட்டது என்று அந்த இளைஞர் பிரமித்து நின்றார். திவ்விய இயேசுவின் அருட்கொடை அதே நிமிடத்தில் அவரிருதயத்தில் இறங்கி அவருடைய புத்திக்கு பிரகாசத்தையும் மனதுக்குத் திடனையும் கொடுத்தது. அழிவுக்குரிய உலக மகிமையைப் பெரிதாக எண்ணிப் பின்பற்றுவது என்ன அறியாமை. ஒரு போதும் இறவாத அந்த ஏக இறைவனுக்கு இதே நிமிடம் என்னை முழுதும் கையளித்து ஒப்புக் கொடுக்கிறேன் என்று கூறி எல்லாவற்றாயும் துறந்து இயேசு சபையில் நுழைந்து மூன்றாவது தலைவராக நியமிக்கப்பட்டு பெரும் புனிதனானார். அவர்தான் புனித பிரான்சீஸ்கு போர்ஜியார். இறைவனின் அருள்கொடையும் உறுதியுள்ள விசுவாசமும் ஆத்துமங்களில் எவ்வளவு நன்மையை விளைவிக்கிறதென்று மேற்கூறிய சம்பவங்களால் அறிந்து கொள்ளலாம்.

### வரலாறு

ஓர் கொலைக்காரன் மரணத் தீர்ப்பளிக்கப்பட்டான். இந்தத் தீர்ப்பைக் கேட்டு அந்த கொலைக்காரன் கோபங்கொண்டு நீதிபதியை திட்டினான். அதே மூர்க்கதனத்தின் நிலையில் திரும்பவும் சிறைக்கூடத்தில் அடைக்கப்பட்டான். அந்தப் பட்டணத்தை விசாரிக்கும் குருவானவர் இந்தக் குற்றவாளியிடம் போய், அவனுக்கு இயேசுவின் திருஇருதயப் படம் ஒன்றைக் காட்டி, அவனோடு பேச ஆரம்பித்தார். அவன் முகத்தைத் திருப்பிக் கொண்டு பேசவுமில்லை, படத்தைப் பார்க்கவுமில்லை. அந்தப்படம் ஆண்டவர் தமது திருஇருதயத்தை

மனிதர்களுக்குக் காண்பித்து அன்புக்கு அன்பு கேட்கிற காட்சியாக இருந்தது. இதைக் கண்ட குருவானவர் தற்சமயம் மௌனமாய்ப் போய்விட்டார். மீண்டும் மறுமுறை வந்து அதே படத்தை அவனுக்குக் காண்பித்து அதை அவன் வணங்கவும், ஒரு சிறு செபம் தன்னுடன் சேர்ந்து சொல்லவும் கேட்டுக் கொண்டார். பாவியானவன் அப்போதும் மவுனம் சாதித்தான், என்றாலும் படத்தைத் திரும்பி பார்த்தான். ஆச்சரியம்! உடனே தன்னை அறியாமல் அவன் முழந்தாளிட்டு கண்ணீர் சிந்தி ஓ! என் நேச இரட்சகரே! நீர் உம்முடைய இருதயத்தை இவ்வளவு அன்போடு எனக்கு கொடுத்திருக்கிறதைக் காண்கிற நான் என்னுடைய இருதயத்தை உமக்குக் கொடுக்க தாமதிக்கலாமா? என்று அங்கலாய்த்தான். இதுமுதல் அந்தத் தீயவன் தீயகுணங்களிலிருந்து முழுதும் மாறிவிட்டான். தான் குற்றவாளியென்றும் தான் சாவுக்குரியவன் என்றும், தன் பாவத்துக்குப் பரிகாரம் செய்யத் தயாராயிருப்பதாகவும் தீர்மானம் எடுத்துக் கொண்டான். பிறகு மனஸ்தாபத்தோடு ஒப்புரவு அருட்சாதனம் பெற்று நற்கருணை பெற்றான். தான் காண்பித்த துர்மாதிரிகைக்கும், நியாயாதிபதிகளை அவதூறாய்ப் பேசினதற்கும் பலமுறை மன்னிப்புக் கேட்டான். கடைசியில் குருவானவரை நோக்கி, அன்புள்ள தந்தையே, நீர் இயேசுவின் திருஇருதயப் படத்தை எனக்குக் காண்பித்ததற்காக உமக்கு மிகவும் நன்றிக் கடன்பட்டிருக்கிறேன். எனக்கு மீட்பு கிடைத்தது. உம்மாலும் இயேசுவின் திருஇருதயத்தினாலுமேயல்லாமல் மற்றப்படியல்ல என்று உறுதியாகக் கூறினான்.

## புனித மார்கரீத் மரியம்மாளின் சுகிர்த வாக்கியம்.

சதையிலான இருதயத்தின் சாயலாய் வணக்கம் செலுத்துவது தமக்கு விசேஷ சந்தோசம் வருவிக்கிறதென்று இயேசுவின் திரு இருதயம் எனக்கு தீர்மானமாய்ச் சொன்னது. ஆதலால் மனிதர்களுடைய கல்லான இருதயத்தை இளக்க தமது இருதயப்படங்களை பகிங்கரமாய் ஸ்தாபிக்க வேண்டுமென்று விரும்பியதும் தவிர தமது திரு இருதயத்துக்கு இவ்வகை மரியாதை செய்கிறவர்களுக்கு தமது இருதயத்திலுள்ள ஏராளமான அருட்கொடைகளைப் பொழிவதாகவும் எனக்கு வாக்குக் கொடுத்தார்.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

# 11-ம் தேதி



## மரண அவஸ்தைப்பட்ட இயேசுவின் திருஇருதயம்

பூங்காவனத்தில் நமது மீட்புக்காகத் தமது பிதாவுக்குத் தம்மைப் பலியாக ஒப்புக்கொடுத்த இரட்சகரை இயேசுவின் திருஇருதய அன்பர்கள் தாங்கள் அவர்பேரில் வைத்த அன்பால் ஏவப்பட்டு நினைவின் வழியாய் பூங்காவனத்தில் நுழைந்து, அவருக்கு ஆறுதல் வருவிக்க ஆசைப்படுவார்கள். இந்த ஒலிவேத்மலைத் தோட்டத்தில் விசேஷமாய் இயேசுவின் திருஇருதயமானது தாம் மனிதர்கள்பேரில் வைத்த அணைகடந்த அன்பைக் காண்பிக்கிறது.

இயேசு மனிதர்களுடைய பாவங்களையெல்லாம் தமதுமேல் சுமந்துகொண்டு தமது பிதாவின் கோபத்தை குறைத்து மனிதர்களுடைய பாவங்களுக்குப் பரிகாரம்பண்ண அவருக்கு முன்பாக முழங்காலிலிருந்து வணங்குகிறார். அச்சமயம் அவருடைய திருஇருதயமானது சகிக்க முடியாத துக்கத்தில் மூழ்கியது. அகோரமான கோபத்தோடும், தளராத நீதியோடும், பயம் வருவிக்கக்கூடிய தோற்றத்தோடும், தமது பிதாவை தமக்கு முன்னால் இருப்பதாக பார்க்கிறார். துரோகியான யூதாஸென்பவன் தம்மை முத்தமிட்டுக் காட்டிக்கொடுக்கிறதையும், கொடிய யூதர்கள் தமது மாமிசத்தைக் கிழித்துத் தம்மைச் சிலுவையில் அறைகிறதையும், தம்முடைய அப்போஸ்தலர்களும் சீடர்களும் தமது விரோதிகளின் கையில் தம்மை விட்டுவிட்டு ஓடிப்போகிறதையும், கடைசியாய் இலட்சக்கணக்கான ஆத்துமங்கள் தமது பாடுகளால் யாதொரு பலனடையாமல் தாம் காண்பிக்கும் அன்பை சற்றும் உணராதவர்களாய் என்றென்றைக்கும் தண்டனைக்குள்ளாகப் போகிறதையும் கண்டார். இந்தக் காட்சிகளானது அவருடைய அன்பு நிறைந்த திருஇருதயத்துக்குப் பொறுக்க முடியவில்லை. அதனால் உடல் முழுவதும் இரத்த வியர்வையினால் நிரம்ப தரையில் முகங்குப்புற விழுகிறார்.

திவ்விய இயேசுவை இந்த நிலையில் காண்கிற நம்முடைய இருதயமானது பாவத்தை முழுவதும் அவருவருத்துத் தள்ளவேண்டும். பாவியின் வடிவில் மனிதர் பாவங்களைத் தமதுபேரில் சுமந்துகொண்ட தமது பரிசுத்த குமாரனை பிதாவானவர் இவ்வளவு கொடுமையாய் நடப்பித்திருக்க பல பாவங்களைக் கட்டிக்கொண்டிருக்கிற நாம் அந்தப்

பாவங்களுக்கு இவ்வுலகத்தையே பரிகாரம் பண்ணாவிட்டால் தேவநீதி நம்மைக் கொடூரமாய் நடத்தும்!

சோதனை நேரத்திலும் துன்பவேளையிலும் நாம் நம்பிக்கையோடும் தேவ விருப்பத்திற்கு அமைந்த மனதோடும், மரண அவஸ்தைப்பட்ட இயேசுவின் திருஇருதயத்தின் மாதிரியாக அவைகளை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று திவ்விய இயேசு மரணவேதனைப்படுகிற சமயத்தில் தமது பிதாவை நோக்கி : *அப்பா தந்தையே எல்லாம் உம்மால் இயலும். இத்துன்பக் கிண்ணத்தை என்னிடமிருந்து அகற்றும். ஆனாலும் என் விருப்பப்படி அல்ல; உம் விருப்பப்படியே நிகழட்டும் என்று கூறினார்.* **(புனித மாற்கு 14.36.)**

நமது சோதனைவேளையில் திவ்விய இயேசுவின் மாதிரிகையைப் பின்பற்றி, நம்முடைய துன்பங்களை அவருடைய பாடுகளோடு ஒன்றித்து, நமது பாவங்களுக்குப் பரிகாரமாக அவைகளை ஒப்புக்கொடுக்க வேண்டும். நம்முடைய சிலுவைகளிலிருந்து நம்மை விடுவிக்க ஆண்டவரை நோக்கிக் கேட்கும்போது, திவ்விய இயேசுவைப்போல், (பிதாவே! உமது விருப்பப்படி நிகழட்டும், என் விருப்பப்படி நிகழவேண்டாம். உமது சித்தப்படியே ஆகக்கடவது. என் மனதின்படி ஆகவேண்டாம்.) என்று நாமும் சொல்லவேண்டும். திருச்சபைத் துவக்கத்தில் முன்னூறு வருடமளவாய் மறைசாட்சிகள் தங்கள் இரத்தத்தைச் சிந்தும்படி இயேசுக்கிறிஸ்துநாதர் விரும்பினார் அவ்வளவு வேதனையை திவ்விய இயேசு நம்மிடம் இப்போது கேட்கிறதில்லை. நம்முடைய பாவங்களுக்கு நாம் செய்கிற பரிகாரத்தாலும், மரண அவஸ்தைப்பட்ட இயேசுவின் திரு இருதயத்தோடு ஒன்றித்து நம்மை முழுவதும் ஆத்தும மீட்புக்கு கையளிப்பதினாலும் நாம் வேதசாட்சிகளாகும்படி ஆசிக்கிறார்.

கசப்பான கிண்ணக் கடைசித்துளிவரை குடிக்கத் தீர்வையிட்டார்" என்று திருவுளம்பற்றியபின்னர், புனித மார்க்கரீத் மரியம்மாள் ஒருநாள் தியானம் செய்துகொண்டிருந்துபோது இயேசு அவருக்குத் தோன்றி, புனிதையை நோக்கி : "மகளே, நாம் பூங்காவனத்தில் முழுமனதோடு அனுபவித்த மரண வேதனையை நீயும் வியாழக்கிழமை இரவுதோறும் அனுபவிக்கும்படி செய்வோம். ஆதலால் நமது பிதாவுக்கு நாம் ஒப்புக்கொடுத்த அந்தத் தாழ்ச்சி நிறைந்த ஜெபத்தில் நீயும் நம்மோடு ஒன்றிக்கும்படியாக நள்ளிரவு பதினோரு மணிக்கும் பன்னிரண்டு மணிக்கும் இடையில் எழுந்திருந்து மனிதருடைய பாவங்களை ஆண்டவர் மன்னித்து அவர்களுக்கு இரக்கம் காண்பிக்கவும், தேவகோபத்தை குறைக்கும்படியாகவும் நீ தரையில் முகங்குப்புற விழுந்து வணங்குவாயாக! நமது திருத்தூதர்கள் நம்மைவிட்டு ஓடிப்போனது நமக்கிருந்த தவிப்பை நீ சிறிதளவாவது தணியச்செய்வாய்.

இதனாலேதான் நம்மோடுகூட ஒருமணிநேரமுதலாய் விழித்திராதினிமித்தம் அவர்களைக் கண்டிக்கும்படி நேரிட்டது" என்று சொல்லி மறைந்தருளினார்.

சுமார் 120 வருடங்களுக்குமுன் புனித தன்மையிலும் இயேசுவின் திருஇருதயப்பக்தியிலும் மிகவும் சிறந்து விளங்கின லியோனார்து என்னும் ஒரு இயேசுசபைக் குரு இருந்தார். இவர் பிரான்ஸ்நாட்டினர். தமது திவ்விய இரத்தத்தால் மீட்கப்பட்ட ஆத்துமாக்கள் பேரில் இரக்கமாயிருந்து அவர்களை மீட்க தேவநற்கருணையில் வீற்றிருக்கும் திவ்விய இயேசுவின் திருஇருதயத்தை நோக்கி இந்தப் பரிசுத்த குருவானவர் மிகுந்த பக்தி சுறுசுறுப்போடு வேண்டிக்கொண்டிருந்தார். அப்போது, திவ்விய இயேசு தமது திருஇருதயத்திற்கு மிக்க மகிழ்ச்சியும், ஆத்துமாக்களுக்கு மிக்க பிரயோசனமுமான ஒரு சபையை ஏற்படுத்தும்படியும், அச்சபை கீழே கூறப்படும் இரண்டு கருத்துக்களுக்காக ஏற்படுத்தப்படவேண்டுமென்றும் தெரிவித்தார். முதலாவது, வாழ்நாள் முழுவதும் விசேஷமாய்ப் பூங்காவனத்தில் மனித மீட்புக்காக மரண அவஸ்தைப்பட்ட தமது திவ்விய இருதயத்துக்கு வணக்கம் வருவித்தல். இரண்டாவது இலட்சக்கணக்காய் உலகமுழுவதிலும் சாகிற சகலருக்கும் நன்மரண வரம், மரண அவஸ்தைப்பட்ட இயேசுவின் திருஇருதயம் கொடுக்க இரந்து மன்றாடுதல்.

இயேசுவின் திருஇருதயத்தின் விருப்பத்தை நிறைவேற்றும் பொருட்டு அந்த இயேசுசபைக் குருவானவர் சில ஞானவேகமுள்ள மனிதர்களைக் கேட்டுக்கொண்டதின் பேரில், அவர்களெல்லோரும் ஒரு சபையாகச் சேர்ந்து பின்வரும் ஜெபத்தை ஜெபித்து வருகிறார்கள்.

"கருணாம்பர இயேசுவே! ஆத்துமங்களை நேசிக்கிறவரே, தேவரீருடைய ஆராதனைக்குரிய இருதயமானது பூங்காவனத்திலும் சிலுவையிலும் பட்ட மரண துன்பதுயரங்களையும், உம்முடைய மாசில்லாத திருத்தாயார் அனுபவித்த வியாகுலங்களையும் பார்த்து இன்றுதானே பூமியில் எங்காவது அவஸ்தைப்பட்டு மரிக்கப்போகிற ஆத்துமங்களை உமது திவ்விய இரத்தத்தால் சுத்திகரித்தருளும். மரண அவஸ்தைப்பட்ட இயேசுவின் திருஇருதயமே! இன்று மரிக்கிற பாவிகளின்பேரில் இரக்கமாயிரும். ஆமென்."

விசேஷமாய் மரண அவஸ்தைப்படுகிற பாவிகள் மனந்திரும்படியாக, நாமும் மேற்சொன்ன செபத்தை வேண்டிக்கொள்வோமாக.

**வரலாறு :**

இயேசுவின் திருஇருதயத்தின்பேரில் பக்தியுள்ள ஒரு மனிதன் ஒருநாள் ஒரு சோதனைக்குட்பட்டு கனமான பாவத்தில் விழுந்துவிட்டான். ஆனால் இயேசுவின் திருஇருதயமானது அப்பாவியின்மேல் இரங்கி, தமது அருட்கொடையால் அவனுடைய இருதயத்தை எவ்வளவு இளகச்செய்தாரென்றால், அப்பாவி உடனே ஒரு குருவானவரைத் தேடிப்போய் அவர் பாதத்தில் விழுந்து அழுது, மிக்க துக்க மனஸ்தாபத்தோடு ஒப்புரவு செய்து, தன் பாவத்தைப் பரிகரிக்கக்கூடிய ஒரு பெரிய தவமும் கொடுக்கும்படி கேட்டான். பாவியானவன் ஏழு வருடம் தவம் செய்யும்படி குருவானவர் கட்டளையிட்டார். சுவாமி, ஏழு வருடங்கள் நான் செய்த பாவங்களுக்கு என் வாழ்நாளெல்லாம் பரிகாரம் செய்தாலும் போதாதே என்று சொல்லி அழுதான். குருவானர் அப்பாவியிடம் விளங்கிய மிகுந்த உத்தமமனஸ்தாபத்தைக் கண்டு, மகனே, மூன்று நாளைக்கு மட்டும் ஒரு சந்தி உபவாசம் செய் என்றார். இதைக் கொஞ்சமும் எதிர்பாராத அந்த மனிதன் முன்னிலும் அதிகமாய் அழுது மிகக்கடினமான தவமுயற்சி தனக்குக் கட்டளையிடும்படி கெஞ்சிக் கேட்டான். குருவானவர் மனந்திரும்பிய பாவியை நோக்கிச் சொல்வார். "இனி என்னிடம் அதிகமாய்க் கேட்காதே. இதுதான் கடைசித் தீர்மானம்; உன் பாவத்துக்கு அபராதமாக ஒரு கர்த்தர் கற்பித்த ஜெபம் சொல்" என்று கற்பித்தார். அத்தருணத்தில் பாவியானவனுடைய இருதயம் பொறுக்கமுடியாத துக்க மனஸ்தாபத்தாலும், இயேசுவின் திருஇருதய அன்பினாலும் எவ்வளவு நிறையப்பெற்றதென்றால், அதைத் தாங்கமாட்டாமல் உடனே இறந்துபோனான். இவ்வகையாய் இயேசுவின் திருஇருதயத்தை என்றென்றைக்கும் புகழ்ந்துபாட மோட்ச இராட்சியத்தைச் சுதந்தரித்துக்கொண்டான்.

இயேசுவின் திருஇருதய இரக்கமானது நமது பேரிலும், உலகிலுள்ள சகல பாவிகள்பேரிலும், விசேஷமாய் இச்சமயம் மரிக்கப்போகிற பாவிகள்பேரிலும் இறங்கிவரும்படி நாமும் மன்றாடுவோமாக. ஆத்தும மீட்புக்காக மரண அவஸ்தைப்பட்ட திரு இருதயமானது, மரண அவஸ்தைப்படுகிற சகல பாவிகளுக்காக நீங்கள் மன்றாடவும், உங்கள் அன்றாட செயல்களை ஒப்புக்கொடுக்கவும், கேட்கின்றது.

நித்திய நரகாக்கினையிலிருந்து பாவியானவன் தப்பிக்க தேவையானது ஒப்புரவு அருட்சாதனம். இது இல்லாவிட்டால் உத்தம மனஸ்தாபம். இந்த இரண்டு வரங்களில் ஒன்றை மரண அவஸ்தைப்பட்ட இயேசுவின் திருஇருதயத்தை நோக்கிக் கேட்போமாக. ஆதலால் கால தாமதமின்றி உடனே திருஇருதயத்தைப் பார்த்து வேண்டிக்கொள்ளுங் கள். ஏனென்றால் நாளை என்பது பல ஆத்துமங்களுக்குக்

*[illegible] இந்த விஷயத்தில் அப்போஸ்தலராகிய யாகப்பர் சொல்லுவது என்னவென்றால் : துன்மார்க்கத்திலிருந்து ஒரு பாவி மனந்திரும்பக் காரணமாயிருக்கிறவன் சாவிலிருந்து தன் ஆத்துமத்தை மீட்டு அநேக பாவங்களுக்கும் பொறுத்தலடைவான் என்பதாம்.*

நீயும் ஒருநாள் மரண அவஸ்தைப்படுவாய். பயங்கரமான இந்தக் கடைசி யுத்தத்தில் உன் வாழ்க்கையில் நீ செய்ததுபோல் அநேக பக்தியுள்ள ஆத்துமாக்கள் உனக்காகவும் வேண்டிக்கொள்ளுகிறார்கள் என்று நீ நினைக்கிறது உனக்கு எவ்வளவு ஆறுதலாயிருக்கும்! ஆதலால் நாள்தோறும் துன்பப்படுகிறவர்களுக்காக வேண்டிக்கொள். தினமும் தவறாமல் "கருணாம்பர இயேசுவே" என்கிற ஜெபத்தைச் சொல்.

**சிந்தனை :**

ஆத்தும மீட்புக்காக நம்மாலான சகலமும் செய்யவேண்டும். எல்லாவற்றையும் பொறுமையோடு அநுபவிக்க வேண்டும். பரித்தியாகமும் செய்யவேண்டும். மிதமிஞ்சிய எல்லாப்பற்றுதல்களையும் தூர அகற்றிவிடவேண்டும். பாவிகள் மனந்திரும்பவும், உத்தரிக்கிற ஸ்தலத்து ஆத்துமாக்கள் வேதனை குறைந்து மோட்சபாக்கியம் சேரவும் நாள்தோறும் வேண்டிக்கொள்வோமாக.

செபம் :

**மரண அவஸ்தைப்பட்ட இயேசுவின் திருஇருதயமே! இன்று மரிக்கிறவர்கள் பேரில் இரக்கமாயிரும்.**

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

# 12-ம் தேதி



## இயேசுவின் திருஇருதயம் உண்மையான மகிமையை கொடுக்கிறது.

அளவில்லாத மகிமையையும், பெருமையையும் மோட்சத்தில் அனுபவித்த திருமகனாகிய இயேசுக்கிறிஸ்து உலக மகிமையின் அழிவைக் கற்பிக்கும் பொருட்டு இவ்வுலகத்துக்கு வந்து அழியாத மோட்சத்தின் வழியைத் தமது மாதிரிகைகளால் காண்பிக்க திருவுளமானார்.

மெய்யான பெருமை எதில் அடங்கியிருக்கிறதென்று பலருக்கு நிச்சயமாய் தெரியாது. தங்கள் செயல்களால் தங்களைப் பிரபல்யப்படுத்தின மனிதர்கள்தான் பெரியவர்களென்று அவர்கள் எண்ணுவார்கள். சிலவேளை இந்தச் செயல்கள் மனுக்குலத்துக்குக் கேடாயிருந்திருக்கலாம். தங்கள் சேனையின் வல்லமையால் நாடுகளை கீழே விழச் செய்த அரசர்களின் பெயரை அவர்கள் மகிமைப்படுத்திக் கொண்டாடுவார்கள். ஆனால் அந்த அரசர்கள் அநீத சண்டைகளால் ஜெயித்திருப்பார்களேயாகில் அவர்கள் பெரிய மனிதர்களல்ல, பெருங்கொலைக்காரர்கள். தங்கள் பேராசையை நிறைவேற்ற ஆயிரக்கணக்கான மனிதர்களைக் கொன்ற கொலைக்காரர்கள். காற்றால் அலைக்கழிக்கப்படுகிற தூசியைப்போல் உடனே காணாமல் மறைந்து போகிற அரசை ஏற்படுத்த உலகத்தை மாசுப்படுத்தினார்கள். இத்தகைய அரசர்களின் வாழ்வு மனித சந்ததிக்குக் கேட்டைத்தான் விளைவிக்கும்.

மற்றவர்களுக்கு மேலாய்த் தன்னை உயர்த்தவேண்டுமென்கிற ஆசையானது மனிதர்களை தீயவர்களாக்குகின்றது. அப்படியே ஒரு மனிதனிடத்தில் தன் குடும்பத்துக்குப் போதுமான செல்வம் இருக்கிறதென்று வைத்துக் கொள்வோம். இதைக்கொண்டு அவன் சந்தோஷமாய் வாழலாம். ஆனால் தன்னைவிட பெரிய பணக்காரர்கள் இருக்கிறார்களே என்கிற கவலை அவனுக்கு ஏற்படுகிறது. ஒன்றில் அவர்களோடு சரிசமமாகவேண்டும் அல்லது அவர்களுக்கு மேற்பட்டவனாக வேண்டும், இது நிறைவேறுகிறவரையில் அவனுக்குத் திருப்தி ஏற்படாது. ஆதலால் அதிக செல்வந்தன் ஆக ஆக, அதிக கவலையும் பெரும் கேடும் உண்டாகிறது. ஏனென்றால் தன்னைவிட பெரிய பணக்காரர்கள் இன்னும் இருக்கிறார்களேயென்ற எண்ணம்

அவனை இராப்பகலாய் வாட்டுகிறது. இன்னும் கேள்: ஒரு கிராமத்தில் ஒரு வாலிபனிருக்கிறான். அவனுக்கு அறிவும் திறமையும் உண்டென்று வைத்துக்கொள்வோம். ஆதலால் இவன் சொல்லுகிறபடி அவ்வூர் மக்களில் பலர் நடக்கிறார்கள். இந்த நிலையில் அவன் திருப்தி அடைந்திருப்பானா? இல்லை, இல்லை. இன்னும் மேலே ஏறவேண்டும் ஊருக்கு முதல் மனிதனாய் ஆகவேணும் என்ற, வீணும் விழலுமான பெருமை அவனுக்கு உண்டாகிறது! நாள் செல்லச்செல்ல அவனிலும் சாமர்த்தியவான்கள் தோன்றுகிறார்கள். அவர்கள் அதிகாரிகளாகவே இவன் கீழே போகிறான். அல்லது இவன் தன் வாழ்நாளெல்லாம் செல்வாக்கில் வாழ்ந்தாலும் இறந்த பிறகு வரும் பயனென்ன? (சில நாளைக்குள்ளாக இவனிலும் திறமையுள்ள வேறுசிலர் எழும்புகிறார்கள்) அவ்வூரார் இவனைக் கூடிய சீக்கிரம் மறந்துபோகிறார்கள். கொஞ்ச காலத்துக்குப் பிற்பாடு இவனைப்பற்றிப் பேசுபவர் ஒருவருமில்லை. சிலவேளை இவன் ஜீவித்த காலத்திலிருந்த செல்வாக்கைவிட, அந்தக் கிராமம், அதிக செல்வாக்காயிருக்கிறதாக்கும்.

உலக பெருமையானது மணலில் பதிகிற காலடித் தடத்துக்குச் சமம். அந்தத் தடமெல்லாம் ஒன்றில் காற்றினாலோ அல்லது மற்றப் பிராணிகளின் காலடியினாலோ அழிந்துபோகிறது. இதுபோல்தான் உலக பெருமையும் அழிந்துபோகும். இந்த அழிவுக்குரிய வீண் மகிமைக்காக தன் ஆத்துமத்தையும், நித்திய மோட்ச பாக்கியத்தையும் இழந்துபோவது அறியாமை.

ஆனால் வேறோர் மகிமையிருக்கிறது. அது ஒரு போதும் வாடாது, ஒருபோதும் அழியாது. அது எந்த மகிமை? புனிதத்தை அஸ்திவாரமாகக் கொண்ட மகிமை. என்றென்றைக்கும் மகிமைப்படுத்தும்படி புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கும் மகிமை. இதுவே தாராளகுணமும், உத்தமதனமும் நிறைந்த கிறிஸ்தவர்களின் மகிமை.

நம்முடைய உன்னத மாதிரிகையாகிய இயேசுவின் திரு இருதயமானது தமது போதகங்களினாலும், மாதிரிகைகளினாலும் மகிமையின் பாதையை நமக்குக் காண்பித்திருக்கிறது. திவ்விய இயேசு இவ்வுலக வீண் மகிமையைத் தேடாமல் தமது பிதாவின் மகிமையையே தேடினார். தமக்கோவென்றால் நிந்தை அவமானங்களையும், பாடுகளையும் சிலுவை மரணத்தையும் மாத்திரம் தெரிந்து கொண்டார். இதன் வழியாகவே தமது மகிமை உத்தானத்துக்கும், சகல புனிதர்களுக்கும் நித்திய புகழ்ச்சி ஸ்தோத்திரங்களுக்கும் உரிமையாளரானார்.

புனிதர்கள் இவருடைய தெய்வீக மாதிரிகைகளையும் புண்ணியங்களையும் கண்டுபாவித்து, தங்கள் ஆசைப் பற்றுதல்களோடு

எதிர்த்துப் போராடி, சோதனை நேரங்களில் திவ்விய இயேசுவுக்குப் பிரமாணிக்கமாய் நடந்து, அவருடைய அன்புக்காக துன்ப தரித்திரங்களையும், நிந்தை அவமானங்களையும், கொடிய வேதனைகளையும் அனுபவித்து, இயேசுக்கிறிஸ்துவின் ஊழியத்தில் சாகும் வரை நிலைத்திருந்தார்கள். இப்போதோவென்றால் திவ்விய இயேசுவும், தூய ஆவியானவரும் அவர்களை மோட்ச இராச்சியத்தில் மகிமைப்படுத்துகிறார்கள். அவர்கள் இறைவனின் பிள்ளைகளுக்குரிய நித்திய பாக்கியத்தை அனுபவிக்கிறார்கள். அவர்களைப் பகைத்தவர்களும், தீங்கிளைத்தவர்களும் நித்திய இருளிலும் நரக நெருப்பிலும், அவமானத்திலும் புதைக்கப்பட்டிருக்கிறார்கள். பரலோக மகிமையின் கதிர்களானது இவ்வுலகத்திலே புனிதர்களைச் சூழ்ந்துகொண்டிருக்கிறது. திருச்சபையானது அவர்களை உலகத்தின் எத்திசையிலும் மகிமைப்படுத்தி அவர்களுக்கு வணக்கம் வருவிக்கிறது. அவர்களை விரோதித்து யாவராலும் மறந்து அவமதிக்கப்பட்டு வருகிறார்கள். புனித இஞ்ஞாசியார், புனித சவேரியார், புனித ஞானப்பிரகாசியார் ஆகியோர் தங்களுடைய புனிதத்தன்மையால் தங்களுடைய பெயரைப் பிரபல்யப்படுத்தியிராவிடில் யார் அவர்களுடைய குடும்பத்தைப் பற்றி நினைப்பார்கள்?

புனித இஞ்ஞாசியார் நோயுற்றிருந்த காலத்தில் புனிதர்களுடைய சரித்திரங்களை வாசித்ததினிமித்தம் தேவ அருட்கொடையால் தூண்டப்பட்டவராய் முழுதும் மனந்திரும்பி செபமும் தவமும் நிறைந்த வாழ்வுவாழ ஆரம்பித்து, தரித்திர வேடம் அணிந்து, தேவ சித்தத்துக்காக மருத்துவமனைக்கு சென்று நோயாளிகளுக்குத் தொண்டூழியம் செய்வதில் தன்னை முழுதும் கையளித்தார். மகிமை பெருமையின் பேரில் நாட்டமுடையவரை அவருடைய அண்ணன் புனித இஞ்ஞாசியாரை நோக்கி, நம்முடைய பேருக்கும் புகழுக்கும் தகாத இந்த இழிவான தொழிலை நீர் செய்வதை நான் பார்க்கும்போது, எனக்கு வெட்கமாயிருக்கிறது. நீர் தரித்திருக்கிற லொயோலாவென்னும் நம்முடைய முன்னோர்களுடைய புகழ் பெற்ற பெயரை ஞாபகப்படுத்திக்கொள்ளும். லொயோலா வம்சத்தின் பெருமைக்கு இழிவை வருவியாதேயும் என்றார். உலக மனிதர்களிடத்தில் விளங்குகிற மூடநம்பிக்கைக்கும், அறியாத்தனத்தன்மைக்கும் இதுவே ஒரு நல்ல அத்தாட்சி. புனித இஞ்ஞாசியார் தமது புனிதத்தன்மையால் அழியாத மகிமையைத் தமது குடும்பத்துக்கு வருவியாதிருப்பாரேயாகில், லொயோலாவென்கிற பெயரும் மற்ற அநேக பெயர்களைப்போல் இருளில் மூழ்கியிருக்கும்.

பெரும் புகழ் பெறவேண்டும் என்ற பேராசையால் வாலிபராகிய பிரான்சீஸ்கு சவேரியார் மனிதரிடன் புகழ்ச்சியின் பேரில் மிக்க நாட்டம்

கொண்டிருந்தாரென்று ஏற்கனவே நமக்குத் தெரியும். ஒரு புதிய மகிமைப் பட்டத்தயும், அழியாத கீர்த்தியையும், தன் குடும்பத்திற்கு வருவிக்க வேண்டுமென்பதே அவருடைய விருப்பம். உலக மகிமையின் நிலையற்றதனத்தைப்பற்றி இறைவனுடைய வரத்தால் ஏற்கெனவே ஞான வெளிச்சமடைந்திருந்த இஞ்ஞாசியார் இந்த வாலிபனை அண்டி இயேசுக்கிறிஸ்துவின் வாக்கியத்தை அடிக்கடி சொல்லுவான். *"மனிதன் உலகம் முழுவதையும் ஆதாயமாக்கிக் கொண்டாலும் தம் வாழ்வையே இழப்பாரெனில் அவருக்கு கிடைக்கும் பயன் என்ன? அவர் தம் வாழ்வுக்கு ஈடாக எதைக் கொடுப்பார்?" (புனித மத்தேயு 16 : 26).* பிரான்சீஸ்கு சவேரியார் உலகத்தின் வெறுமையையும், இறைவனின் பெருமையையும் உணர்ந்தார். இந்த நேரமுதல் உலக மகிமையெல்லாம் வெறுத்து நிந்தித்து, கடவுளுடைய மகிமைக்காகவும், ஆத்தும மீட்புக்காகவும் தன்னை முழுதும் கையளித்து கடைசியாய் மோட்சத்தில் தம்முடைய புனிதர்களுக்கு ஆண்டவர் தயார் செய்திருக்கிற உண்மையும் அழியாததுமான மகிமைப் பெயரைச் சுதந்தரித்துக் கொண்டார்.

**வரலாறு**

செல்வந்தனான ஒரு பக்தியுள்ள கிறிஸ்தவன் திடீரென்று தன் செல்வத்தை எல்லாம் இழந்து எவ்வளவு நிர்ப்பாக்கிய நிலையில் வர நேரிட்டதென்றால், தன் குடும்பத்தின் அன்றாட சாப்பாட்டுக்குத் தினமும் அவசியப் பொருட்கள்கூட அவனுக்குக் கிடைக்கவில்லை. அவனும் அவன் மனைவியும் தங்களுக்கு வந்த இந்த நிர்ப்பாக்கிய நிலைமையை மற்றவர்களுக்கு அறிவிக்கத் துணியாமல், பசியும் பட்டினியுமாய்க் கிடந்து கடைசியாய் எழுந்திருந்து நடக்கக் கூடாத நிலைக்கு வந்துவிட்டார்கள். இச்சமயம் மின்னலைப்போல் ஓர் எண்ணம் அந்தப் பெண்ணின் உள்ளத்திலுதித்தது. அதாவது: இன்னும் நமது வீட்டில் ஒரு மெழுகுவர்த்தி இருக்கிறது. இதுதான் நம்முடைய கடைசி செல்வம். இதை இயேசுவின் திருஇருதய சுரூபத்துக்குமுன் ஏற்றி வைக்கலாம். திருஇருதயம் நமதுபேரில் இரக்கமாயிருக்கும் என்று நினைத்துத் தன் கணவனிடம் சொன்னதும் அவர் ஒப்புக்கொள்ளவே, அந்தப் பக்தியுள்ள பெண் தான் இருந்த இடத்தைவிட்டு மிகுந்த கஷ்டத்தோடு நகர்ந்துபோய் அந்த வர்த்தியை ஏற்றிவைத்தார். இயேசுவின் திருஇருதயம் அவர்களுடைய மன்றாட்டுக்கு செவிகொடுத்தது. ஏறக்குறைய நடுச்சாமத்தில் இந்தவீட்டில் இந்த வெளிச்சம் தெரிவதைக் கண்ட அடுத்தவீட்டுப் பெண் என்னமோ, ஏதோ யாராவது நோயாயிருக்கிறார்களோ என்று நினைத்து, இந்த வீட்டுக்கு வந்து பார்க்கையில் இவர்களை இந்த பரிதாபத்துக்குரிய நிலையில் சாகுந்தறுவாயில் கண்டாள். இதற்குக் காரணம் என்னவென்று

கேட்கையில், உண்மையை வெளியிட்டார்கள். உடனே அந்தப் பெண் தன் வீட்டுக்கு ஓடிப்போய் உணவு கொண்டு வந்தாள். இயேசுவின் திருஇருதய இரக்கத்தை இரந்து மன்றாடின அவ்விருவரும் உயிர்ச்சேதத்திலிருந்து காப்பாற்றப்பட்டார்கள்.

உடலின் உயிரைக் காப்பாற்ற இயேசுவின் திருஇருதயம் இவ்வளவு கவலை எடுத்துக்கொண்டால், நாம் அன்போடும் நம்பிக்கையோடும் அத்திருஇருதயத்தை இரந்து கேட்கும்போது நமது ஆத்தும உயிரைக் காப்பாற்ற அத்திருஇருதயம் என்னதான் செய்யாது!

**சிந்தனை**

நம்முடைய இருதயம் கடவுளுக்காக உண்டாக்கப்பட்டிருக்கிறது. கடவுளை மறந்து வேறு எந்த செல்வத்தின் பேரிலும் தன் திருப்தியைத் தேடுகிறவன், அல்லது தன் அன்பை வைக்கிறவன் நிர்ப்பாக்கியன். இயேசுவின் திருஇருதயத்தை அன்பு செய்கிறது எவ்வளவு இனிமை என்று நீ அறிவாயேயாகில், இந்தத் தூய அன்பை கைக்கொள்ள நீ எவ்வித துன்பத்தையும் பட்டனுபவிக்க பின்வாங்கமாட்டாய்.

செபம்

**இயேசுவின் இனிய திருஇருதயமே! உம்மை நான் அதிகமதிகமாய் அன்புசெய்ய அனுக்கிரகம் செய்தருளும்.**

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*
*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

# 13-ம் தேதி

* * * * * * * * * * * * * * * * * * * * * * *



## இயேசுவின் திருஇருதயம் உத்தரிக்கிற ஸ்தலத்து ஆத்துமாக்களின் ஆறுதல்

இயேசுவின் திரு இருதயமானது உத்தரிப்புக் கடனாக வேதனைப்படுகிற திருச்சபைக்கு ஆறுதலும், உலகத்தில் போராடுகிற திருச்சபைக்கு அரசனும், அகில திருச்சபைக்கு மகிமையும் பாக்கியமுமாயிருக்கிறது. விண்ணரசானது மாசில்லாத இயேசுகிறிஸ்துவின் புகலிடமும், தெய்வீக பரிசுத்தத்தின் ஆலயமுமாக இருப்பதால், பாவதோஷத்தினின்று சுத்தப்படாத எந்த ஆத்துமமும் அங்கே பிரவேசிக்க முடியாது. தினமும் உலகத்தில் சாகிற இலட்சக்கணக்கான மக்களுள் பலர் அற்பப் பாவங்களோடும், அல்லது பொறுக்கப்பட்ட சாவான பாவங்களுக்குப் பரிகாரம் பண்ணாத நிலைமையோடும், தேவ சந்நிதானத்திற்குமுன் நிற்கிறார்கள். இந்த ஆத்துமங்களை ஆண்டவர் நரகத்துக்குத் தீர்வையிடமாட்டார். என்றாலும் அவர்கள் தங்கள் பாவங்களுக்கு பரிகாரம் செய்யாமலும் மோட்சத்துக்குப் போகவும் முடியாது. இயேசுவின் திருஇருதய அன்பானது ஒருபக்கத்தில் அந்த ஆத்துமங்கள் மட்டில் குறைவான இரக்கமாயிருக்கத் தூண்டினாலும், மறுபக்கத்தில் தேவ நீதியானது முழுப் பரிகாரம் செய்ய கேட்கிறது. உத்தரிக்கிற ஸ்தல நெருப்பிலேதான் அந்த பரிதாபத்துக்குரிய ஆத்துமங்கள் தங்கள் பாவங்களுக்கும், அசட்டைத்தனத்துக்கும் பரிகாரம் செய்ய வேண்டியிருக்கிறது. இதுதான் விசுவாசமும் பக்தியும் படிப்பிக்கிற படிப்பினை.

இயேசுவின் திருஇருதய அன்பர்கள் இரண்டு தீர்மானம் செய்யவேண்டும். முதலாவது, சாவுக்குப் பிறகு இவ்வளவு துன்பங்களை வருவிக்கிற பாவங்களை இப்போதே வெறுத்துத்தள்ளி, அதிக பிரமாணிக்கமாகவும் உத்தமமாகவும் ஆண்டவருக்கு ஊழியம் செய்யவும், பிறரன்புக்குவிரோதமான வார்த்தைகளை விலக்கி, நமது வீண் மகிமை சுகபோகங்களை ஒறுத்து, ஒரு வார்த்தையில் சொல்லவேண்டுமானால், நாள்தோறும் மிக எளிதாய் நாம் கட்டிக்கொள்ளுகிற எல்லா அற்பப் பாவங்களையும் விட்டு விலக முயற்சிச் செய்ய வேண்டும். தவத்தாலும், நற்செயல்களாலும் நமது பாவங்களுக்கு இவ்வுலகத்திலேயே உத்தரிப்பது மிக எளிதாயிருக்கும். உத்தரிப்பு ஸ்தலத்தின் பயங்கரமான துன்பத்தில் அவைகளைப்

பரிகரிக்கக் காத்திருப்பது அறியாமையாம். இரண்டாவது, உத்தரிக்கிற ஸ்தல நெருப்பில் வேதனைப்படுகிற நமது சகோதரர்களுடைய ஆத்துமங்களுக்கு ஆறுதலளித்து அவைகளை அந்த இடத்திலிருந்து விடுவிக்க நம்மாலான முயற்சி செய்ய வேண்டும். *“என் மேல் இரங்குங்கள்; என் நண்பர்காள்! என் மேல் இரக்கம் கொள்ளுங்கள்; ஏனெனில் கடவுளின் கை என்னைத் தண்டித்தது” (யோபு 19: 21)* என்று அந்த ஆத்துமாக்களிடத்திலிருந்து எழும்புகிற இந்த பரிதாபத்துக்குரிய வார்த்தைகள் நமது காதில் விழுகிறதில்லையா?. ஒரு சிநேகிதன் அல்லது ஓர் அயலான், எரிகிற காளவாயில் விழுந்ததை நீ கண்டால், நீ உடனே ஓடிசென்று அவனை அந்த நெருப்பிலிருந்து காப்பாற்ற முயற்சிப்பாயல்லவா? இதேவிதமாய் அந்த ஆத்துமாக்கள் விஷயத்திலும் நடந்துகொள். தங்களுக்குத் தாங்களே செய்யக்கூடாத உதவியை நீ அவர்களுக்குச் செய்யவேண்டும்.

உத்தரிக்கிற ஆத்துமாக்களுக்கு உதவிபுரிய நமது கையில் திருச்சபையானது கொடுத்திருக்கிற பிரதான கருவி செபமும் நற்செயல்களுமாகும். புனித பிரான்சீஸ்கு சவேரியாருடைய சரித்திரத்தில் நாம் வாசிப்பதென்னவென்றால், இந்தப் புனிதர் நாள்தோறும் மாலையில் சில சிறுவர்கள் கையில் மணியைக் கொடுத்து தெருக்கள் வழியே அடித்துக்கொண்டுபோய் பாவிகளுக்காகவும், உத்தரிக்கிற ஆத்துமங்களுக்காகவும் வேண்டிக்கொள்ள வாருங்கள் என்று சொல்லச் செய்வார். இந்த உத்தம பக்திமுயற்சியை நாமும் நாள்தோறும் செய்வது நல்லது. ஏனென்றால் சிலவேளை அந்த ஆத்துமாக்களில் சிலர் நமக்குத் தெரிந்தவர்களாயிருக்கலாம். வேறு சிலர் நமது நிமித்தம் அங்கே வேதனைப்படுகிறவர்களாயிருக்கலாம்.

இயேசுவின் திருஇருதயப் பக்தர்கள் உத்தரிக்கிற ஆத்துமாக்கள் வேதனை குறைந்து மோட்சபாக்கியம் சேர இத்தனை எளிதான பல வழிகளை உபயோகிக்க நல்ல தீர்மானம் செய்யக்கடவார்களாக.

அந்த ஆத்துமங்களுக்கு உதவியான வழிகளிலெல்லாம் மேலான வழி ஏதென்றால், அவர்களுக்காக திருப்பலி நிறைவேற்றி இயேசுகிறிஸ்துவின் திருஇரத்தப் பலன்களை அவர்களுக்கு பெற்றுக் கொடுப்பதாகும். பல கிறிஸ்தவர்கள் உன்னதமான இந்த வழக்கத்தை முன்னிட்டு அந்த ஆத்துமங்களின் பாவ மன்னிப்புக்காக பல திருப்பலி நிறைவேற்றி வருகிறார்கள். இச் செயல்பாடுகள் இயேசுவின் திரு இருதயத்துக்கு மிக்க மகிழ்ச்சியளிப்பதுமல்லாமல், ஆத்துமாக்களுக்கு மிகவும் பயனுள்ளதாகவும் இருக்கின்றன.

சில கிறிஸ்தவர்கள் தங்கள் குடும்பத்தில் ஒருவர் இறந்துவிட்டால், உறவினர்களையும் நண்பர்களையும் அழைத்து அடக்கச் சடங்கில் கலந்துகொள்ளச் செய்து திருப்பலி நிறைவேற்றி ஆடம்பரமாய் கல்லறையில் நல்லடக்கம் செய்வார்கள். இதோடு நின்று விடுவார்கள். பிறகு அவர்களைப்பற்றி நினைப்பதே இல்லை; இது சரியல்ல. இவ்விதம் அவர்களை மறந்துவிடாமல், அவர்கள் இறந்த ஆண்டு, நினைவுநாள், நவம்பரில் ஆத்துமாக்கள் திருநாள் போன்ற நாட்களில் அவர்களுக்காக திருப்பலி நிறைவேற்றுவதோடு, கல்லறையை அலங்கரித்து குருவானவரை அழைத்துச் சென்று செபிக்கவும் வேண்டும். மேலும் தொடர்ந்து அந்த ஆத்துமத்தின் இளைப்பாற்றிக்காகவும், அக்குடும்ப நலனுக்காகவும் இடையிடையே திருப்பலி நிறைவேற்றுவதும் தான தர்மம் செய்வதும் சிறந்த வழக்கமாகும். நம்மை விட்டுப் பிரிந்த நமது உறவினர்களை நாம் மறவாமல் நன்றியுடன் அன்புசெய்து வருகிறோம் என்பதற்கு இது ஒரு சிறந்த எடுத்துக்காட்டு. மற்றவர்களுக்கும் சிறந்த முன்மாதிரிகையாய் இருக்கும்.

இப்படி உன்னுடைய உறவினர் அன்பர்களுடைய ஆத்துமங்களை மோட்சம் சேர்க்க முயற்சிக்கும் போதுதானே அந்த உத்தரிப்பு ஸ்தலத்தில் யாவராலும் மறந்து கைவிடப்பட்ட பல எழைகளுடைய ஆத்துமங்களை மறந்துவிடக்கூடாது. இவ்வுலகத்திலுள்ள தங்கள் அன்பர்களால் கைவிடப்பட்டு வேதனை அநுபவிக்கிற அந்த ஆத்துமங்களுக்காக வேண்டிக்கொள், பலன்களை அடைந்து ஒப்புக்கொடு, திருப்பலி நிறைவேற்றப் பார். உன்னால் மோட்ச இராச்சியம் சேர்ந்த அந்த ஆத்துமங்கள் உனக்கு மிகவும் நன்றியறிந்திருப்பார்கள். தங்களுக்குத் தாங்களே உத்தரிக்கிற ஸ்தலத்தில் செய்துகொள்ளக் கூடாத உதவியை அவர்கள் உனக்குப் பிற்பாடு செய்வார்கள். இயேசுவின் திருஇருதயத்திலிருந்து ஏராளமான அருட்கொடைகளையும் ஆசீர்வாதங்களையும் உனக்குப் பெற்றுக்கொடுப்பார்கள். கடைசியாய் அவர்கள் மோட்சத்திலிருக்கும் போது தங்களை உத்தரிக்கிற ஸ்தல வேதனையிலிருந்து காப்பாற்றின தங்கள் உபகாரிகளுக்காக இறைவனிடம் வெகுவாய் பரிந்துரைப்பார்கள்.

வரலாறு

தேவ நீதிக்குப் பரிகாரம் பண்ணி உத்தரிக்கிற ஆத்துமாக்களுக்கு உதவிசெய்யும் இயேசுவின் திருஇருதயமானது எனக்கு அடிக்கடி கொடுப்பதாக புனித மார்கரீத்மரியம்மாள் சொல்லுகிறார். இதைப்பற்றி அவர் எழுதியிருப்பதாவது : பெரிய வியாழக்கிழமை இரவில் நான் தேவநற்கருணைக்கு முன்பாக செபித்துக் கொண்டிருந்த வேளையில் உத்தரிக்கிற ஆத்துமாக்கள் என்னைச் சற்றுநேரம் சூழ்ந்துகொண்டு என்னோடு ஒரு அன்பு ஒப்பந்தம் செய்தார்கள். என்னால் கூடுமான

எல்லா நன்மைகளையும் அந்த ஆத்துமங்களுக்காகச் செய்து ஒப்புக்கொடுக்கும்படியாக ஆண்டவர் திருவுளம்பற்றினார். அந்நாள் முதல் அந்த ஆத்துமாக்கள் என்னோடுகூட அடிக்கடி வருகிறார்கள். வேதனைப்படுகிற என் நண்பர்கள் என்று நான் அவர்களை அழைக்கிறேன். இந்தப் புனிதை வேறோர் அருட்சகோதரிக்குப் பின்வருமாறு எழுதியிருக்கிறார்: சிறைப்பட்டிருக்கிற இந்தப் பரிதாபத்துக்குரிய ஆத்துமங்களில் சிலரை நீ விடுவிப்பாயேயாகில் உனக்காக பரிந்து பேசுகிறவர்கள் மோட்சத்தில் இருக்கிறார் களென்பதைப் பற்றி மிக்க மகிழ்ச்சியடைவாய். உன் மீட்புக்காக அவர்கள் தேவ உதவியை இரந்து கேட்பார்கள்.

ஆதலால் இயேசுவின் திருஇருதய அன்பர்கள் புனித மார்கரீத் மரியம்மாளின் மாதிரிகையையும் புத்திமதியையும் பின்பற்றி, தங்கள் செபத்தினாலும், திருப்பலியினாலும் தாங்கள் அடைகிற பலன்களாலும் எத்தனை ஆத்துமங்களை உத்தரிக்கிற ஸ்தலத்திலிருந்து விடுவிக்கக் கூடுமோ அத்தனை ஆத்துமங்களை விடுவிப்பார்கள்.

தம்மை மோட்சத்தில் தரிசித்து அன்பு செய்யும் பாக்கியத்தை இந்த ஆத்துமங்களுக்குக் கொடுக்க ஆவல் கொண்டிருக்கிற இயேசுவின் திருஇருதயமானது அவர்கள் மட்டில் நீ காண்பிக்கிற பிறரன்புக்காக உனக்குச் சம்பாவனை அளிக்கும். நாம் நம்முடைய சகோதரர்களுக்குச் செய்கிற எதையும் தமக்கே செய்கிறதாக திவ்விய இயேசு எண்ணிக்கொள்ளுகிறார். பின்பு அரியணையில் வீற்றிருக்கும் அரசர் தன் வலது பக்கத்தில் நிற்கும் தெரிந்துகொள்ளப்பட்டவர்களை நோக்கி, ஏனெனில் நான் பசியாய் இருந்தேன், நீங்கள் உணவு கொடுத்தீர்கள்; தாகமாய் இருந்தேன், என் தாகத்தை தீர்த்தீர்கள்; அன்னியனாக இருந்தேன், என்னை ஏற்றுக் கொண்டீர்கள்; நான் ஆடையின்றி இருந்தேன், நீங்கள் எனக்கு ஆடை அணிவித்தீர்கள்; நோயுற்றிருந்தேன், என்னைக் கவனித்துக் கொண்டீர்கள்; சிறையில் இருந்தேன், என்னைத் தேடி வந்தீர்கள் என்பார் (மத்தேயு **25 : 35, 36)**. இப்போது என் பிதாவினால் உங்களுக்காக பட்ட பலனை அநுபவிக்க வாருங்கள் என்று திருவுளம் பற்றுவதோடுகூட நான் உத்தரிக்கிற ஸ்தல நெருப்பில் வேதனைப்பட்டேன், நீங்கள் என்னை விடுவித்தீர்கள். தேவ நீதிக்கு உத்தரிப்புப் பலியாக சிறையில் இருந்தேன், நீங்கள் என்னைத் தேடிவந்து எனக்கு ஆறுதலளித்து அழியாத மோட்ச இராச்சியத்தைக் கைக்கொள்ளச் செய்தீர்கள். ஆதலால் நீங்கள் ஈடேற்றின அந்த ஆத்துமாக்களோடு உங்கள் பிறரன்பு செயல்களால் நீங்கள் சம்பாதித்த மோட்ச சம்பாவனையை அநுபவிக்க இப்போது என்னோடு வாருங்கள் என்பார்.

**உத்தரிக்கிற ஆத்துமாக்களுக்கு செபம்**

அளவற்ற பேறுபலன்களையும், அன்பையும் கொண்டிருக்கிற திவ்விய இயேசுவே, உம்மை அன்புசெய்கிறதும் உம்மால் அன்புச் செய்யப்படுகிறதுமான ஆத்துமங்களுக்காக உம்மை மன்றாடுகிறோம். அந்த ஆத்துமங்கள் உம்மை அநுபவிக்க நீதிப்பிரகாரம் அவர்களை ஒரு பக்கத்தில் நீர் தண்டிக்கிறீரென்றாலும் வேறொரு பக்கத்தில் அவர்களுடைய தண்டனையின் காலத்தைக் குறைக்கும்படி உமது இரக்கத்தை நாங்கள் கெஞ்சி மன்றாட நீர் ஆசிக்கிறீர். அவர்களுக்காக நாங்கள் உம்மை நோக்கிக் கேட்கிற மன்றாட்டுக்குத் தயவுசெய்து செவிசாய்த்தருளும். உமது திருஇதயத்தின் பேரில் பற்றுதலாயிருந்து உமது புகழ்ச்சிக்காக ஞான ஆவல்கொண்டிருந்த அந்த ஆத்துமங்களை விசேஷ விதமாய் நினைத்துக்கொள்ளும். அன்புக்குரிய இயேசுவே! உமது சமூகத்துக்கு அவர்கள் வந்துசேர தாமதம் பண்ணாதேயும். அவர்கள் உம்முடைய திவ்விய இருதயத்துக்கு எவ்வளவோ அன்புள்ளவர்களாயிருகிறார்கள். அந்த ஆத்துமாக்கள் ஆசிக்கிறதும் உமது விலைமதியாத திருஇரத்தத்தால் அவர்களுக்காக நீர் சம்பாரித்ததுமான மோட்ச பேரின்பத்தை அவர்களுக்குக் கொடுக்க உமது திருஇருதயத்தின் வழியாய் உம்மைக் கெஞ்சி மன்றாடுகிறோம். ஆமென்.

**சிந்தனை**

நீ இப்போது செய்கிற செயலானது நீ செய்யவேண்டிய ஒரே செயலென்றும், உன் வாழ்நாளின் கடைசி செயலென்றும் நினைத்து அதை நல்ல விதமாய்ச் செய்.

செபம்

**இயேசுவின் திருஇருதயமே! உம்முடைய இராச்சியம் வருக.**

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*
*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 14-ம் தேதி ******************************



## இயேசுவின் திருஇருதயம் நசரேத்து வாழ்வில் நமக்கு முன்மாதிரிகை

மோட்சத்தில் வாழும் புனித மூவொரு கடவுளின் வாழ்வை நசரேத்தூரில் வாழ்ந்த இயேசுவின் திருஇருதயமானது நல்ல விதமாய்ப் பின்பற்றி நடந்தது. அங்கே பிதா, சுதன், தூயஆவி ஆகிய மூவரும் நித்திய அன்பால் ஐக்கியமாகி பேரின்ப பாக்கியத்தில் குடிகொண்டிருக்கிறார்கள். கடவுள் மனிதர் பேரில் தாம் வைத்த அளவற்ற பெருக்கத்தால் அவர்களைச் சுபாவத்துக்கு மேலான நிலைக்கு உயர்த்தி தமது தத்துப் பிள்ளையாக மாற்றி தமது தெய்வீக குடும்பத்தின் அங்கத்தினராகச் செய்திருக்கிறார்.

திவ்விய இயேசு இவ்வுலகத்துக்கு வந்து முப்பத்து மூன்று ஆண்டு நசரேத்தூரில் தமது திருத் தாயோடும், புனித சூசையப்பரோடும் வாழ்ந்து புனித சூசையப்பருக்கும், குடும்பத்துக்கடுத்த வேலையில் தூய கன்னி மாதாவுக்கும் உதவி புரிந்து வந்ததற்குக் காரணம், அவர்களை அன்புச் செய்து அவர்களுக்குப் பணிந்து ஊழியம் செய்யவேண்டுமென்பது மட்டுமல்ல; நம்மைத் தமது சுவீகார சகோதரர்களாக்கி தேவ திருக்குடும்பத்தின் மேலான வாழ்வில் பழக்கி, அக்குடும்பத்தின் புண்ணியங்களையும் பரிசுத்ததனத்தையும் இவ்வுலகத்தில் நாம் கடைப்பிடிக்க வேண்டிய வழியைக் கற்றுக்கொடுக்க வேண்டுமென்பதே அவருடைய கருத்து. நமது சாதாரண செயல்களைப் புனிதப்படுத்தும் விதத்தை திவ்விய இயேசு நாசரேத்தூரில் தமது திவ்விய மாதிரிகையால் நமக்கு அறிவித்திருக்கிறார். தாழ்மையும் கஷ்டமுமுள்ள கைத்தொழிலால் தமது பரமதந்தைக்கு பூரிப்பு வருவித்து அவரை மகிமைப்படுத்த தமது வாழ்நாளின் பெரும்பாகமாகிய முப்பது வருடத்தை செலவழித்தார். புனிதத்தன்மை எல்லாராலும் அடையக் கூடுமென்றும், வீண் பெருமையால் தீங்குவிளையக்கூடிய பெரிய காரியங்களிலும், பிரபல்யமான செயல்களிலும் அது அடங்கினதல்லவென்றும் கற்பிக்கச் சித்தமானார். நாம் தினந்தோறும் செய்கிற சாதாரண அலுவல்களை உத்தமமாய்ச் செய்து முடிப்பதிலும், விவிலியம் திவ்விய இயேசுவைப்பற்றி அவர் எல்லாம் நன்றாய்ச்செய்தார் என்று உச்சரிக்கும் வாக்கியம் நம்மில் பூரணமாய் நிறைவேறும்படி

செய்வதிலுந்தான் புனிதத்தன்மை அடங்கியிருக்கிறது. ஆதலால் நம்முடைய செபமும், வார்த்தையும், செய்கையும் எவ்வளவு உத்தமமாயிருக்கவேண்டுமென்றால் இயேசுவின் திருஇருதயமானது எப்படி செபம் பண்ணினதோ, எப்படி வேலை செய்ததோ, அப்படியே நாமும் செய்கிறோமென்றும், அவர் நசரேத்தூரில் வாழ்ந்த வாழ்வுதான் நாமும் வாழுகிறோமென்றும் எதார்த்தமாய்ச் சொல்லவேண்டும். சாதாரணக் காரியங்களைச் சுபாவத்துக்கு மேலான உத்தமமாய்ச் செய்வதில்தான் தூயதன்மை அடங்கியிருக்கிறது என்று புனித பொன்வெந்தூர் சொல்லியிருக்கிறார்.

செபம் பண்ண நேரமில்லையென்று சாக்குப்போக்கு சொல்லுகிற கிறிஸ்தவர்கள் தான் ஒவ்வொரு நாளிலும் எத்தனை மணி நேரங்களை வீண் பேச்சிலும், உபயோகமில்லாத வேலைகளிலும் செலவழித்து, வீண்காலம் போக்குவார்கள்! அவர்கள் செபம்பண்ணத் தடையாயிருக்கிறது நேரத்தின் குறைவல்ல, நல்ல மனதின் குறைவுதான். உறுதியான மனதும், உண்மையான பக்தியும் அவர்களிடத்தில் கிடையாது. நம்முடைய இருதயத்தை இயேசுகிறிஸ்துவின்பால் எழுப்பி, நம்முடைய அன்றாட அலுவல்களை அவருக்கு ஒப்புக்கொடுக்க அதிகநேரம் தேவையில்லை. நசரேத்தூரில் காலையில் எழுந்திருந்ததும் திவ்விய இயேசுவின் முதல் நினைவும் செயலும் ஏதென்றால், தமது பிதாவுக்கு முன்பாக தமது மாதாவோடும், தம்மை வளர்த்த தந்தையான புனித சூசையப்பரோடும், சாஷ்டாங்க தெண்டனிட்டு அவர் தங்களுக்குச் செய்த சகல உபகாரங்களுக்கும் நன்றி செலுத்தி, தங்களுடைய செயல்களையெல்லாம் உலக மீட்புக்காக ஒப்புக்கொடுப்பதேயாகும். நாமும் அவருடைய திவ்விய மாதிரிகையைப் பின்பற்றி நடப்போமாக.

நல்ல கிறிஸ்தவன் விவிலியக்கோட்பாடுகளை கடைப்பிடிக்க எப்படி நடக்கவேண்டும் என்று இயேசுக்கிறிஸ்துநாதர் தாமே நமக்கு அறிவித்திருக்கிறார். *நீங்கள் தர்மம் செய்யும் போது, உங்கள் வலக்கை செய்வது இடக்கைக்கு தெரியாதிருக்கட்டும்* ***(மத்தேயு6:3)*** என்று திருவுளம் பற்றுகிறார். இதற்கு அர்த்தம் ஏதென்றால், நீ ஒரு நற்செயல் செய்யும்போது உன் வீண்மகிமைக்காகவும், மனிதர்கள் உன்னைப்புகழ்ந்து கொண்டாடும்படியிருக்கவும் செய்யாமல், கடவுளுடைய மகிமைக்காகவும் பிறருடைய ஆத்தும மீட்புக்காகவும் செய், மோட்சத்தில் உனக்கு பலன் கிடைக்கும் என்கிறார். நாம் செய்கிற நற்செயல்கள் நித்தியத்தியன் விதையென்று புனித பெர்நர்து சொல்லுகிறார். விதை விதைக்கிற குடியானவன், தான் விதைக்கிற சிறு விதையானது மிகவிரைவில் ஏராளமான பலன் கொடுக்குமென்று அறிந்திருக்கிறான். கிறிஸ்தவர்கள் நித்திய மகிமைக்காக விதை

விதைக்கிறவர்கள். திருஇருதய அன்புக்காக செய்கிற நமது நற்செயல்கள் நாம் மோட்சத்தில் அநுபவிக்கப் போகிற விலையேறப்பெற்ற பலன்களை நமக்கு விளைவிக்கும்.

ஆதலால் இயேசுவின்திரு இருதயத்திற்கு உன் செயல்களையும், களைப்பு தவிப்பையும் ஒப்புக்கொடுத்து, அதன் அன்புக்காக சகலத்தையும் செய்வாயேயாகில் நீ கூலிக்காரனானாலும் சரி அல்லது அரசு அலுவலனானாலும் சரி, நீ மாணவனானாலும் சரி, நித்திய மோட்சபாக்கியத்தை அடையலாம்.

நசரேத்தூரில் இயேசுவின் திருஇருதயமானது நாம் நமது செயல்களை புனிதப்படுத்தும் விதத்தைக் கற்றுக் கொடுக்கிறதுமல்லாமல், தாழ்ச்சி, கீழ்ப்படிதல், பிறரன்பு, தரித்திர அன்பு, இவ்வுலக காரியங்களின்மேல் பற்றுதலில்லாமை, ஆண்டவருடைய ஊழியத்தில் உறுதியான பிரமாணிக்கம், கடவுளுடைய தோத்திரத்தின் பேரிலும், ஆத்தும மீட்பின் பேரிலும் மிகுந்த பற்றுதல் முதலிய புண்ணியங்களையும் படிப்பிக்கிறது.

**வரலாறு**

இயேசுவின் திருஇருதயமானது புனித மார்கரீத் மரியம்மாளுக்குக் கொடுத்த வாக்குறுதிகளில் எந்தெந்த இடங்களில் நமது இருதயத்தின் சாயலான படங்களை நிறுவி வழிபட்டு வருகிறார்களோ அந்த இடங்களையெல்லாம் நாம் ஆசீர்வதித்துக் காப்பாற்றுவோம் என்பது ஒன்று. பின்வரும் நிகழ்ச்சி இந்த வாக்குறுதியில் மிக்க உரித்தான சான்றாகும்.

மதுரை மிஷனைச்சேர்ந்த அய்யம்பாளையம் என்னும் ஊரில் சில வருடங்களுக்கு முன் ஒரு பிற மதத்தவர் மனந்திரும்பி தன் குடும்பத்தோடும், பிள்ளைகளோடும், அப்போது சிலுர்க்குவார்பட்டியிலிருந்த குருவானவரிடம் திருமுழுக்கு பெற்றார். இந்தப் புதுக்கிறிஸ்தவன் தான் சேர்ந்த இந்தப் புது மதத்தின் மட்டிலும் நல்ல கிறிஸ்துவனுக்குரிய கடமைகள் மட்டிலும் மிக பிரமாணிக்கமாயிருந்தான். ஒருநாள் பங்கு குரு அவனுக்கு ஓர் அழகான இயேசுவின் திருஇருதயப்படத்தைக் கொடுத்து, உன் வீட்டில் ஒரு நல்ல இடத்தில் இந்தப் படத்தை நிறுவி அதன்முன் நாள்தோறும் அடிக்கடி சில செபங்கள் சொல்லிவா; அப்போது இயேசுவின் திருஇருதய ஆசீர்வாதமும் ஆதரவும் உன் குடும்பத்தின் பேரிலும், உன்வீட்டின்பேரிலும், இறங்கி வருமென்பதை உறுதியாய் நம்பு என்று சொன்னார். குருவானவர் விருப்பப்படி இந்தப் புதுக் கிறிஸ்தவனும் நடந்துவந்தான்.

இந்தப் புதுக்கிறிஸ்தவன் நாள்தோறும் தன் குடும்பத்தோடு அருகாமையிலிருந்த மணலூர்மலைக் காப்பித்தோட்டத்தில் போய் வேலை செய்து வந்தான். அங்கே அவன் வேலை செய்துகொண்டிருந்த ஒருநாள் அவன் கிராமத்தில் நெருப்புப்பிடித்து எல்லா வீடுகளும் எரிந்துபோனது. மாலைப்பொழுதில் வீட்டுக்குத் திரும்பி வந்தபோது ஒரே ஒரு வீடு மாத்திரம் நெருப்புப்பற்றாமல் நிலைத்திருப்பதைக் கண்டான். அருகில் வந்து பார்க்கும்போது அது அவனுடைய சொந்த வீடுதான். அந்தநாள் முழுவதும் வீடு அடைத்துக்கிடந்தது. அது கூரைவீடு. அகோர நெருப்பிலிருந்து அதைக் காப்பாற்ற வீட்டில் ஒரு ஆளுமில்லை, இயேசுவின் திருஇருதயந்தான் ஆச்சரியத்துக்குரிய விதமாய் தன்வீட்டைக் காப்பாற்றினதன்று நிச்சயித்து, அத்திரு இருதயப் படத்திற்கு முன்பாக தெண்டனிட்டு தன் முழு இருதயத்தோடு ஆயிரம் முறை அவருக்க நன்றி சொல்லி அவருக்கு முன்னிலும் இன்னும் அதிக பிரமாணிக்கமுள்ள ஊழியனாய் நடப்பதாக வாக்குக்கொடுத்தான். இந்த வாக்குறுதி தவறாமல் சாகும்வரை சகலருக்கும் நன்மாதிரியாக நடந்துவந்தான்.

இவ்வுலக நெருப்பைவிட மிக பயங்கரமான நெருப்பாகிய நரக நெருப்பிலிருந்து இயேசுவின் திருஇருதயமானது நம்மை ஆதரித்துக் காப்பாற்றும்படி அக்கருணைக்கடலை இரந்து மன்றாடுவோமாக.

**சிந்தனை**

என்னுடைய குற்றங்குறைகளைப் பாராமல் நான் பிறந்த நாள்முதல் என் வாழ்நாளெல்லாம் அயராமல் என்பேரில் அன்பார்ந்த கவலைகொண்டிருந்த என் பரோபகாரிக்கு நான் எப்படி போதுமானவரையில் நன்றியறிந்திருப்பேன். இயேசுவின் திருஇருதயம் ஓர் அன்பு பாதாளம். அந்தப் பாதாளத்திலே நம்மிடத்திலுள்ள மற்றெந்த அன்பும் அமிழ்ந்திப்போகவேண்டும். விசேஷமாய் நம்மிடத்திலுள்ள சுயஅன்பு அதின் துர்க்கனிகளாகிய முகத்தாட்சண்யமும், மற்றவர்களுக்கு மேலாய் நம்மை உயர்த்தவேண்டுமென்கிற ஆசையும், நம்முடைய சுயநாட்டங்களைப் பின்பற்றுதலும் ஆகிய இவைகளெல்லாம் அந்த அன்புக்கடலில் சிதைந்துபோகவேண்டும்.

செபம்

**இருதயத்தில் தாழ்ச்சியும் சாந்தகுணமுமுள்ள இயேசுவே, என் இருதயம் உமது இருதயம்போல ஆகச் செய்தருளும்.**

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

# 15 ம் தேதி



## இயேசுவின் திருஇருதயம் தேவ வணக்கத்துக்கும் தேவ பயத்துக்கும் ஆசிரியர்

இயேசுவின் திருஇருதயப் பக்தியானது தேவ அன்பின் பக்தி, அன்புக்கு தேவபயமும் தேவ வணக்கமும் அடித்தளம். இவற்றிலிருந்து தேவ அன்பைப் பிரிக்கமுடியாது. தன் தாய் தகப்பனை உருக்கமாய் அன்புச் செய்கிற குமாரன் அவர்களுக்குச் சகலத்திலும் கீழ்ப்படிந்து மரியாதை செய்து அவர்களுக்கு யாதொரு வருத்தம் வருவியாமலும் அவர்களுடைய துன்பத்துக்கு காரணமாயிராமலும் நடந்து தன்னாலியன்றவரையில் அவர்களின் விருப்பப்படி நடப்பான். திவ்விய மீட்பர் இவ்வுலகத்தில் வாழ்ந்த காலத்தில் அவருடைய திரு இருதயமானது நடந்துகொண்ட விதத்தைக் கவனித்துப் பார். தமது திவ்விய பிதாவின்மட்டில் எவ்வளவு மரியாதை, எம்மாத்திரம் வணக்கம், ஆராதனை காண்பித்துவந்தார்; தமது பிதாவின் மகிமையைத் தேடுவதிலும், அவருடைய திருச்சித்தத்தை நிறைவேற்றுவதிலும், தேவ மகத்துவத்துக்கு எது உகந்ததோ அதை எப்போதும் செய்வதிலும், எவ்வளவு ஞான ஆவல் காண்பித்தார்!

ஆண்டவருக்கு நாம் காண்பிக்கவேண்டிய அன்பைப் பற்றிப் பேசாமல், அவருக்குக் காண்பிக்கவேண்டிய மரியாதை வணக்கத்தைப் பற்றிச் சில கன்னியர் எப்போதும் பேசிக்கொண்டிருக்கிறதைக் கண்ட புனித மார்கரீத் மரியம்மாள் இயேசுவின் திருஇருதயத்தை நோக்கி ஒருநாள் முறையிடுகையில், திவ்விய இரட்சகர் புனிதையை நோக்கி : மகளே, அன்பின் பரிசுத்த பாசத்தால் நீ நமது இருதயத்தை அணுகிவர நாம் உனக்கு ஓர் விசேஷ வரமளிக்கிறோமென்பது உண்மை என்றாலும் நமது அளவற்ற தேவ மீட்பின் மட்டில் மரியாதையும், பயமும், வணக்கமும் இருக்கவேண்டும். ஆதலால் அந்தக் கன்னியர்களுடைய நடபடிக்கை உமக்கு விருப்பமானதுதான் என்று திருவுளம் பற்றினார்.

ஆதலால் தேவ பயமும், மரியாதை, வணக்கமும் நமக்குப் பயனும் தேவையுமானது. ஏனென்றால் ஒரு பக்கத்தில் பாவியானவன் எதிர்பார்க்கிற தீர்வை, நரகம் இவைகளின் பயமும், வேறோர் பக்கத்தில் அளவற்ற மகத்துவமான இரக்கம் நிறைந்த நமது அன்புக்குரிய ஆண்டவர் பேரில் நமக்குள்ள மரியாதை வணக்கமும், பாவத்தைப் பகைத்து வெறுக்க உதவுகிறதென்பதற்குச் சந்தேகமில்லை. இந்தத்

தேவ பயமானது நாம் உறுதிபூசுதல் பெறும்போது நாம் அடைகிற தூயஆவியின் ஏழுவரங்களில் ஒன்று. இது நம்முடைய புனிதப்படுத்தலுக்கு அடித்தளமாயிருக்கிறது. மெய்யாகவே தேவபயமானது பாவத்திலிருந்து நம்மை விலக்குகிறதுமல்லாமல், நாம் தேவஅருளை அடையவும், கிறிஸ்தவனுக்குரிய புண்ணியங்களை அனுசரித்து நமது ஆண்டவருக்கு மாறாத அன்போடு ஊழியம் செய்யவும் நமது ஆத்துமத்தை ஆயத்தப்படுத்துகிறது. ஆனதுபற்றியே தூயஆவியானவர் *ஆண்டவருக்கு அஞ்சி நடப்போர் பேறுபெற்றோர்;* (திருப்பாடல்கள் 112 : 1) என்று திருவுளம்பற்றுகிறார்.

தேவபயத்தில் இரண்டுவிதமுண்டு. ஒன்று தீமையும் கெடுதலுமானது. மற்றொன்று பிரயோஜனமும் அடிமைகளுக்கு உரியது. அவர்களுடைய மனது துர்மார்க்கத்தில் மூழ்கியிருக்கிறது. என்றாலும் அடிமைகளைப்போல் கடூர தண்டனைக்குப் பயந்து குற்றம் செய்யாமலிருக்க முயற்சிப்பார்கள். இதேவிதமாய் சில கிறிஸ்தவர்கள் வாழ்கிறார்கள். தேவ நீதியின் கோபாக்கினை தங்கள் மேல் விழுந்து தங்களை எங்கே நரகபாதாளத்திலே தள்ளிவிடுமோவென்று பயந்து பாவத்தைத் தவிர்ப்பார்கள். ஆனால் தண்டனைக்குப் பயந்து பாவத்தை விலக்குவார்கள்; ஆனால் பாவத்தின் மேல் பற்றுதல் வைத்திருப்பார்கள். தங்களுடைய நடத்தை கடவுளுக்கு சிறிதளவும் பொருந்தாதென்று அவர்கள் அறிந்திருந்தாலும், ஆசாபாசங்களுக்கும், சாவான பாவங்களுக்கும், தங்கள் வாழ்வைக் கையளிக்க விரும்புவார்கள். இவ்வித அச்சத்தில் தேவ அன்பு என்பது கடுகளவுமில்லாததால் இது தீமையானதுதான்.

நன்மையும் பயனுமுள்ள தேவபயத்தில் அடிமைகளின் பயம், பிள்ளைகளின் பயம் ஆகிய இரண்டு படிகளுண்டு. அடிமைகளின் பயத்தைக் கொண்டிருக்கிற ஆத்துமமானது பாவத்தைப் பகைத்து அருவருத்துத் தள்ளுகிறது. ஏனெனில் பாவமானது தன்னை மோட்ச சம்பாவனையிலிருந்து விலக்கி முடிவில்லா நரகாக்கினைக்குத் தன்னை ஆளாக்கிவிடுமென்று ஆத்துமம் உணர்ந்திருக்கிறது. இந்தப் பயத்தை அஸ்திவாரமாகக் கொண்டிருக்கும் மனஸ்தாபம் அடிமை மனஸ்தாபம் எனப்படும். இந்த மனஸ்தாபம் பாவ கேடுகளை நீக்கவேண்டுமானால் குருவானவரிடமிருந்து ஒப்பரவு ஆசீர்வாதம் பெறுவது அவசியம். ஆனால் பிள்ளைகளின் பயமும் நாம் பாவத்தைப் பகைத்து அருவருக்கச் செய்கிறது. இவ்வித அருவருப்புக்குக் காரணம் நரகாக்கினையல்ல; மட்டில்லாத அன்புக்கு தகுதியான இயேசுவின் திரு இருதயத்துக்குப் பாவமானது துக்கம் வருவிக்கிறதே என்கிற நினைவே இதற்குக் காரணம். தகப்பன் தன்னைத் தண்டிக்கமாட்டாரென்று அறிந்திருந்தாலும், அவருக்குச் சற்றேனும் வருத்தம் வருவிக்கக்கூடிய

எதையும் வெகு கவனமாய் விலக்குகிற அன்புள்ள பிள்ளையின் பயம் இதுவே. இந்த நல்ல பிள்ளைக்கு வரக்கூடிய பெரிய கவலை, துன்பம் ஏதென்றால், தன் அன்பார்ந்த நல்ல தகப்பனுடைய இருதயத்துக்கு வருத்தம் வருவித்தேனே என்னும் நினைவுதான்.

இயேசுக்கிறிஸ்துவின் உண்மையான அன்புள்ள உத்தம கிறிஸ்தவர்கள் தாழ்ச்சி வணக்கத்தோடு தேவ சந்நிதியில் வாழ்கிறார்கள். தாங்கள் செபம் பண்ணும்போது மகாத்துமாவாகிய ஆபிரகாம் என்பவரின் மாதிரியாக நான் சாம்பலும் தூசியுமாயிருந்தாலும் நான் என் ஆண்டவரோடு பேசுவேன் என்று வணக்கத்தோடும் நம்பிக்கையோடும் வேண்டிக்கொள்வார்கள். நல்ல கிறிஸ்தவர்கள் மற்ற மனிதர்கள் மட்டிலும் விசேஷமாய் இயேசுவின் பிரதிநிதிகளாகவும் அவருடைய தெய்வீக அதிகாரத்திற்கு பங்காளிகளாகவும் விளங்குகிற குருக்கள் ஆயர்கள் மட்டிலும் சங்கை வணக்கம் புரிவார்கள். இவ்வித உத்தம பற்றுதல்களோடு வாழும்படி இந்தக் கிறிஸ்தவர்களைத் தூண்டுவது அவர்களிடத்திலுள்ள உயிருள்ள விசுவாசமேயாகும்.

தேவ பயமில்லாத கிறிஸ்தவர்களுடைய வாழ்வு இதற்கு நேர்மாறானது! தேவ ஊழியத்தில் எவ்வளவு கவனமின்மை, ஞானக் காரியங்களை நிறைவேற்றுவதில் எவ்வளவு தாமதம்! கடவுளுக்கு மிக்க துன்பம் வருவிக்கக்கூடிய சிந்தனை, வாக்கு செயல்கள் எத்தனை? தங்கள் சுபாவ தீய நாட்டங்களுக்கு எவ்வளவு சுலபமாய் இணங்குகிறார்கள்! தனியாகவும், மற்றவர்களோடு சேர்ந்தும் கட்டிக் கொள்ளுகிற பாவாக்கிரமங்கள் எத்தனை? இந்த அக்கிரம பாவங்களைத் தவத்தால் பரிகாரம் செய்கிறார்களா? தாங்கள் நினையாமுன்னேதானே தங்கள் ஆண்டவருக்கு தாங்கள் கொடுக்கவேண்டிய கண்டிப்பான கணக்கைப்பற்றிச் சிறிதும் கவனிக்கிறார்களா? இவ்விதமாய் வாழ்கிறவர்களைப் பற்றி தூயஆவியானவர் *ஞானமுள்ளவர் விழிப்புடையவர்; தீமையை விட்டு விலகுவர். மதிகேடரோ மடத்துணிச்சலுள்ளவர்; எதிலும் பாய்வர் (நீதிமொழிகள் 14 : 16)* என்று திருவுளம் பற்றுகிறார்.

பெரிய திருத்தூதரான புனித பவுலடியார் விண்ணகத்தின் உன்னத பதவியில் சேர்ந்திருந்தாலும் தன் பழைய பாவங்களைப் பரிகரிக்க மிகக் கடினதபசு செய்துவந்தார். கொரிந்தியருக்கு அவர் எழுதின முதல் நிருபத்தில் *பிறருக்கு நற்செய்தியை அறிவிக்கிற நானே தகுதியற்றவனாக மாறிவிடாதவாறு என் உடலை அடக்கிக் கட்டுப்படுத்துகிறேன் (1கொரிந்தியர் 9 : 27)* என்கிறார்

**வரலாறு**

புனிதர்கள் அனைவரும் புனித பவுலைப் போல் நடந்தார்கள். புனிதத்திலும் தேவ அன்பிலும் அதிகமாய் விளங்கின புனித தெரேசம்மாள் வாலிபப் பிராயத்தில் சிற்சில உலக சில்லறைப் பற்றுதல்களுக்கும் ஆண்டவருடைய ஊழியத்தில் கவனக்குறைவான தன்மைக்கும் இடங்கொடுத்து வந்தார். ஒருநாள் திவ்விய இரட்சகர் தெரேசம்மாளுக்கு நரகவாசலைத் திறந்து காண்பித்து இதோபார், நீ புனிதவாழ்வுக்கும் புண்ணியப் பயிற்சிக்கும் உன்னைக் கையளிக்காத பட்சத்தில் இந்த பயங்கரமான இடத்தில் உன்னைத் தள்ளுவேன் என்றார்.

தெரேசம்மாள் இதைக்கண்டு எவ்வளவு பயப்பட்டாரென்றால் இந்தக் காட்சியை அவர் ஒருபோதும் மறந்ததேயில்லை. சோதனையால், தான் அலைக்கழிக்கப்படும்போது நரகத்தின் பயங்கரமான காட்சியை நினைவுகூர்ந்து தேவ அன்பானது பாவத்தில் விழாதபடி என்னைத் தடுக்கப் போதாதிருக்கும் பட்சத்தில் நரகத்தின் ஞாபகமாகிலும் நான் பாவத்தில் விழாதபடி என்னைத் தடைசெய்யக்கடவது. அன்புக்குப் பாத்திரமான இயேசுவின் திருஇருதயத்துக்கு சொற்ப வருத்தம் வருவிக்கிறதைவிட சாகத் தயாராயிருக்கவும், இந்த நரக பயம் எனக்கு உதவி செய்யக்கடவது என்பார்.

நாமும் நம்முடைய பாவங்களால் நமக்காக நரகத்தில் தயார் செய்யப்படும் இடத்தை அடிக்கடி நினைக்கக்கடவோம். நாம் நமது பாவங்களைப் பரிகரித்து தேவ பயத்தோடு நமது ஆத்துமத்தை மீட்க கருதுவோமாகில் இயேசுவின் திருஇருதய இரக்கத்தால் அந்தப் பயங்கரமான இடத்திலிருந்து நாம் தப்பிப் பிழைப்போமென்பதற்குச் சந்தேகமில்லை.

சாகப்போகிற கிறிஸ்தவர்களின் உறவினர், நோயாளி தன் புத்தி ஞாபகத்தை இழக்குமட்டும் காத்திராமல், தக்க நேரத்தில் குருவானவரைக் கூப்பிடுவது தங்களுடைய முதல் கடமையென்று உணரக்கடவார்கள். நோயாளி புத்தி நினைவோடிருந்தால் நல்ல ஒப்புரவு செய்து கடவுளோடு சமாதானமாய்ப் போகும்படி குருவானவர் உதவி செய்வார். அவனுடைய உறவினர்களும் சாகப்போகிறவனுடைய ஆத்தும மீட்புக்கு உதவிசெய்தவர்களாகயிருப்பார்கள். கண்ணீர், அழுகைப் பிரலாபம் இவைபோன்ற உதவியே வெளியடையாளங்களைவிட, ஆத்தும ஈடேற்ற உதவியே தங்களுக்கு அவன்பேரிலுள்ள மெய்யான பற்றுதலைக் காட்டும். வயது சென்றவர்கள் மரணத்தருவாயிலிருக்கும் போது நேரத்தோடு குருவானவரைக் கூப்பிடுகிற வழக்கம் அநேக குடும்பங்களிலிருக்கிறது. ஆனால் எட்டு ஒன்பது வயதுள்ள பிள்ளைகள் அல்லது வாலிபர்கள் சாகுந்தருவாயிலிருக்கும்போது குருவானவரைக்

கூப்பிட அநேகர் நினைக்கிறதேயில்லை. எட்டு ஒன்பது வயதுப் பிள்ளைகளுக்குக் குருவானவர் தேவையில்லையென்று நினைக்கிறது சரியல்ல. புத்திவிபரம் அறிந்த பிள்ளை சாவான பாவத்தைக் கட்டிக்கொள்ளக்கூடும். முதுமைப் பருவமுள்ள கிறிஸ்தவர்கள் தங்கள் வாழ்வின் துவக்கத்தை நினைக்கையில் அப்பிராயத்தில் தாங்கள் கட்டிக் கொண்ட அநேக கனமான பாவதோஷங்களை ஞாபகப்படுத்தி, எவ்வளவு சொற்பப் பிராயம், எவ்வளவு பெரிய பாவி என்ற புனித அகுஸ்தீனுடைய வாக்கியத்தைத் தங்களுக்கும் சொல்லிக்கொள்ளலாம். பெரியவர்களுக்குக் குருவானவர் தேவையென்பதைவிட சிறுவர்களுக்கு அதிக தேவையென்று சொல்லவேண்டும். அவர்களுக்கு உத்தம மனஸ்தாபப்படத் தெரியாததால் நித்தியத்துக்கும் அவர்கள் மோசம்போகக்கூடும். தாய் தந்தையர் குருவானவரை நேரத்தோடு கூப்பிடுவதால், தங்கள் பிள்ளைகள் பேரில் தாங்கள் வைத்த உண்மையான அன்பைக் காண்பிக்கிறார்கள். குருவானவர் உடனே வரக்கூடாவிட்டால் தாய் தகப்பன் தங்கள் பிள்ளை உத்தம மனஸ்தாபப்பட உதவி செய்யவேண்டும். இவ்வகையாய் சாகப்போகிற தங்கள் பிள்ளையின் ஆத்துமத்தை மீட்க உதவி செய்யலாம். இயேசுவின் திருஇருதயப் பக்தர்களனைவரும் இந்தத் தீர்மானம் செய்து இதன்படி உறுதியாய் இருப்பார்களாக!

**சிந்தனை**

சிலுவையில்லாமல் அன்பில்லை. இது நமது ஆண்டவர் சிலுவை மரத்திலிருந்து நமக்குக் கற்பித்த பாடம். பரிசுத்த பரம திவ்விய நற்கருணையிலிருந்து கொண்டும் இதைத்தான் இப்போதும் கற்பித்து வருகிறார். இந்த அன்புத் தேவதிரவிய அருள்சாதனத்திலிருந்து கொண்டு நம்முடைய வாழ்வு அவருடைய வாழ்வோடு ஒத்திருக்கவேண்டுமென்று மிக ஆசிக்கிறார். அன்புக்கு எல்லாம் எளிது. படைப்புகளுக்கு மேலாய் படைத்தவரையும், தற்காலத்துக்கு மேலாய் நித்தியத்தையும் நீ தெரிந்து கொள்ள அறிகிறவரையில் கடவுளை நீ ஒருபோதும் அன்புச் செய்யமாட்டாய். நமது முழு இருதயத்தையும், பற்றுதல்களையும், ஆசைகளையும், அவருக்குக் கொடுக்கக்கடவோம். அப்படி கொடுத்தால் நம்முடைய வெதுவெதுப்பான இருதயத்தைத் தமது அக்கினியால் பற்றியெரியச் செய்வார். அவருடைய ஊழியத்தில் நம்மைக் கவனகுறைவுள்ளவர்களாக்குகிற மனத்தளர்ச்சியை நீக்கி நம்மை உற்சாகப்படுத்துவார்.

செபம் : **இயேசுவின் இனிய இருதயமே! என் அன்பாயிரும்.**
**புனித மரியாயின் மாசற்ற இருதயமே! எங்களுக்காக மன்றாடும்.**

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

# 16-ம் நாள் *****************************



## இயேசுவின் திருஇருதயம் நமது புண்ணிய வளர்ச்சிக்கு மாதிரிகை

நமது ஞானப் பலவீனத்தை அறிந்திருக்கும் இயேசுவின் திரு இருதயமானது நாம் நாள்தோறும் புண்ணிய நெறியில் நடந்து வளர்ச்சியடையும்படி நமக்குத் திவ்விய மாதிரிகையாயிருக்க அருள் புரிந்தார். அளவில்லாத ஞானமும், புனிதத்தனமும் அவரே என்றாலும், நம்முடைய நலனுக்காக நாம் நடக்கவேண்டிய விதத்தைப் படிப்பிக்கத் தாமே புண்ணிய பாதையில் வளர்ச்சியடைவதாகக் காணப்படச் சித்தமானார். ஆனதுபற்றியே *இயேசு ஞானத்திலும் உடல்வளர்ச்சியிலும் மிகுந்து கடவுளுக்கும் மனிதருக்கும் உகந்தவராய் வாழ்ந்துவந்தார் (லூக்கா 2 : 52)* என்று விவிலியத்தில் வாசிக்கிறோம்.

கிறிஸ்தவர்களனைவரும் இயேசுக்கிறிஸ்துநாதர் பாவனையாக வயதிலும் பலத்திலும் அதிகரிக்க, அதிகரிக்க, புண்ணியத்திலும், ஞானக்காரியங்களிலும் வளர்ச்சியடையவேண்டும். பிள்ளை வளராமலும் பலவீனமாயுமிருந்தால் அதனுடைய உடல்நலத்தைப் பற்றித் தாய் தந்தையருக்கு கரிசனையுண்டாகும். பலஆண்டு பள்ளிக்கூடத்தில் படித்தபையன் சற்றும் படிப்பில் முன்னேற்றமடையாமல் முட்டாளாயிருந்தால் ஒன்றுக்கும் உதவாதவனென்று ஆசிரியர் அவனை வீட்டுக்கு அனுப்பிவிடுவார். நட்ட மரக்கன்று பல ஆண்டுகாலத்துக்குப் பின்பும் வளர்ச்சியடையாமலிருந்தது போலிருந்தால் விவிலியத்தில் சொல்லப்பட்ட காய்க்காத அத்திமரம்போல் தோட்டக்காரன் நட்ட மரத்தை வெட்டி வெளியே எறிவான். பக்தியில் வளர்ச்சியடையாமலும், புண்ணிய பலன் கொடாமலும் வாழுகிற கிறிஸ்தவர்களுடைய கதியும் இதுவே.

ஆனால் வளர்ச்சியடைவதும் அடையாததும் எப்படித் தெரியும்? புண்ணியப்பயிற்சியில் உண்டாகிற இடையூறுகளை உணருவதினால் நாம் வளர்ச்சியடைகிறதில்லையென்று சொல்லமுடியாது. தங்கள் பாவநாட்டங்களை அடக்கி ஜெயிப்பதில் சில கிறிஸ்தவர்கள் மற்றவர்களைவிட அதிகமாய்ப் போராடவேண்டியிருக்கும். அவர்கள் சிலசமயம் குற்றங்குறைகளினால் தவறினாலும் தங்கள் முயற்சியால் வளர்ச்சியடைவார்கள். நமது பாவநாட்டங்களோடு தொடர்ந்து போராடி, நமது குற்றங்களின் எண்ணிக்கையை நாளுக்குநாள் குறைத்து, விழிப்பாயிருந்து, செய்யவேண்டிய ஞானமுயற்சிகளைச் சரிவரச் செய்து,

தக்க ஆயத்தத்தோடு அருட்சாதனங்களைப் பெற்று, நம்மை முழுதும் தேவ ஊழியத்துக்குக் கையளிப்பதிலேதான் புண்ணிய அபிவிருத்தி அடங்கியிருக்கிறது. தீய எண்ணத்தாலும் வேண்டுமென்கிற கவனக்குறைவாலும் இல்லாமல் பலவீனத்தால் மாத்திரம் கட்டிக்கொண்ட குற்றங்களிடமாயும் நாம் பலன் அடையலாம். தவறினேன் என்று அறிந்த மாத்திரத்தில் இயேசுவின் திருஇருதயத்துக்கு முன்பாக நமது இருதயத்தை எழுப்பி, நம்பிக்கையோடும் அன்போடும் அவருடைய மன்னிப்பைக் கெஞ்சி மன்றாடி, இனி ஒருபோதும் பாவத்தைச் செய்யாமலிருக்க என்னாலான முயற்சிசெய்வேனென்று முடிவு செய்வதே சிறந்த பலனை அடைய எற்றவழியாகும்.

தலைமை திருத்தூதரான புனித பேதுரு தன்பேரில் மிதமிஞ்சின நம்பிக்கை வைத்திருந்தார். ஆனால் ஆண்டவரை மும்முறை மறுதலித்த பிறகு அவர்பட்ட மனஸ்தாபமும் வெட்கமும் அவருடைய இருதயத்தில் எம்மாத்திரம் குடிகொண்டிருந்த தென்றால் அவர் திருச்சபைக்குத் தலைவராகவும், இயேசுக்கிறிஸ்து நாதருக்குப் பதிலாளியாகவும் உயர்த்தப்பட்டாலும், தான் எல்லா திருத்தூதர்களிலும் கடைசியென்கிற தாழ்மையான எண்ணம் அவருடைய உள்ளத்தைவிட்டு ஒருபோதும் நீங்கவில்லை. இதேவிதமாய் நம்முடைய பலவீனத்தால் நாம் கட்டிக்கொண்ட பாவதோஷங்கள் நம்மிடத்தில் தாழ்ச்சியையும், விழிப்பையும், உருக்கமான ஜெபப்பற்றுதலையும் விளைவித்து, நமது பாவாக்கிரமங்களைப் பாராமல், நமது மேல் எப்போதும் இரங்கி, நமது பாவங்களையெல்லாம் மன்னித்து நம்மை அன்புசெய்கிற கடவுள்மட்டில் நன்றியையும் தாராளகுணத்தையும் உண்டுபண்ணவேண்டும். ஆனால் வேண்டுமென்று மனதுபொருந்தி கட்டிக்கொள்ளுகிற பாவங்களையும், சோம்பல் அசட்டைத்தனத்தையும், பகைத்து வெறுத்துத் தள்ளவேண்டும். இவைகளே தேவ அருட்கொடைக்கு முழுதும் தடையாயிருந்து நம்மை நித்திய ஆபத்துக்களாக்குகின்றன.

தங்கள் ஆத்தும மீட்பு விஷயத்தில் நல்ல மனமுமில்லாத கிறிஸ்தவர்களைப் பின்பற்றி நாம் நடக்கலாகாது. இவர்கள் புண்ணியத்தில் வளர்ச்சியடைவதற்குப் பதிலாய் அதே பாவங்களை மனது பொருந்தி கட்டிக்கொண்டு, மனஸ்தாபப்படாமலும், இனி ஒருபோதும் பாவத்தைச் செய்யமாட்டேனென்கிற உறுதியான தீர்மானம் இல்லாமலும், ஒப்புரவு செய்து நாளுக்குநாள் பாவ வழியில் அமிழ்ந்து வாழ்கிறார்கள். இந்தக் கிறிஸ்தவர்களைப் பின்பற்றுகிறதற்குப் பதிலாய் புனித பேதுருவையும் சகல புனிதர்களையும் பின்பற்றக்கடவோம். அவர்களைப்போல் செபத்தினின்றும், அருட்சாதனங்களிலிருந்தும் நம்முடைய ஞான வளர்ச்சிக்கு தேவையான ஞானத்தைரியத்தைப் பெற்றுக்கொள்வதோடுகூட நித்திய மோட்ச சம்பாவனைகளையும் சுதந்தரித்துக்கொள்வோம்.

இயேசு சபையை நிறுவின புனித இஞ்ஞாசியார் உரோமாபுரியில் இயேசுசபைக்கு தலைவராயிருந்த காலத்தில் சேசுசபை மடத்தில் ரிபதனீரா என்னும் பெயர் கொண்ட பக்தியும் சுறுசுறுப்புமுள்ள ஒரு சிறுவனிருந்தான். இவன் நாள்தோறும் குருமார்களுக்கு பூசைக்கு உதவிசெய்த பிறகு சில சொற்ப வேலைகளைச் செய்துவந்தான். இவன் தன்னைச் சேசு சபையில் ஏற்றுக் கொள்ளும்படி புனித இஞ்ஞாசியாரை கெஞ்சிக் கேட்டுக்கொண்டான். புனித இஞ்ஞாசியார் வயது முதிர்ச்சியாலும் நோயினாலும் கோலைப் பிடித்து மெதுவாக நடப்பார். உடனே புனிதர் சரி, நீ இந்த ஊன்றுகோல் உயரம் எப்போது வளருவாயோ அப்போது சபையில் உன்னை ஏற்றுக்கொள்வேன் என்றார். சிறுவன் பேசாமல் போய தனக்குள் ஆலோசித்தான். புனித இஞ்ஞாசியார் அறையிலில்லாத போது உள்ளே சென்று புனிதர் பார்க்காதவிதமாய் அந்த ஊன்றுகோலில் நாள்தோறும் ஒரு சிறு துண்டை அறுத்து எடுத்து அதன் உயரத்தைச் சிறிது சிறிதாக குறைத்துவிட்டான். பலநாள் இப்படி நடந்தது. புனிதர் ஒன்றும் சந்தேகப்படவில்லை. நாள் செல்லச்செல்ல ஊன்றுகோலின் அளவு குறைந்து ரிபதனீராவுடைய உயரத்தின் அளவு வந்துவிட்டது. பையன் திரும்பவும் புனித இஞ்ஞாசியாரிடம் கேட்டான். புனிதர்: இல்லை, இல்லை, நீ இன்னும் இந்த ஊன்றுகோல் உயரம் வளரவில்லை என, பையன், இல்லை, இல்லை, எங்கே அளந்துபாருங்கள், நான் வளர்ந்துவிட்டேன் என்றான். புனித இஞ்ஞாசியார் அளந்துபார்த்து அப்பையனுக்குச் சேசுசபையில் சேர இருந்த ஆவலைக்குறித்து ஆச்சரியப்பட்டுக் கொண்டார். சரி, நாம் சொன்ன வாக்குப்படி உன்னைச் சேசுசபையில் ஏற்றுக்கொள்கிறோமென்று ஏற்றுக்கொண்டார்.

வளர்ச்சி குறைவாயிருந்தாலும் அதை விடாமுயற்சியோடு தினமும் செய்துவந்தால் எப்படி அநுகூலம் அடைவோமென்பதற்கு இந்த உதாரணமே எடுத்துக்காட்டு. உன் துர்க்குணத்தின் சொற்பப் பங்கை, உன் அசட்டைத்தனத்தின் சிறு பாகத்தை நாள்தோறும் குறைப்பாயேயாகில் ரிபதனீரா என்பவர் தான் மேற்கொண்ட காரியத்தில் சிறந்துவிளங்கினார். இயேசு சபையில் படிப்பிலும், தெய்வபக்தியிலும் சிறந்து விளங்கினது போல் நீயும் புனிதனாவாய் என்பது உறுதி.

**வரலாறு**

இயேசுவின் திருஇருதயத்திற்கு அர்ப்பணிக்கப்பட்டிருந்த தூத்துக்குடி மாநகரின் தேவாலயத்துக்கு இன்று நமது நினைவால் புனித பயணமாய்ப் போவோமாக. இந்தத் தேவாலயம் 1864-ம் வருடம் கட்டப்பட்டது. என்றாலும், பிற்காலத்தில்தான் இது பெரிதாகக் கட்டப்பட்டு அழகுப்படுத்தப்பட்டது. இயேசுவின் திருஇருதயப் பக்தியில் எப்போதும் சிறந்து விளங்கியவர்களான தூத்துக்குடி நகரவாசிகள்

அத்திரு இருதயத்திலிருந்து ஏராளமான அருட்கொடை களை அடைந்ததோடுகூட, புனித சவேரியாருடைய பிரமாணிக்கமுள்ள ஞானப்பிள்ளைகளாகிய அந்தப் பகுதியினர் தங்கள் இருதயத்தில் உயிருள்ள ஆழ்ந்த விசுவாசத்தையும் பெற்றுக்கொண்டார்கள்.

**1917**-ம் வருடம் அம்மாநகரின் தேவாலயத்தில் சிறந்ததோர் பத்துநாள் தியானப்பிரசங்கம் நடைபெற்றது. பிரசங்கம் முடிந்த கடைசிநாளில் ஓர் விசேஷ வழிபாடு நிறைவேறியது. அந்த வழிபாட்டு நிகழ்வுக்கு திருச்சிராப்பள்ளி ஆயர் அவர்கள் வந்திருந்தார்கள். தூத்துக்குடி நகரவாசிகளெல்லோரும் தங்கள் தங்கள் குடும்பத்தை இயேசுவின் திருஇருதயத்துக்கு அர்ப்பணமாக ஒப்புக்கொடுத்தார்கள். இந்த வைபவக் கொண்டாட்டம் இயேசுவின் திருஇருதயப் பக்தியை திரும்பவும் புதுப்பிக்க ஏதுவாயிருந்தது. ஒவ்வொரு குடும்பத்திலும் இயேசுவின் திருஇருதய சாயலான அழகிய படம் ஒன்று வெகு மரியாதையோடு நிறுவப்பட்டது. குடும்பத்தில் யாராவது நோய்வாய்ப்பட நேரிட்டால் அவர் படுக்கையருகில் அவருக்கு ஆறுதலாக திரு இருதயப்படம் ஒன்று வைக்கப்பட்டிருப்பதை இன்றும் அங்கு காணலாம். நோயாளியை மருத்துவமனைக்கு கொண்டுபோக நேரிட்டாலும் அங்கேயும் இயேசுவின் திருஇருதயப்படம் அவன் படுக்கையருகே தொங்குகிறதைக் காணலாம். பக்தியுள்ள கிறிஸ்தவன் இயேசுவின் திரு இருதய நாதரின் அருகிலிருந்துகொண்டே சாகவிரும்புகிறான். சாகுமுன் தன் அன்பராயிருந்து, இறந்தபின் தனக்கு நியாயாதிபதியா யிருக்கிறவருடைய அருகில் சாகிறது எவ்வளவு பாக்கியம்!

நீதி தீர்ப்பிடுகிற இயேசுவின் முன்னிலையில் திருஇருதயப் பக்தி மற்ற நாட்களைவிட தூத்துக்குடி கிறிஸ்தவர்களின் திருஇருதயத் திருநாளன்று அதி உன்னதமாய் விளங்குகிறது. பெருவிழாவிற்கு ஆயத்தமாக நவநாள் செபமும் நவநாள் பிரசங்கமும் திரு இருதய ஆலயத்தில் நடந்தேறி வருகிறது. நவநாட்களின் கடைசி மூன்று நாட்களும் விசேஷ ஆடம்பரமாய்க் கொண்டாடப்படுகிறது. மாலைப்பொழுதில் பிரசங்கம் தொடங்குமுன் சகல கிறிஸ்தவர்களும் முழந்தாட்படியிட்டு தங்கள் இருகரங்களையும் சிலுவை அடையாளமாக விரித்து **பொறுத்தருளும் கர்த்தாவே** என்கிற செபத்தைப் பாடி, சேசுவின் திருஇருதய இரக்கத்தைக் கெஞ்சி மன்றாடுகிறார்கள். இக்காட்சியைக் கண்டவர்களுடைய இருதயம் இளகி நல்லுணர்வைப் பெறுகிறது. திரு இருதயத் திருநாள் மாலையில் ஆராதனைக்குரிய தேவநற்கருணையைத் தேவாலயத்துக்கருகிலுள்ள புனித லூர்துமாதா கெபிக்கு வெகு ஆடம்பரச் சிறப்போடு கொண்டுபோய் விலையேறப்பெற்ற ஆடை ஆபரணங்களாலும், கண்ணைப் பறிக்கும் பிரகாசம் வீசும் தீபவர்க்கங்களாலும் அலங்காரமாய் ஜோடிக்கப்பட்ட

திருப்பீடத்தின் மீது ஸ்தாபித்திருக்கிறார்கள். ஆசீர்வாதத்திற்குமுன் இயேசுவின் திருஇருதயத்துக்குக் குடும்பங்களை ஒப்புக்கொடுக்கும் அர்ப்பண முயற்சி செபத்தை உரத்த சப்தத்தோடு குருவானவர் வாசிக்கிறார். மிகுந்த பக்தியோடும் அன்பின் ஈடுபாட்டோடும் ஒவ்வொரு வார்த்தையாய் எல்லாக் கிறிஸ்தவர்களும் உச்சரிக்கிறார்கள். இந்தச் செயல்முறை இயேசுவின் திருஇருதயத்தின் பேரில் அவர்களுக்கு ஆழ்ந்த பற்றுதலை வெள்ளிடைமலை போல் காண்பிக்கிறது. அன்பு நிறைந்த இயேசுவின் திருஇருதய ஆதரவில் வாழ்ந்து சாகிற கிறிஸ்தவர்கள் பாக்கியவான்கள்.

**சிந்தனை**

அழகான தீர்மானம் செய்வதிலும் பக்தியைப்பற்றிப் பேசும்போது காதுக்கினிய வார்த்தைகளை உபயோகிப்பதிலும் புண்ணியம் அடங்கவில்லை. மாறாக சகலத்தையும் தேவ சித்தத்தின்படி நன்றாய் செய்வதிலும், நம்மை நாமே ஜெயிப்பதிலும், நமது ஒறுத்தலையும், ஜெபங்களையும், இயேசுவின் திருஇருதயத்துக்கு ஒப்புக்கொடுத் தலிலும்தான் அடங்கியிருக்கிறது.

"ஓ திவ்விய இருதயமே! உமது ஊழியத்தில் நான் வாழ்ந்து சாக விரும்புவதால் என் பெயரை உமது திரு இருதயத்தில் ஆழமாய் எழுதிவைத்தருள உம்மை இரந்து மன்றாடுகிறேன்." ஆனால் தாழ்ச்சியுள்ள இருதயமே உமது திருஇருதயத்துக்குள் நுழையக்கூடுமென்று எனக்கு நன்றாய்த் தெரியும். நமக்குத் தீர்ப்புச் செய்யப்போகிற இயேசுவின் திருஇருதயத்தின்மேல் விடாத பக்தியாயிருந்து சாகிறது எவ்வளவோ இனிமையானது.

செபம்

**எங்கள் மீதுள்ள அன்பால் பற்றியெரியும் இயேசுவின் திரு இருதயமே! எங்கள் இருதயத்தை உமது அன்பால் பற்றியெரியச் செய்தருளும்.**

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 17-ம் தேதி ***************************



### இயேசுவின் திருஇருதயம் சிறந்த இறை பணிக்கு மாதிரிகை

இயேசுவின் திருஇருதயமானது தன் வாழ்நாளெல்லாம் சிறந்த இறைப்பணிக்கு மாதிரிகையாயிருந்தது. திவ்விய இயேசு தமது பிதாவின் சித்தத்தை நிறைவேற்றி அவரை நோக்கி வேண்டிக்கொள்வதிலும், அவருக்குப் பணிசெய்து அவரை மகிமைப்படுத்துவதிலும், எவ்வளவு ஞான ஆவல் காண்பித்தார்! புதிய ஏற்பாட்டின் காலத்தில் ஞாயிற்றுக்கிழமை எப்படியோ, அப்படியே சனிக்கிழமைப் பழைய ஏற்பாட்டின் காலத்தில் அனுசரிப்பது கடமை. நசரேத்து வீட்டில் இந்த ஓய்வுநாளைப் பிரமாணிக்கமாய் அனுசரித்து வந்தார்கள். தவிரவும் குறிக்கப்பட்ட நாட்களில் புனித மரியன்னை, சூசையப்பரோடு திவ்விய இயேசு தமது பிதாவுக்கு ஆராதனை செலுத்தும்படி ஜெபக்கூடத்துக்கு அல்லது தேவாலயத்துக்குப் போவார். தாமே தேவ வார்த்தையும் நித்திய ஞானமுமாயிருந்தாலும், தேவ கற்பனைகளின் விளக்கத்துக்கு மிக கவனத்தோடும் மிக மரியாதையோடும் காதுகொடுப்பார்.

புனிதர்களும், குருக்கள், துறவிகள், அருட்சகோதரிகள், சுறுசுறுப்புள்ள கிறிஸ்தவர்களும், இயேசுக்கிறிஸ்துவின் திவ்விய மாதிரிகையைத் தங்களாலானவரையில் பின்பற்ற பிரயாசப்படுகிறார்கள். நேரம் கிடைக்கும் போதெல்லாம் ஒறுத்தல் முயற்சி செய்து தங்களைத்தானே ஜெயித்து ஆண்டவருக்கு ஒப்புக்கொடுக்கிறார்கள். திவ்விய இரட்சகருக்கு விருப்பப்படவும், அவரோடுகூட மோட்ச பாக்கியத்தை அனுபவிக்கவுமே தங்கள் ஞானக்காரியங்களை எல்லாம் பிரமாணிக்கமாய் நிறைவேற்றி, தேவ ஊழியத்தில் உத்தமமாய் நடந்து வருகிறார்கள். கிறிஸ்தவர்களுக்கடுத்த தேவ ஊழியமானது கடவுளுடைய கற்பனை, திருச்சபையின் கட்டளையைப் பிரமாணிக்கமாய் கடைபிடிப் பதிலும், நமது தேவ இரட்சகர் மட்டிலும், நமது அயலார் மட்டிலும், நமது விஷயமாயும், நாம் நிறைவேற்றவேண்டிய கடமைகளைச் சரியாய் நிறைவேற்றுவதிலுந்தான் அடங்கியிருக்கிறது. *பிள்ளைகளே, நாம் சொல்லிலும் பேச்சிலும்அல்ல, செயலில் உண்மையான அன்பை விளங்கச்செய்வோம் (1யோவான் 3 : 18)* என்ற யோவானுடைய சிறந்த வார்த்தைகளை நிறைவேற்றுவதில்தான் தேவஊழியம் அடங்கியிருக்கிறது.

ஒவ்வொருவரும் விசேஷித்தவிதமாய் அநுசரிக்க வேண்டியதேதென்றால், இறைவன் மட்டில் உண்மையான பக்திப் பற்றுதலைக் காண்பித்து தங்கள் தகுதிக்கு தேவையான புண்ணியங்களைச் சம்பாதிப்பதுதான். சில கிறிஸ்தவர்களிருக்கிறார்கள் அவர்களுக்கு சில செபங்கள் சொல்லத்தெரியுமேயொழிய மற்றப்படி நல்ல கிறிஸ்தவர்களாய் வாழத் தெரியாது. ஏனென்றால் அவர்களிடத்தில் புண்ணியமென்பது கிடையாது; தங்கள் அந்தஸ்தின் கடமைகளைச் சரிவர நிறைவேற்றுவதில்லை; தங்கள் அதிகாரத்துக் குட்பட்டவர்கள் ஒழுங்காய் வாழ்கிறார்களாவென்று கவனிப்பதுமில்லை; தாங்கள் செய்யவேண்டிய நன்மையைச் செய்வதுமில்லை.

உண்மையும் உத்தமுமான தேவ இறை பணிக்கு விசுவாசமும், சுய பரித்தியாகமுமே அஸ்திவாரம். சுய ஒறுத்தலும் நிறைந்த வாழ்வு வாழவும், சிலுவையில் உயிர்விடவும் திவ்வியஇயேசு எந்த கருத்து தூண்டி ஏவினதோ அந்த எண்ணத்தோடு வாழ்கிறவர் உத்தமமான தேவ ஊழியர்கள். இவர்களைத் தமது உண்மையான சீடர்களென்று இயேசுகிறிஸ்துநாதர் ஏற்றுக்கொள்ளுகிறார். உண்மையான இறைபணி வார்த்தைகளிலும், வீண் ஆசைகளிலுமல்ல, செயல்களிலும், சுய செ பத்திலும், ஒறுத்தலிலுமே அடங்கியிருக்கிறது.

நம்மைப் பின்பற்றப் பிரியப்படுகிறவன் எவனும் தன்னை மறுதலித்துத் தன் சிலுவையைச் சுமந்துகொண்டு நம்மைப் பின்பற்றட்டும் (மத் 16:24) என்று இயேசுகிறிஸ்துநாதர் திருவுளம்பற்றுகிறார்.

இந்த வார்த்தைகள் விசுவாசத்தில் உறுதியில்லாதவர்களுக்கும், தேவ ஊழியத்திலும் திரு இருதய அன்பிலும் பலவீனர்களுமாகிய சில கிறிஸ்தவர்களுக்குப் பயத்தை உண்டாக்கலாம். ஆனால் அவர்கள் திரு இருதயத்தை தங்களுக்கு உதவியாகக் கூப்பிடுவார்களேயாகில், ஆண்டவருடைய வரப்பிரசாதம் அவர்களைப் பலப்படுத்தும். தங்களைத்தானே ஜெயிக்கக் கற்றுக்கொள்வார்கள். புனிதர்களின் தாராள குணத்தைப் பின்பற்றுவார்கள். உத்தம தேவ ஊழியத்தால் மோட்ச பாக்கியத்தைச் சுதந்தரித்துக் கொண்ட நம்மைப்போல் பலவீனருமாய் நமது சுபாவத்தையுடையவர்களுமாய் இருந்தார்கள். சிலருக்கு நம்முடைய வயதுதான், நம்முடைய அந்தஸ்துதான். நமக்கு வரும் சோதனைகளும் இடையூறுகளும் அவர்களுக்கும் வந்தன. ஆனால் அருட்கொடைகளுக்கு பிரமாணிக்கராய் நடந்து, தங்கள் சுபாவத்தோடு இடைவிடாமல் போராடி, தேவ ஊழியத்தில் நிலைத்திருந்து, தங்கள் முயற்சியாலும் சுய தியாகத்தாலும் சம்பாதித்த மோட்சபாக்கியத்தை இப்போது அனுபவிக்கிறார்கள்.

புனித மார்கரீத் மரியம்மாள் இவ்விஷயத்தில் சொல்வதாவது : தேவ ஊழியத்தில் தளராத விடாமுயற்சியும், மீட்பு அலுவலில் பின்வாங்காத தைரியமும் நம்மிடத்திலிருக்க வேண்டும். கடைசிவரையில் நிலைத்திருந்து ஜெயங்கொள்ளுகிறவர்களுக்கு தான் மோட்சமுடி கிடைக்கும். இத்தகைய ஜெயசீலர்களில் நாமும் ஒருவராயிருக்க வேண்டிக்கொள்வோமாக!

ஒவ்வொருவரிடத்திலும் தான் விசேஷவிதமாய்ப் போராடவேண்டிய ஒரு முக்கியமான துர்க்குணமுண்டு. சிலரிடத்தில் அது ஆங்காரமாயிருக்கலாம். வேறு சிலரிடத்தில் அது மோகமாயிருக்கலாம். இன்னும் சிலரிடத்திலே அது வேறு துர்க்குணமாயிருக்கலாம். உனக்கு மிகவும் விருப்பமான இந்த விசேஷ துர்க்குணம் துவக்கத்தில் அவ்வளவு கனமானதாயும் ஆபத்துள்ளதாயும் தோன்றாதிருக்கும். எவ்வித சிந்தனை, வாக்கு, செயல்களுக்கு இடங்கொடுப்பதும், நினைத்த புத்தகத்தை வாசிப்பதும், அவ்வளவு தவறில்லையென்று நீ நினைப்பாய். இவ்வகை தகாத யோசனைகளெல்லாம் சாத்தானிடமிருந்துதான் வருகிறது. நீ ஆரம்பத்திலேதானே இந்தத் தீய நாட்டங்களை ஜெயிக்காமல் இருப்பாயேயாகில் உன் ஆத்தும ஈடேற்றத்தை தடைபண்ணலாமென்று சாத்தானுக்கு நன்றாய்த் தெரியும். இந்த பாவநாட்டம் சிறிது சிறிதாய் வளர்ந்து உன்னிடம் முழுதும் குடிகொண்டால், சோதனை வரும்போது நீ கட்டாயம் சாவான பாவத்தில் விழுவாய் என்பதை சாத்தான் அறிந்திருக்கிறது. இந்த நரகப்பேய் உன்னுடைய விசுவாசத்தையும், புத்தியையும் தடுமாறும்படி செய்து, உன்னை ஆபத்தான நிலையில் நிலைநிறுத்த தன்னாலியன்ற முயற்சி செய்யும்.

நாம் எதிர்த்துப் போராடாத ஒரே ஒரு பாவநாட்டம் நம்மை நித்திய கேட்டுக்கு உள்ளாக்குமென்பதை மறந்து போகக்கூடாது. யூதாசிடம் பண ஆசை குடிகொண்டிருந்தது. இந்த ஒரே ஆசைப்பற்றுதல் அவனை எந்த நிலைக்கு கொண்டுவந்துவிட்டதென்று யாவரும் அறிவோம். இன்னும் எத்தனையோபேர் தாங்கள் ஜெயிக்காமல் விட்ட ஒரே ஒரு துர்க்குணத்தால் நித்தியத்துக்கும் அழிவடைந்தார்கள்.

நம்முடைய விசுவாசக்குறைவும், தேவ ஊழியத்தில் நம்மிடத்திலுள்ள பலவீனமுமே சாத்தானோடும் பாவபாசங்களோடும் தாராள குணத்தோடு நாம் எதிர்த்துப் போராட நமக்குப் பெரிய தடையாயிருக்கிறது. உலக விஷயங்களில் நாம் காண்பிக்கிற விடாமுயற்சியும், தைரிய சுறுசுறுப்பும், தேவ ஊழியத்திலும் நாம் காண்பிக்கும்படி கடவுள் அருள்புரிவாராக. ஒரு வேலையை விரும்பி, அல்லது செல்வ மகிமையைத் தேடி சில கிறிஸ்தவர்கள் இராப்பகலாய் அதே ஞாபகமாயிருப்பார்கள். தாங்கள் விரும்புகிற காரியத்தில் வெற்றி அடையும் வரையிலும் தங்களாலான

பிரயாசப்பட்டு மிகப்பெரிய துயரங்களையும், கஷ்டநஷ்டங்களையும் முழு மனதோடு ஏற்றுக்கொள்வார்கள்.

திரு இருதயப் பக்தர்களோவென்றால் தேவ ஊழியத்தில் பிரமாணிக்கமும் தாராள குணமுமுள்ளவர்களாய் நடக்கும்படி கிறிஸ்தவனுக்குரிய புண்ணியங்களையெல்லாம் அநுசரித்து, தங்கள் கடமைகளையெல்லாம் உத்தம விதமாய் நிறைவேற்றி இயேசுவின் திரு இருதயத்தின் சித்தப்படி தாங்களிருக்கிற நிலையில் தங்களை புனிதப்படுத்த தினமும் தங்கள் தீர்மானங்களைப் புதுப்பிக்க வேண்டும்.

**வரலாறு**

பிரான்ஸ் நாட்டு பிரபுக்களில் ஒருவராகிய எல்ஸியா தமது அனுதின இருப்பிடமாகவும், தேவாலயமாகவும் இயேசுவின் திருஇருதயத்தைத் தெரிந்து கொண்டார். தமது கடமையின் நிமித்தம் ஒரு சமயம் குடும்பத்தைவிட்டு பலமாதகாலம் தூரமான இடத்திற்கு சென்றிருந்தபோது அவருடைய பக்தியுள்ள மனைவி அவருடைய நலனைப்பற்றி மிகுந்த கவலையோடு விசாரித்தாள். பிரபுவானவர் மறுமொழியாக நீ என்னை எந்த நேரத்திலும் பார்க்க முடியும் என்ற நிலையில் இருக்கும்போது ஏன் இவ்வளவு கவலைப்படவேண்டுமென்று எனக்குத் தெரியவில்லை. இயேசுவின் திருஇருதயம் என் வசிக்கும் இருப்பிடமென்று உனக்குத் தெரியும். நான் அங்கேதான் நாள்தோறும் வாழ்கிறேன். உனக்கு எந்த நேரம் விருப்பமோ அந்த நேரத்தில் என்னை நீ அங்கே காணலாம் என்று எழுதினார்.

**சிந்தனை :-**

இயேசுவின் சத்தத்தை நீ கேட்கும்போது உன் இருதயத்தை இறுகச்செய்யாதே. சிலவேளை இந்த சப்தம் ஒருபோதும் திரும்ப உன் காதில் விழாது. தமக்குச் சொந்தமான இருதயங்கள் சுய நலத்திலிருந்தும் வேறு எந்தப் பற்றுதலிலிருந்தும் விலகவேண்டுமென்பது ஆராதனைக்குரிய இயேசுவின் திருஇருதயத்தின் விருப்பம்.

செபம் :-

**இயேசுவின் இனிய திருஇருதயமே! நான் உம்மை அதிகமதிகமாய் அன்புசெய்ய செய்தருளும். (300-நாட் பலன்.)**

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*
*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 18-ம் தேதி ****************************



### இயேசுவின் திருஇருதயம் கிறிஸ்துவினிடத்தில் விளங்க வேண்டிய திடத்துக்கு மாதிரிகை

இருதயத்தில் தாழ்ச்சியும் சாந்தகுணமுமுள்ள இயேசுவை இறைவனுடைய செம்மறியென்று புனித திருமுழுக்கு யோவானை அழைக்கிறார். ஆனால் விவிலியத்தின் வேறோரிடத்தில் அவரை யூதாவின் சிங்கமென்று சொல்லியிருக்கிறதை வாசிக்கிறோம். பிதாவினால் அவருக்குக் கொடுக்கப்பட்ட அலுவலை எவ்வளவு விடாமுயற்சியோடும் தைரியத்தோடும் நிறைவேற்றினாரென்று நமக்குத் தெரியும். தமது விரோதிகளால் விளைந்த இடையூறுகளின் நடுவில் தமது பிதாவின் புகழ்ச்சியையும், அன்பையும் தமது ஆத்தும மீட்பையுமே முன்னிட்டு உழைத்துப் பாடுபட்டு மரித்து இறைப்பணியில் பிரமாணிக்கமாயிருந்தார்.

அருட்சாதனங்கள் வழியாய், விசேஷமாய் உறுதிபூசுதல் வழியாய் இயேசுவின் திருஇருதயமானது ஞான தைரியத்தை நமது ஆத்துமத்தில் ஏற்படுத்தி உலகம், பசாசு, சரீரமென்கிற மூன்று எதிரிகளோடு, நாம் எதிர்த்துப் போராடவும், நம்முடைய ஆசைபற்றுதல்களை ஜெயித்து கிறிஸ்தவனுக்குரிய புண்ணியங்களை கடைபிடித்து நமது ஆத்துமத்தையும், இன்னும் அநேகருடைய ஆத்துமங்களையும் மீட்கவும் பண்ணுகிறது.

சம்சோனிடத்தில் விளங்கின உடல்பலம் கிறிஸ்தவர்களுடைய ஞானத் திடனுக்கு சாயலாயிருக்கிறது. கடவுள் இம்மனிதனுக்கு மிக அதிகமான வலுவை கொடுத்ததாக விவிலியத்தில் வாசிக்கிறோம். இவர் சிங்கங்களைக் கொன்றதாகவும், பகைவர்கள் தன் கைகால்களைக் கட்டப் பயன்படுத்திய பெரிய வடங்களை நூலைப்போல் அறுத்து எறிந்ததாகவும், உபயோகமில்லாத சாதனங்களால் தன் விரோதிகளில் அநேகரைக் கொன்றதாகவும், தேவாலயத்தின் பலமான பெரும் தூண்களை அசைத்துப் பிடுங்கினால் அந்தக் கட்டிடம் கீழே விழுந்து விரோதி மாண்டுபோனதாகவும் நாம் அறிகிறோம். இதேவிதமாய் நாம் நமது ஆத்தும விரோதிகளை வென்று, பசாசின் தந்திர சோதனைகளையும், உலக துர்மாதிரிகைகளையும், திருச்சபை விரோதிகளின் தொந்தரவுகளையும் எதிர்த்துநின்று ஜெயித்து வேதசாட்சிகள், புனிதர்களுடைய மாதிரிகைகளைத் தாராள

குணத்தோடு பின்பற்ற இயேசுவின் திருஇருதய அருட்கொடைக்கு நம்மை ஏற்றவர்களாகச் செய்யும். புதுநன்மை வாங்கின அந்த பாக்கியமான நாளிலே நமது திருமுழுக்கு வார்த்தைப்பாட்டைப் புதுப்பித்து உறுதிப்படுத்தினோம். உலகம் பசாசை விட்டுவிட்டோமென்று யாவரும் அறிய வார்த்தைப்பாடு கொடுத்தோம். கிறிஸ்தவர்களெல்லோரும் இந்த வார்த்தைப்பாட்டின்படி உலகத்தைத் துறந்து, துறவற அந்தஸ்தில் பிரவேசிக்கவேண்டுமென்று நாம் சொல்லவில்லை. ஆனால் சகலரும் உலகம் படிப்பிக்கிற தப்பான போதகங்களையும் தீய அலுவல்களையும் விலக்கி, தங்கள் ஆசாபாசங்களை ஜெயித்து தங்களுடையவும், தங்கள் குடும்பத்தாருடையவும் ஆத்தும மீட்பைத் தேடி, கிறிஸ்தவனுக்குரிய கடமைகளையெல்லாம் நிறைவேற்றி, திவ்விய மாதிரிகையாகிய இயேசுக்கிறிஸ்துவின் வாழ்வையும், புண்ணியங்களையும் தங்களிடத்தில் பிறப்பிக்கக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

இந்தக் கடமையை நிறைவேற்ற புனிதர்கள் கையாண்ட வழிகளை நாமும் பின்பற்றினாலொழிய மற்றப்படி நம்மால் இயலாது. அந்த வழிகள் எவை ?

**முதலாவது செபம் :-** ஜெபத்தால் ஆகாத காரியம் ஒன்றுமேயில்லை. ஜெபமானது நமது ஆத்துமத்தை மேலே எழுப்பி சகல கொடைகளுக்கும் ஆசீர்வாதங்களுக்கும் ஊற்றாகிய இயேசுவின் திரு இருதயத்தோடு நம்மை ஐக்கியப்படுத்துகிறது. இந்த புனித நீரால் நாம் தேறுதலடைந்து, இறைப்பணியில் உத்தமர்களாய் தாராள குணத்தோடு நடந்து, சாத்தானுடைய தந்திர சோதனைகளையெல்லாம் வென்று ஜெபங்கொள்வோம். சோதனை வேளையில் நமது ஆத்துமத்தை இயேசுவின் திருஇருதயத்தின் பக்கமாய் எழுப்பி அப்போஸ்தலரோடு சீடர்கள் அவரிடம் வந்து, *ஆண்டவரே, காப்பாற்றும், சாகப் போகிறோம் என்று சொல்லி அவரை எழுப்பினார்கள் (மத்தேயு 8:25)* என்றும் அல்லது ஒலோபெர்னஸ் என்பவனுடைய தலையை வெட்டுமுன் யூதித் என்பவள்: *அவனது படுக்கையை அணுகி, அவனுடைய தலைமுடியைப் பிடித்துக்கொண்டு "இஸ்ராயேலின் கடவுளாகிய ஆண்டவரே, எனக்கு இன்று வலிமை அளித்தருளும்" (யூதித்து13:7)* என்று கேட்டதுபோல் நாமும் கேட்போமாக.

**இரண்டாவது :-** அடிக்கடி தேவநற்கருணை உட்கொள்ளுதல். உணவானது எப்படி உடலின் உயிரைக் காப்பாற்றுகின்றது. கடைசி யுத்தத்தில் ஆத்துமத்திற்குத் திடன் உண்டாகும்படியாய்ச் சாகப்போகிற கிறிஸ்தவர்களுக்கு தேவநற்கருணை கொடுக்கத் திருச்சபையானது படிப்பிக்கிறது. திருச்சபையின் துவக்கத்தில் கிறிஸ்தவர்கள் நாள்தோறும் தேவநற்கருணை வாங்குவது வழக்கம். அதனால் ஞான சுறுசுறுப்பும், உத்தமதனமுமுள்ள வாழ்வு வாழ்ந்தார்கள்.

வேத கலாபனை காலத்தில் வேதசாட்சிகள் அடைபட்டிருந்த சிறைக்கூடத்திற்கு ரகசியமாய்த் தேவநற்கருணை கொண்டுபோய்க் கொடுக்கப்படும். புனிதர்கள் இயேசுகிறிஸ்துவின் திருஉடலாலும் இரத்தத்தாலும் உறுதியடைந்து, தங்கள் உறவினர்களுடைய கண்ணீரையும், கொடுங்கோலருடைய கொடுமையையும் கவனியாமல் புனிதர்கள் முடிபெறும் இடத்துக்கு மகிழ்ச்சியாக சென்றனர். இக்காலத்திலே குருக்களும், வேதபோதகர்களும், அருட்சகோதரிகளும் தங்கள் சுயநாட்டையும், உறவினர்களையும் விட்டு அயல் நாட்டுக்குப்போய் ஆத்தும மீட்புக்காக உழைக்கிறதைக் காண்கிறோம். இன்னும் கிறிஸ்தவர்களுக்குள்ளே ஞான சுறுசுறுப்பும், ஆத்தும மீட்பில் ஆவலுமுள்ள பலர் தங்கள் சகோதரர்களுடைய ஆத்தும மீட்புக்காக புண்ணியப் பயிற்சியிலும் வாழ்நாளை நற்செயல்களிலும் செலவழிக்கிறார்கள். மனிதர்களும் வானதூதர்களும் ஆச்சரியப்படதக்கவிதமாய் இவ்வளவு ஞானத் தைரியத்தைக் காண்பிக்கிறதற்குக் காரணம், தங்கள் ஆத்துமத்தில் அவர்கள் உட்கொள்ளும் தேவநற்கருணையிலுள்ள இயேசுவின் திரு இருதயந்தான். “இயேசுக்கிறிஸ்துவை ஆத்துமங்களில் விதை, வெற்றியை அறுப்பாய்” என்ற ஒரு மேதகு ஆயருடைய வாக்கியம் இதற்கு சரியாய் ஒத்திருக்கும்.

ஆதலால் சுறுசுறுப்பும் ஞான ஆவலுமுள்ள கிறீஸ்துவர்களாய் நடக்க ஆசையிருந்தால் தக்க ஆயத்தத்தோடும் பக்தியோடும் அடிக்கடி தேவநற்கருணை உட்கொள்ளுங்கள். ஆதலால் சகல மனிதர்களும், தாய் தகப்பன், சகோதரன் சகோதரிகள், ஆண் பெண் அனைவரும் கிறிஸ்தவர்களுடைய திடனுக்கும் தேவ அன்புக்கும் ஊற்றாகிய தேவநற்கருணையை அடிக்கடி அண்டிப்போகவேண்டும்.

**வரலாறு**

இயேசுசபைக் குருவானவராகிய லெலூ என்பவர் இயேசுவின் திரு இருதயத்தின் பேரில் வெகு பக்தியுள்ளவராயிருந்தார். முதிர்ந்த வயதினாலும், நோயின் கஷ்டத்தாலும் தளர்ந்துபோனதால் கையில் கோலூன்றி நடப்பார். ஒருநாள் தம்முன்னால் நடந்துசென்ற ஓர் வாலிப துறவியை நோக்கி : சகோதரரே, இந்தக் கோலைப்பாரும், நான் நடக்க இது உதவி செய்கிறது. நாம் மோட்சத்துக்குப்போக நமக்கு உதவிசெய்ய ஓர் கோல் அவசியம். இயேசுவின் திருஇருதயமே அந்தக்கோல். அத்திரு இருதயத்தின் மேல் சாய்ந்து அதோடு ஒன்றித்திருப்போமாக. அதன் அருட்கொடையின் உதவியால் நம்முடைய ஆத்துமத்தையும், நமது சகோதரர்களின் ஆத்துமங்களையும் மீட்போமென்பது நிச்சயம்.

ஆர்ஸ் பட்டணத்து பரிசுத்த குருவாகிய புனித வியான்னி (என்னும்) கூரேதார்ஸ் என்பவர் இயேசுவே! எவ்வளவு அன்பு நிறைந்த இருதயத்தை நீர் எங்களுக்குக் காட்டுகிறீர்; சகலரும் இந்தத் திரு இருதயத்தில் உட்சென்று என்றென்றைக்கும் அங்கே வாழ்வோமாக என்று மிக உருக்கமான அன்போடு சொல்வது வழக்கம். இவ்வுலகத்தில் இயேசுவின் திருஇருதயத்தை அன்பு செய்யாமல் வேறெதை அன்பு செய்வோம்? இவ்வளவு நன்மையும் அன்புக் குரியதுமான திரு இருதயத்தை அன்புசெய்யாமல் இருப்பது எப்படி?

**சிந்தனை**

நாம் நிர்ப்பாக்கியத்தின் பாதாளத்தில் இருப்பதாக அறிந்தால் இரக்கத்தால் வழிந்தோடுகிற ஆராதனைக்குரிய இருதயத்தினிடமாய் ஆறுதலைத் தேடுவோமாக. பயத்தின் பாதாளத்தில் நாம் இருப்பதைக் கண்டால் நம்பிக்கையோடு திருஇருதயத்தை அண்டிப்போவோமாக. அங்கே பயமானது அன்பினால் வெல்லப்படும். யாதொன்றும் உன்னைக் கலங்கச் செய்யாதிருக்கட்டும். உன் குற்றங்களைப் பற்றி முதலாய் நீ உன் மன அமைதியை இழந்துபோகக் கூடாது. உன் குற்றங்களின் நிமித்தம் உன்னைத் தாழ்த்திக்கொள். அமைதியோடு அக்குற்றங்களைத் திருத்திக்கொள். அவதைரியப்படாதே. சிலுவையை அநுபவிக்க இவ்வுலக வாழ்வும், மகிழ்ச்சியும் அநுபவிக்க மறு உலக வாழ்வும் நமக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது.

செபம்

**இயேசுவின் இனிய திருஇருதயமே! நான் உம்மை அதிகமதிகமாய் அன்பு செய்ய செய்தருளும்.**

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 19-ம் தேதி ****************************



### இயேசுவின் திருஇருதயம் தேவ சந்நிதானத்தை நாம் நினைக்கக் கற்பிக்கிறது.

பாவத்தில் வாழாதபடி நம்மைக் காப்பாற்றித் தேவ ஊழியத்தில் உத்தமவிதமாய் நம்மைத் தூண்டி ஏவ நம்முடைய நல்ல மனதும், நாம் செய்யும் வஞ்சகமில்லாத தீர்மானங்களும் மட்டும் போதாது; ஆண்டவருடைய அருட்கொடையோடு தேவ சந்நிதானத்தின் ஞாபகத்தையும் நமது ஆத்துமத்தில் காப்பாற்றவேண்டும்.

நமது திவ்விய மாதிரிகையாகிய இயேசுக்கிறிஸ்துநாதர் தமது வாழ்நாளெல்லாம் பிதாவின் பார்வையில் செலவழித்தார். அப்போஸ்தலர்களிடத்தில் ஓயாமல் அவரைப்பற்றி பேசுவார். யாதாமொரு புதுமை செய்த பின்னும் பிதாவுக்கு நன்றியறிதல் காண்பித்து அவரை மகிமைப்படுத்துவார். சாத்தான் தம்மைச் சோதிக்கும்போது கடவுளுக்குரிய ஆராதனையையும் ஊழியத்தையும் அதற்கு ஞாபகப்படுத்தி, அதைத் தைரியத்தோடு கண்டிக்கிறார். திருப்பாடுகளின் நேரத்தில் தமது கண்களை பிதாவின் பக்கமாய் எழுப்பி, உமது சித்தத்தின்படி ஆகட்டும் என்று சொல்லுகிறார். தாம் சிலுவையில் சாகும்போது பிதாவைக் கூப்பிட்டு தமது ஆத்துமத்தை அவர் கையில் ஒப்புக்கொடுக்கிறார்.

இயேசுவின் திருஇருதயப் பக்தர்கள் தங்கள் திவ்விய மாதிரிகையானவரைப் பின்பற்றி ஆண்டவருடைய சந்நிதானத்திலும் அவருடைய பார்வையிலும் தங்கள் வாழ்வை செலவிடவேண்டும். நமக்கு வரும் சோதனைகளை ஜெயித்து கிறிஸ்தவப் புண்ணியங்களைத் தாராள குணத்தோடு அனுசரிக்க உதவிபுரிவதில் தேவ சந்நிதான முயற்சியைவிட அதிக சக்தியுள்ளது எதுவுமேயில்லை. ஒரு சாதாரண மனிதனுடைய சமூகம் முதலாய் நமது கடமையை நாம் நன்றாய்க் கவனித்து நிறைவேற்ற வல்லபமுள்ளதாயிருக்கிறது. ஒரு கண்டிப்பான எஜமானனின் ஊழியர்கள் தங்கள் கடமைகளை அனுசரிப்பதில் கவனக்குறைவாயிருப்பதும், அல்லது வீணான பேச்சிலும் பயனற்ற காரியங்களிலும் நேரத்தைச் செலவழிக்கிறதும் எப்போது? தங்கள் எஜமான் ஆஜராயிருக்கும்போதா? இல்லை, இல்லை. தங்கள் எஜமான் இல்லாதிருக்கும்போது, அவன் தங்களைப் பாராதிருக்கும்போதுதான். ஊதாரிப் பிள்ளை தன் சொந்த வீட்டில் தன்

தகப்பன் பார்வையிலிருந்தவரையில் ஒழுங்காய் வாழ்ந்தான். அவரை விட்டுப் பிரிந்ததும் தன் செல்வத்தையெல்லாம் தீயவழியில் செலவழித்தான். மனிதர்களுடைய பார்வை நம்மைத் தீமையினின்று தடுக்க இவ்வளவு சக்தியுள்ளதாயிருந்தால், நமது சிந்தனை, வாக்கு, செயல்களைப் பார்க்கிறவரும், மிகவிரைவில் நமது கண்டிப்பான நியாதியுமாயிருக்கப்போகிற அளவில்லாத சர்வ வல்லபமுள்ள பரலோக இராஜாவாகிய இறைவனுடைய சந்நிதானத்தைப்பற்றி என்ன சொல்லலாம்! அதனால்தான் இந்த தேவ சந்நிதானத்தை நாம் நினையாதபடி தடுக்க சாத்தான் தன்னாலியன்ற முயற்சிபண்ணுகிறது. சாத்தான் இதில் அனுகூலமடையும்போது நமது ஆத்துமத்தின் நித்திய கேட்டை எளிதாய் உண்டுபண்ணலாமென்று அதற்கு நன்றாய்த் தெரியும். தூயஆவியானவர், பாவியானவனைப் பற்றிபேசும்போது, "அவன் கண்களுக்கு முன்பாக கடவுள் அவனுடைய வழிகளெல்லாம் அசுத்தமானது, அவனுடைய நினைவு, வார்த்தை, செயல்கள், தீமை நிறைந்தவை என்று சொல்லுகிறார். வேத சாட்சியான புனித இஞ்ஞாசியார் தமது கிறிஸ்தவர்களை நோக்கி, கடவுளை நினையுங்கள், மனதுபொருந்தி எந்தப் பாவத்தையும் செய்யமாட்டீர்கள்; ஏனென்றால் கடவுளுடைய நினைவு பாவ வாயிலை அடைக்கிறது" என்றார்.

கெட்ட விஷயத்துக்குச் சம்மதிக்கும்படி பக்தியும் பரிசுத்ததனமுமுள்ள சூசானாள் என்பவரைத் தூண்டி ஏவும்போது, அக்கன்னிகை, நான் கடவுளுடைய சமூகத்தில் துரோகஞ்செய்து நித்திய நியாதிபதியாகிய அவர் கையின்கீழ் விழுகிறதைவிட மனிதர்கள் கையில் அகப்பட்டுச் சாகிறது நலம் என்னும் அழகான மறுமொழி சொல்லி கடவுளுக்குப் பிரமாணிக்கமாயிருந்தாள். சாவான பாவத்தால் கடவுளுக்குத் துரோகம் செய்ய பசாசும், நம்முடைய ஆசாபாசமும் நம்மைத் தூண்டும்போது, கடவுளுடைய சந்நிதானத்தை நினைவுகூர்ந்து, கடவுள் என்னைப் பார்க்கிறார். அவருடைய நீதியான சிம்மாசனத்துக்குமுன் என்னை அவர் உடனே கூப்பிடலாம். அவருடைய கண்ணுக்கு முன்பாக அவரை நான் நிந்திக்கமாட்டேன் என்று உறுதியாய் மறுமொழி சொல்.

பாவத்தினின்று நம்முடைய ஆத்துமத்தைக் காப்பாற்றி பரிசுத்ததனத்தில் நிலைநிறுத்த தேவ சந்நிதான ஞாபகம் இவ்வளவு சக்தியுள்ளதாயிருக்க, கிறிஸ்தவப்புண்ணியங்களை அனுசரித்து தேவ ஊழியத்தில் பிரமாணிக்கமும் சுறுசுறுப்புமுள்ளவர்களாய் நடக்கும்படி நம்மைத் தூண்ட அதன் சக்தி குறையுமா? உத்தம பாதையில் பிரவேசிக்க ஆபிரகாம் என்பவரை கடவுள் அழைத்தபோது, ஆபிரகாமுக்கு வயது தொண்ணூற்றொன்பதாக இருந்தபொழுது, ஆண்டவர் அவருக்குத் தோன்றி, *நான் எல்லாம் வல்ல இறைவன். எனக்குப் பணிந்து நடந்து, மாசற்றவனாய் இரு* (தொ.நூ 17 : 1) என்று திருவுளம்பற்றினார். தாவீதென்கிற தீர்க்கத்தரிசியும் உம்

*நியமங்களையும் ஒழுங்கு முறைகளையும் நான் கடைபிடிக்கிறேன்; ஏனெனில், என் வழிகள் எல்லாம் உமக்குத் தெரிந்தவை (திருப்பாடல்கள் 119 : 168)* என்று பாடியிருக்கிறார்.

கடவுளுடைய அருட்கொடைகளும் அவருடைய ஞாபகமுமே வேதசாட்சிகள் தங்கள் பயங்கரமான துன்பங்கள் மத்தியில் பிரமாணிக்கமாயிருக்கும்படி செய்தது.

இயேசுவின் திருஇருதய அன்பர்கள் எல்லோரும் தங்கள் சிந்தனைகளையும் செயல்களையும் பார்க்கிற தேவ சந்நிதானத்தை அடிக்கடி நினைக்கும்படி தங்கள் விசுவாசத்தைத் தூண்டி எழுப்பவேண்டும். பக்தி ஆகாரத்தோடு ஜெபம் பண்ணவும், சுத்த கருத்தோடு வாழவும், அடக்க ஒடுக்கத்தோடு நமது உடலையும் ஐம்புலன்களையும் நடத்தவும், தேவசந்நிதான ஞாபகம் மிகவும் உதவிபுரியும். உன் மேலதிகாரிகளைக்கொண்டு உனக்கு திவ்விய இயேசு உத்தரவு கொடுக்கிறாரென்றும், உன் மீட்புப் பாதையில் உன்னை நடத்துகிற குருக்கள் ஆயர்களிடமும் இயேசுக்கிறிஸ்து இருக்கிறாரென்றும் நினைத்துக்கொள்வாயாகில் கீழ்ப்படிதல் மிக எளிதாயிருக்கும்.

நம்முடைய திவ்விய இரட்சகர் உன்னைப் பார்க்கிறாரென்றும், நீ அனுபவிக்கிற சிலுவைகளுக்கெல்லாம் சம்பாவனை அளிப்பாரென்றும் நீ நினைத்தால். தாராளகுணம் உன்னிடத்தில் பிறக்கும். மனது பொருந்தி கட்டிக்கொள்ளும் குற்றங்களைத் தவிர்க்கவும், உன் வீண் மகிமையையல்ல, சொந்த திருப்தியையல்ல, ஆண்டவருடைய மகிமையையும் அவருடைய அன்பையுமே உன் செயல்களில் தேடவும் முயற்சிப்பாய். உன் கடமைகளையெல்லாம் உத்தமமாய் நிறைவேற்றி இயேசுவின் திருஇருதய ஊழியத்திலும் அன்பிலும் வாழ்ந்து பாக்கியமான மரணமடைவாய்.

**வரலாறு**

**1. இடைக்காட்டூர் திருஇருதயநாதர் கோயில்**

சிவகங்கை மாவட்டம் இடைக்காட்டூர் என்ற நகரத்தில் வரலாற்றுச் சிறப்புமிக்க அழகான இயேசுவின் திருஇருதய ஆலயம் ஒன்று உள்ளது. இவ்வாலயம் பல ஆண்டுகளுக்கு முன் இயேசுவின் திரு இருதயத்தின் பேரில் மிகவும் பக்தியுள்ள செல்வந்தரான வெளிநாட்டு ஐரோப்பிய பெண்மணி ஒருவரால் கட்டுவிக்கப்பட்டது. அவ்வாலயம் கட்டுவதற்கான முழுச் செலவையும் அப்பெண்மணியே கொடுத்தார்கள். இவ்வாலயத்தின் உள்ளும் புறமும் தேர்ச்சிபெற்ற கட்டிடக் கலைஞர்களாலும், சிற்பிகளாலும் விலையுயர்ந்த பொருட்களால் விசித்திர வேலைப்பாடுகளுடன் அமைக்கப்பட்டுள்ளது. கண்ணைக்

கவரும் அழகிய வேலைப்பாடுகளும், பக்தியூட்டும் விதத்தில் வண்ண வேலைகளும் பார்ப்போர் அனைவரையும் பிரமித்து மெய்மறக்கச் செய்கின்றது.

ஐரோப்பியர் போன்ற வெளிநாட்டினர், உள்நாட்டினர், கிறிஸ்தவர்கள், இந்துக்கள், மகமதியர்கள் இன்னும் பலர் ஜாதி, மத பேதமின்றி இவ்வழகிய ஆலயத்தைத் தரிசித்து ஆசீர்பெற மிக தூரத்திலிருந்து ஆவலுடன் வருகின்றனர். பார்ப்போர் இதயத்தில் பக்தியையும், பரவசத்தையும் வளர்க்கும் இவ்வழகிய ஆலயத்தைத் தங்கள் ஊரில் நடுநாயகமாய் கொண்டிருக்கிற இடைக்காட்டூர் நகரவாசிகளின் பாக்கியமே பாக்கியம்! இயேசுவின் திருஇருதயம் தங்களுக்குச் செய்த இந்த பேருபகாரத்துக்கு நன்றியறிதலாக அவர்கள் திருஇருதயத்தின் மட்டில் காட்டும் பக்தியும் பற்றுதலுமே இதற்கு அத்தாட்சி. மாதாந்திர முதல் வெள்ளி திருஇருதயத்துக்கு மாதாந்திர ஆடம்பரக் கொண்டாட்டம் நடைபெறும். முந்தின இரவு முழுதும் தேவநற்கருணையில் வீற்றிருக்கும் இயேசுவின் திருஇருதய ஸ்தாபகம். சற்பிரசாதநாதரை இரவு முழுதும் ஒழுங்கு முறையாய் வந்து சந்தித்து, அவருக்கு ஆராதனை செலுத்தி நிந்தைப் பரிகாரம் செய்து, தங்களை முழுதும் காணிக்கையாக ஒப்புக்கொடுக்கிறார்கள். அவ்வூர்வாசிகளும் சுற்றுப்பக்கத்திலுள்ளவர்களும் ஆராதனைக்குரிய தேவநற்கருணையை உட்கொண்டு தங்கள் காணிக்கை முயற்சியை புதுப்பிக்கிறார்கள். இடைக்காட்டூரில் அமைந்திருக்கும் இப்பக்திக்குரிய ஆலயத்தைச் சார்ந்த கிறிஸ்தவர்களனைவரையும் இயேசுவின் திருஇருதயம் அதிகமதிகமாய் ஆசீர்வதித்துக் காப்பாற்றுவாராக.

## 2. திருஇருதயக் கோவில்

திருஇருதய ஆலயமானது இராமநாதபுரம் மாவட்டத்தில் இயேசுவின் திருஇருதயத்துக்குப் புகழ்ச்சிக்காக கட்டப்பட்ட வேறோர் சிறந்த ஆலயம். இவ்வாலயம் 1888- ம் ஆண்டு கட்டி முடிக்கப்பட்டது. இது மிக அழகான கூட்டுக்கோவில்: மூன்று சாலைகளுள்ளன. இந்த ஆலயத்தைக் கட்டிமுடிக்கத் தேவையான செலவை பங்கு குருவிடம் பக்தியுள்ள ஓர் ஆங்கில துரையவர்கள் கொடுத்தார்கள். இந்த கட்டுமான பணியை நடத்தின ஆத்தும இரட்சண்ய ஆவல் பூண்ட பங்கு குரு இத்தேவாலயத்தைப்பற்றி மிக மேலான நம்பிக்கை கொண்டிருந்தார். பிறமதத்தினர் மனந்திரும்ப இந்த இடம் ஒரு பெரிய மத்திய ஸ்தலமாயிருக்க வேண்டுமென்பதும், அநேக ஆத்துமங்கள் பிறமத இருள் நீங்கி கிறிஸ்தவ அருள்ஒளி பெற்று விளங்கவேண்டுமென்பதும் பங்கு குருவுடைய பேராவல். பல குடும்பங்கள் இவ்விடம் வந்துசேர்ந்து திருமுழுக்குப் பெற்றுக் குடியேறவே, இயேசுவின் திருஇருதய ஆசீர்வாதத்தால் தற்போது

பாக்கியம் பொழியும் சிறந்த கிறிஸ்தவ கிராமமாக இந்த இடம் விளங்குகிறது.

### 3. இருதயபுரம்

இராமநாதபுரம் மாவட்டத்தில் இந்தத் திருஇருதய ஆலயம் ஏழைக் கிறிஸ்தவர்களால் கட்டப்பட்டது. இந்த கிறிஸ்தவர்கள் பிறமத செல்வந்தர்களிடம் அடிமை வேலைசெய்ததால் மிகவும் கஷ்டப்பட்டார்கள். இயேசுவின் திருஇருதயமானது அவர்களுக்கு ஆறுதலும் உயிருமாயிருக்கும்படி அவர்கள் நடுவில் வீற்றிருக்கத் தயை புரிந்தார். திவ்விய இயேசு இவ்வாலயத்திலிருந்து, வருத்தப்படுகிற நீங்கள் நம்மிடம் வாருங்கள். உங்களுக்கு ஆறுதலாயிருப்போம்; உங்களையும் உங்கள் குடும்பங்களையும் ஆசீர்வதிப்போம்; இவ்வுலகில் இல்லாவிட்டால் மறுவுலகில் உங்களை பாக்கியவான்களாக்குவோம் என்று அழைக்கிறார். இந்த ஏழைக் கிறிஸ்தவர்கள் ஆறுதல்தரும் இந்தத் தேவ தந்தையின் வார்த்தைக்குக் காதுகொடுத்து இந்தத் திருஇருதய ஆலயத்தைச் சுற்றிலும் குடியிருந்து, வரவர பக்தியிலும் சுறுசுறுப்பிலும் தொகையிலும் அதிகரித்துவருகிறார்கள்.

### சிந்தனை

நமது இருதயத்தின் உண்மையான அன்பர் இயேசுக் கிறிஸ்துநாதர் ஒருவரே. நம்முடைய இருதயம் அவருக்காக மாத்திரமே உண்டாக்கப்பட்டிருக்கிறது. ஆதலால் அவரிடத்திலல்லாமல் வேறெவ்விடத்திலும் யாதொரு இளைப்பாற்றியையும் ஆறுதலையும் அடையமுடியாது.

செபம்

**தேவநற்கருணையிலிருக்கிற இயேசுவின் திருஇருதயமே! எங்களிடத்தில் விசுவாசம் நம்பிக்கை தேவசிநேகத்தை அதிகரித்தருளும்.**

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 20-ம் தேதி



# இயேசுவின் திருஇருதயம் குடும்பத்தில் விளங்கவேண்டிய பக்திக்கு மாதிரிகை

குடும்பங்களின் வாழ்வை புனிதப்படுத்தவும், பெற்றோர்களும் பிள்ளைகளும் தங்கள் கடமைகளை நிறைவேற்றி, கிறிஸ்தவக் குடும்பங்களில் விளங்கவேண்டிய புண்ணியங்களைக் கடைப்பிடிக்க படிப்பிக்கவும், திவ்விய இயேசு தமது வாழ்நாளில் முப்பது வருடம் நசரேத்தூரில் செலவழிக்க கருணைபுரிந்தார். தாய்தந்தையருக்குக் காண்பிக்கவேண்டிய மரியாதை கீழ்ப்படிதலைக் காண்பியாத பிள்ளைகள் பேரில் மிகவும் கண்டிப்பான தண்டனையிட்டிருப்பதை மோசேயென்கிற இறைவாக்கினருக்கு ஆண்டவர் கொடுத்தருளிய பழைய ஏற்பாட்டுச் சட்டத்தில் நாம் வாசிக்கிறோம். *தன் தந்தையையோ தம் தாயையோ சபிக்கிற எவரும் கொல்லப்பட வேண்டும்* (வி. பயணம் 21 :17)

தங்கள் பிள்ளைகள் மட்டில் செலுத்தவேண்டிய கடமைகளைக் கவனியாமல் விட்ட பெற்றோர்களுக்கு இதேவிதமாய் பெரிய தண்டனைகள் விதிக்கப்பட்டிருந்தன. புதிய ஏற்பாட்டிலும் இயேசுகிறிஸ்து நாதர் அதே கடமைகளை உறுதிப்படுத்தி தண்டனையின் பயத்தாலல்ல, அன்பால் அவைகளை நிறைவேற்றக் கற்பித்தார். இயேசுவின் திருஇரு தயத்துக்கு பல குடும்பங்கள் தங்களை முழுதும் காணிக்கையாக ஒப்புக் கொடுத்திருப்பதால் நசரேத்து வீட்டில் விளங்கின பக்தியும் புண்ணியமும் இந்த வீடுகளில் விளங்க குடும்பத்தார் தங்களாலான முயற்சிசெய்வார் களென்கிற நம்பிக்கையிருக்கிறது. தமது பிதா மட்டிலும் மரியன்னை சூசையப்பர் மட்டிலும் திவ்விய இயேசுவிடத்தில் பக்தி பற்றுதலும் மரியாதை கீழ்ப்படிதலும் பூரணமாய் விளங்கினது. தமது கடமைகளை நிறைவேற்ற அவர் கொண்டிருந்த ஆவலைப் புகழ்ந்து பாராட்டி, நசரேத்தூரில் "அவர் நடத்தின வாழ்வை அவர் அவர்களுக்குக் கீழ்ப்படிந்தார்" என்கிற மூன்றே வார்த்தைகளில் விவிலியம் அடக்கியிருக்கிறது.

தமது வெளியரங்க வாழ்வில் திவ்விய இயேசுவின் பிள்ளைகளைத் தம்மிடம் வரவழைத்து அவர்களை ஆசீர்வதித்து தேவ சட்டத்தையும், புண்ணிய அநுசரிப்பையும் அவர்களுக்குப் படிப்பித்தார். அவர்களுக்குத் துர்மாதிரிகையாயிருந்து அவர்களைக் கெடுப்பவர்கள்பேரில் வெகு கண்டிப்பான தண்டனையால் பயம் வருவித்து, அவர்களுடைய மாசற்ற தனத்தைக் காப்பாற்றிக் கொண்டு வந்தார். இவ்விதமாய்ப் பிள்ளை களுடைய ஆத்துமத்தில் பக்தியையும் கிறிஸ்தவப் புண்ணியங்களையும்

எப்படி வளர்ப்பதென்றும், அவர்கள்பேரில் கவனமாயிருந்து தீய தோழர்களின் பாவ சமயங்களிலிருந்து அவர்களுடைய பரிசுத்ததனத்தை எப்படிக் காப்பாற்றுவதென்றும் நமது ஆண்டவர் தாய் தந்தையர்களுக்குப் படிப்பித்தார்.

திருக்குடும்பமானது சொத்து சுகத்தையோ மகிமை பெருமையையோ அநுபவிக்கவில்லை. ஆனால் செபத்தையும், பக்தியையும், மாசற்றதனத்தையும், பிறரன்பையும், இவைகளாலுண்டாகும் பாக்கியத்தையுமே கனமாக எண்ணி மதித்தது. கடவுள் அந்த வீட்டுக்கு எஜமானும் அரசருமாயிருந்தார். சிந்தனை வாக்கு செயல்கள் எல்லாம் சர்வேசுரன் பாரிசமாயிருந்தன. அவர்களுடைய இருதயங்களில் உருக்கமான பக்தி குடிகொண்டிருந்தது. தாய் தந்தையரே, உங்கள் குடும்பத்துக்கு அரசராக இயேசுக்கிறிஸ்துவை ஸ்தாபித்து, உங்கள் வீட்டின் உண்மையான அரசராக அவர் அரசாளும்படி மிக்க கவனம் செலுத்துங்கள். காலையில் எழுந்ததும், சிலுவை வரைந்து உங்களிருதயத்தை இயேசுவின் திருஇருதய பக்கமாய் எழுப்பி, உங்கள் பாவங்களுக்குப் பரிகாரம் பண்ணும்பொருட்டு இந்தப் புது நாளை ஆண்டவர் உங்களுக்குக் கொடுத்ததற்காக நன்றியறிந்திருப்பதே உங்களுடைய முதல் கடமையாயிருக்கவேண்டும். உங்கள் செயல்களால் மோட்சத்தில் சம்மாவனையும், ஆண்டவருக்கு மகிமைப் புகழும் உண்டாகும்படியாக உங்கள் அலுவல்களை எல்லாம் இயேசுவின் திருஇருதயக் கருத்துகளோடு ஒன்றித்து ஒப்புக்கொடுங்கள். ஒவ்வொரு நாளும் உங்கள் வாழ்வின் கடைசி நாளாயிருக்கலாம். ஆதலால் பக்தியாலும் செபத்தாலும் நற்செயல்களாலும் ஒவ்வொரு நாளையும் புனிதப்படுத்த ஆவன செய்ய வேண்டும்.

உங்கள் பிள்ளைகள் மட்டில் நீங்கள் மிக கவலை கொண்டு அவர்கள் அதிகாலையில் எழுந்ததும் இருதயத்தை இயேசுமரியாயின் பக்கமாய் எழுப்பி ஒரு சிறு செபமாகிலும் செபிக்க கற்றுக்கொடுங்கள். பகற்பொழுதில் அவர்கள் தங்கள் வேதக் கடமைகளைச் சரியாய் நிறைவேற்றி தீய சகவாசத்தைவிட்டு விலகி பாவமில்லாத பாதையில் நடக்கக் கவனமாக இருங்கள். மாலையானபின் குடும்பத்திலுள்ள சகலரும் ஒன்றித்து இந்த இரவில் உங்களை யாதொரு ஆபத்தில்லாமல் காப்பாற்றும் பொருட்டு இயேசுவையும் மரியன்னையையும் நோக்கி வேண்டிக்கொண்டு, நீங்கள் செய்த பாவங்களுக்கு மனம்வருந்தி பொறுத்தலையடைந்து நல்ல தீர்மானத்தோடு இயேசுவின் திருஇருதய ஆதரவிலும், மரியன்னையின் அடைக்கலத்திலும் தூங்கச்செல்லுங்கள். உணவுக்கு முன்னும் பின்னும் பெற்றோர்கள் பக்தியோடு சிலுவை வரைந்து கொண்டு தாங்கள் உண்ணப்போகிற உணவை திவ்விய இயேசு ஆசீர்வதிக்கும்படி கேட்பார்களாக. இதைப் பார்க்கிற பிள்ளைகள் தங்களுடைய பெற்றோர்கள் செய்யும் செபத்தோடு தங்கள் செபத்தையும் ஒன்றித்து பக்தியில் வளருவார்கள்.

தேவாலயத்தில் நடைபெறும் வேத சடங்குகளுக்கு மரியன்னையும் சூசையப்பரும் போகத் தவறமாட்டார்கள். திவ்விய குழந்தை இயேசுவையும் தங்களோடு அழைத்துச் செல்வார்கள். கிறிஸ்தவக் குடும்பங்களிலுள்ள பெற்றோர்களனைவரும் தங்கள் பிள்ளைகளுக்கு தெய்வபக்தியின் முன்மாதிரிகையாயிருந்து ஞாயிற்றுக்கிழமை தவறாமல் தங்கள் பிள்ளைகளோடு கோவிலுக்குப்போய் திருப்பலி ஒப்புக் கொடுக்கட்டும். தாய் தந்தையர் செபம் பண்ணாமலும், பக்தியில்லாமலும், தேவநற்கருணை வாங்காமலும், திருப்பலியில் பங்குக் கொள்ளாமலும் இருப்பதைக் காண்கிற பிள்ளைகள் எப்படி பக்தியாயிருக்கக்கூடும்? தாய் தந்தையரிடம் காணப்படும் இந்தத் துர்மாதிரிகை பிள்ளைகளிடத்தில் நன்றாய்ப் பதிந்து பக்திக்குப் பதில் அசட்டைத்தனம் குடும்பத்தில் குடியிருக்கும். குடும்பத்தினருடைய நிர்ப்பாக்கியத்துக்கும் தீமைகளுக்கும் இதுவே அஸ்திவாரம்.

ஒரு பங்கில் ஒரு கிறிஸ்தவக் குடும்பத்துக்குத் தலைவனான தகப்பன் தன் வேதக் கடமைகளை நிறைவேற்றாமலும் ஞாயிற்றுக்கிழமை திருப்பலி ஒப்புக்கொடுக்காமல் அசட்டைத்தனமாய் நடந்துவந்தான். பெற்ற தாய் மட்டும் தன் பிள்ளைகளோடு திருப்பலிக்கு போவாள். ஒருநாள் இப்படிக் கோவிலுக்குப் போகும்போது குடும்பத்தின் மூத்த மகன் தன் தாயை நோக்கி, அம்மா, நான் வளர்ந்து பெரியவனான பிறகு என் தகப்பனார் செய்வதைப்போல நானும் திருப்பலிக்கு போகாமலிருக்கலாமா என்றான். தகப்பனுடைய துர்மாதிரிகையால் பிள்ளைக்கு நேரிடும் பெரிய ஆபத்தைப் பாருங்கள்.

வேதத்துக்கடுத்த கடமைகளை ஒரு குடும்பம் பிரமாணிக்கமாய் கடைப்பிடிக்கும்போது திவ்விய இயேசு அந்தக் குடும்பத்தை ஆசீர்வதிக்கிறார். அது பிறரன்புக்கும் பாக்கியத்துக்கும் இருப்பிடமாயிருக்கிறது. எந்தக் குடும்பத்தில் பக்தியில்லையோ அங்கே ஒரு புண்ணியமுமில்லை. அதற்குப்பதிலாய் சமாதானமின்மை, கீழ்ப்படியாமை, துர்மாதிரிகை விளைகிறது. பரலோகத்திலிருக்கிற நமது பிதாவுக்கு மரியாதை செய்யாத தாய் தந்தையைப் பார்க்கிற பிள்ளைகள் தங்கள் பெற்றோருக்கு மரியாதைக் குறைவாய் நடந்தால் அதனால் ஆச்சரியப்படுவாருண்டோ? பெற்றோர்களே தேவ ஊழியத்தில் சுறுசுறுப்பில்லாமலும், கடவுளை அன்புச் செய்யாமலும் இருப்பதைப் பிள்ளைகள் பார்த்தால் அப்பிள்ளைகள் எப்படி தங்கள் தாய் தந்தையர்பேரில் அன்பு பற்றுதலுள்ளவர்களாயிருப்பார்கள்? பெற்றோர்களே தேவ கட்டளைகளை மீறி நடப்பதாக பிள்ளைகள் அறிந்தால், பிள்ளைகள் கீழ்ப்படியாமல் நடப்பதைப் பற்றி ஆச்சரியப்பட இடமேது? அதற்கு விரோதமாய் தாய்தந்தையர், பக்தி, கற்பு, ஒழுக்கம் முதலிய கிறிஸ்தவப் புண்ணியங்களுக்கு மாதிரிகையாயிருந்து தங்கள் பிள்ளைகளுடைய மாசற்றதனத்தைக் காப்பாற்றிக் கிறிஸ்தவ

படிப்பினையில் அவர்களை வளர்க்கக் கவலைகொண்டால் இயேசுவின் திருஇருதயமானது இத்தகைய குடும்பங்களுக்குத் தமது அருட்கொடைகளையும் ஆசீர்வாதத்தையும் அளித்து, அக்குடும்பத்தைப் பிறரன்புக்கும் பாக்கியத்துக்கும் இருப்பிடமாக மாற்றும். இயேசுவைப்போல ஞானத்திலும் புண்ணியத்திலும் நல்லொழுக்கத்திலும் பிள்ளைகள் வளருவார்கள். தங்கள் பெற்றோர்கள் கடவுளின் பிரதிநிதிகளென்று அவர்களை மதித்து அன்புசெய்வார்கள். அவர்களுக்குக் கீழ்ப்படிந்து மரியாதை செய்வார்கள். கடைசியாய் இவர்களே தங்கள் பெற்றோருக்கு ஆறுதலும் மகிமையும் பாக்கியமுமாயிருப்பார்கள்.

தாய் தந்தையரே, நீங்கள் உங்கள் மகனுக்கு பெண் பார்க்கும்போது அல்லது மகளுக்கு கணவன் பார்க்கும்போது முக்கியமாய்க் கவனிக்க வேண்டியதென்ன? செல்வமும் மற்ற வெளிக்குணங்களுமல்ல, புண்ணியத்தையும் பக்தியையுந்தான் கவனிக்க வேண்டியது. செல்வமும் வெளிக் குணங்களும் கூடியசீக்கிரம் அழிந்துபோகும். பக்தியும் புண்ணியமுந்தான் நிலைத்திருக்கும். அவைகளே குடும்பத்திற்கு பாக்கியத்தை விளைவிக்கும். தங்கள் பிள்ளைகளுக்குப் பெண் அல்லது கணவன் பார்க்கிறபோது பணத்தையே மட்டும்பார்த்துத் தீர்மானம் பண்ணுகிற குருட்டுத்தனமான தாய்தந்தையரைப் பின் பற்றாதிருக்கக் கடவோம். பலதிருமணங்களின் முறிவுக்கு இதுவே காரணம்.

குருப்பட்டத்துக்கு அல்லது துறவற நிலைக்கு ஆண்டவர் தங்கள் பிள்ளைகளை அழைக்கிறதாக கிறிஸ்தவத் தாய் தந்தையர் அறிந்தால் தங்கள் பிள்ளைகளுக்கு முதல் எஜமானாகிய ஆண்டவருடைய சித்தத்திக்கு அவர்கள் தடைசெய்ய ஒருபோதும் துணியமாட்டார்கள். தங்களை விட அதிக சொந்தமான தங்கள் பிள்ளைகளைத் தேவ ஊழியத்துக்குக் கையளிக்கத் தடை செய்வது பிள்ளைகளுடைய நிர்ப்பாக்கியத்துக்கும், குடும்பத்தில் தேவகோபத்திற்கும் காரணமாயிருக்கும். சுபாவப் பற்றுதலானது எவ்வளவுதான் போராடினாலும், தங்கள் பிள்ளைகளில் ஒன்றை இறைஊழியத்திற்கு கொடுப்பது எவ்வளவு பெரிய மகிமை, எவ்வளவு பெரிய பாக்கியமென்று இயேசுவின் திரு இருதயப் பக்தர்கள் எண்ணுவார்கள். இந்த காணிக்கையால் இம்மையில் இயேசுவின் திருஇருதய விசேஷ ஆசீர்வாதத்தையும் மறுமையில் தங்கள் பிள்ளைகளோடுகூட நித்தியமோட்ச சம்பாவனையையும் பெற்றுக்கொள்வார்கள்.

**வரலாறு**

பிரான்ஸ் நாட்டில் மார்சேய் பட்டணத்தில் மேதகு ஆயர் பெல்லுன்ஸ் என்னும் ஆயர் காலத்தில் ஒரு பயங்கரமான கொள்ளை நோயுண்டாகி பலர் நாள்தோறும் சாகும்படி நேரிட்டது. மரியன்னையின் மினவுதல் சபை மடத்தில் தன் வாழ்நாளெல்லாம் இயேசுவின் திரு இருதயப் பக்தியை அதிகரிக்கச் செய்யும்படி முயற்சிசெய்த ஒரு பக்தியுள்ள அருள்சகோதரி இருந்தாள். இவளது முயற்சியால்

இயேசுவின் திருஇருதயப் படத்தை ஓர் தூய வெள்ளைத் துணியில் வரைந்து, இயேசுவின் திருஇருதயம் என்னோடு இருக்கிறது, போ, என்கிற வார்த்தைகளைப் படத்தைச்சுற்றி எழுதினார். இதே சாயலான படங்கள் பல வரைந்து பட்டணமெங்கும் ஸ்தாபிக்கவே, கொள்ளைநோயின் அகோரம் தணிய ஆரம்பித்தது. என்றாலும் நோய் இன்னும் முற்றிலும் பட்டணத்தை விட்டு விலகாததால், மேற்சொன்ன பக்தியுள்ள ஆயர் இயேசுவின் திருஇருதயத்தை நோக்கி அவருடைய இரக்கத்தை கெஞ்சி மன்றாடினார். நவம்பர் 1-ஆம் தேதி சகல புனிதர்கள் திருநாளன்று தமது ஆளுகைகுருக்களும், விசுவாசிகளும் பட்டணத்தின் பிரதான இடத்தில் கூடும்படி செய்து இயேசுவின் திரு இருதயத்திருநாளை வருடாவருடம் வெகு ஆடம்பரத்தோடு கொண்டாடுவதாக அங்கு கூடியிருந்த அனைவர்பேராலும் மேதகு ஆயர் இயேசுவின் திருஇருதயத்துக்கு வார்த்தைப்பாடு கொடுத்தார். தவிர மனிதர் செய்த சகல பாவாக்கிரமங்களுக்கும் பரிகார முயற்சியையும் வாசித்து தமது மேற்றிராசனத்தை முழுவதும் இயேசுவின் திருஇருதயத்துக்கு ஒப்புக்கொடுத்தார். அந்த நேரத்திலே கொள்ளைநோய் பட்டணத்தைவிட்டு விலகிவிட்டது.

**சிந்தனை.**

உன் வாழ்நாளெல்லாம் இயேசுவின் திருஇருதயத்தை அன்பு செய்து அவருடைய மகிமை தோத்திரத்துக்காக உன்னை முழுவதும் செலவழிக்க அத்திருஇருதயத்துக்கு காலையில் உன் செயல்களையும், நீ படும் இன்ப துன்பங்களையும் ஒப்புக்கொடு. இயேசுவின் திரு இருதய கருத்துக்கு விரோதமான எதையும் வெறுத்துத் தள்ளி, நீ செய்கிற சகலத்தையும் அத்திருஇருதயத்தின் கருத்தோடு ஒன்றித்து செய். இரவில் தூங்கச்செல்லுமுன் ஒன்றுபடுத்து. உன் ஒவ்வொரு அசைவையும் அத்தனை அன்பு முயற்சிகளாகவும், ஒறுத்தல் முயற்சிகளாகவும் இயேசுவின் திரு இருதயத்துக்கு ஒப்புக்கொடு.

இனி வாழ்வது நானல்ல, இயேசுதான். அவரிடத்தில், அவரோடு, நான் வேலைசெய்கிறேன், வருத்தப்படுகிறேன்., அன்பு செய்கிறேன், என்று உண்மயாகச் சொல்லக்கூடுமாகில் நமது பாக்கியமே பாக்கியம். தாழ்ச்சியும் சாந்த குணமும் விளங்கும் அன்புக்குரிய இயேசுவின் திரு இருதய மாதிரிகையாக உன் வாழ்வைச் சீர்திருத்தப் பிரயாசப்படு.

செபம்.

**இயேசுவின் இனிய திருஇருதயமே! நான் உம்மை அதிகமதிகமாய் அன்பு செய்தருளும்.**

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

# 21-ம் தேதி ****************************



## இயேசுவின் திருஇருதயம் தேவ சித்தத்திற்கு அமைதலைக் கற்பிக்கிறது.

இயேசு கிறிஸ்து வாழ்நாள் முழுவதும் தமது பிதாவின் திருச்சித்தத்திற்கு அமைந்து ஆண்டவருடைய சம்மதமில்லாமல் இவ்வுலகத்தில் ஒன்றும் நடைபெறகிறதில்லையென்றும், எல்லாச் செபங்களும் சிறிதோ, பெரிதோ அவருடைய மகிமைக்காகவும் ஆத்தும மீட்புக்காகவும் நடந்தேறுகிறதென்றும், அவருடைய அளவிட முடியாத அன்பு நிறைந்த இருதயத்தை நாம் பார்க்க வேண்டுமென்று திவ்விய இரட்சகர் அடிக்கடி ஞாபகப்படுத்துகிறார்.

இயேசுவை சிலுவையிலறைய கையளிக்கக் கூடாதென்றும் தடுக்க பிரயாசப்பட்ட புனித பேதுருவை திவ்விய இயேசு கண்டித்து "என் பிதாவினால் எனக்கு அளிக்கப்பட்ட பாத்திரத்தை நான் குடிக்கமாட்டேனே சுவாமி?" என்று திருவுளம் பற்றுகிறார் (அருள.18:11) தமது பாடுகளின்போது தமது பிதாவை மகிமைப்படுத்தி அவருடைய விருப்பத்துக்கு தம்மை ஒப்புக் கொடுக்கிறார். "**என் விருப்பப்படியல்ல உம் விருப்பப்படியே நிகழட்டும்**" என்று பேரொலியிடுகிறார். (லூக்22:42)

நமக்கு இவ்வுலகத்தில் நடக்கிறதெதுவும் தற்செயலல்ல, சர்வேசுரனுடைய சம்மதத்தால் நடக்கிறதென்று விசுவாசப்பற்றுதலோடு நினைத்து விசுவசிக்க வேண்டியது. "**நன்மையான காரியங்களும், கெடுதலான காரியங்களும் வாழ்வும், சாவும் ஆண்டவரிடமிருந்து வருகிறது**" (சர்வப்பிர. 11:14) மழை அல்லது வறட்சி, சௌக்கியம் அசௌக்கியம், செல்வம் தரித்திரம், சகலமும் நம்முடைய ஆண்டவரிட மிருந்து வருகிறது. நமக்கு வரும் சகல சோதனைகள், சிலுவைகள், துன்ப வருத்தங்கள் இன்னும் அவதூறு பற்பல வேதனைகள் எல்லாம் ஆண்டவருடைய உத்தரவால் நடக்கிறது. குற்றவாளிகளை அவர் தண்டிக்கிறாரென்பதற்கு யாதொரு சந்தேகமேயில்லை.

வேத கட்டளைகளை யூதர்கள் மீறினதற்கு ஆக்கினையாக அவர்களைப் பிலிஸ்தீனியர்களும் அஸ்ஸீரியர்களும் எதிர்த்துச் சண்டை செய்து, அவர்களுடைய வீடுகளையும், பட்டணங்களையும் சுட்டெறித்து வெறுமையாக்கி, அவர்களில் பலரையும் கொல்லும்படி சர்வேசுரன் உடனே உத்தரவளித்தார். தம்மால் அன்பு செய்யப்பட்ட ஜனங்கள்

அக்கிரம பாதையில் பிரவேசியாதபடி தடுத்து, உண்மையான தேவ ஊழியத்துக்கு வரும்படி அவர் எடுத்த முயற்சி இதுவே. இந்த முயற்சி அவர்கள்பேரில் அவர் வைத்த இரக்கத்துக்கும், அன்புக்கும் எடுத்துக்காட்டு என்பதற்குச் சந்தேகமில்லை.

தூயவரான யோபு என்பவருடைய சொத்துக்களெல்லாம் திடீரென்று அழிந்த மாத்திரத்தில் அவர் தம்முடைய விரோதிகளையென்கிலும் அல்லது பசாசையென்கிலும் குற்றம் சாட்டவில்லை. உடனே ஆண்டவரை நோக்கி தமது கண்களை உயர்த்தி: **ஆண்டவர் அறிவித்தார், ஆண்டவர் எடுத்துக்கொண்டார் : ஆண்டவரது பெயர் போற்றப்படக்கடவது.** (யோப்.1:21) என்றார். அப்படியே நாமும் செல்வாக்கோ தரித்திரமோ, சௌக்கியமோ அசௌக்கியமோ, அநுகூலமோ பிரதி கூலமோ, எல்லாம் சர்வேசுரன் நம்முடைய நன்மைக்காக வரவிடுகிறாரென்றும், நமது ஆத்தும மீட்புக்கு மிகவும் பிரயோசனமானவையென்றும் ஏற்றுக்கொண்டு இயேசுவின் திரு இருதயத்துக்கு மிகவும் நன்றியறிந்திருப்போமாக. இப்போது மோட்சபாக்கியத்தை அநுபவிக்கும் பல ஆத்துமாக்கள் அநுகூலமடைந்திருக்கிறார்கள்.

புனித. கூரேதார்ஸ் இதுகாரியத்தில் சொல்லுகிறதென்னவென்றால்: தமது நண்பர்களுக்கு இயேசு கொடுக்கிற கொடை சிலுவையே. அது யாரிடத்திலிருந்து வருகிறதென்று நாம் பார்க்கக்கூடாது. நம்முடைய அன்பை ஆண்டவருக்கு நாம் காண்பித்து நித்திய மோட்ச சம்பாவனையை அடைவதற்கு ஏற்ற வழியாக அதை ஆண்டவர் நமக்கு அனுப்புகிறார்.

இயேசுவின் திருஇருதயப் பக்தியை பரவச்செய்ய வெகு உதவியான சில வழிகளை புனித. மார்கரீத் மரியம்மாள் 1688-ம் வருஷம் பாப்பானவரிடம் கேட்டபோது அவர் உத்தரவு கொடாததினால் புனிதை மிகவும் துன்பப்பட்டார். அச்சமயம் ஆண்டவர் அவளுக்குத் தம்மைக் காண்பித்து, "மகளே, கவலைப்படாதே. நீ கேட்டது நடைபெறாதது நம்முடைய மகிமைக்காகத்தான். தற்சமயம் வெளிப்படையான வழிபாடுகளில்லாமலே ஆத்துமாக்கள் நம்மை அன்பு செய்து ஆவலுள்ளவைகளாயிருக்கின்றன. ஆனால் இந்த ஆவல் சீக்கிரம் தணிந்துபோகும். அப்போது இருதயங்களில் அன்பு சுடர்விடும்படி நீ கேட்ட சுதந்தரங்கள் மாத்திரமல்ல, அவைகளிலும் பெரியவைகளை பாப்பாண்டவர் வழியாய் உனக்குக் கிடைக்கத் தயை புரிவோம்" என்றார்.

தேவசித்தத்துக்கு அமைதல் என்னும் புண்ணியத்தைப்போல் நமது ஆண்டவருக்குப் பிரியமானது வேறொன்றுமில்லை. உரோமாபுரி இயேசுசபை மடத்தில் செலஸ்தினி என்ற துறவி ஒருவர் வியாதிப்பட்டுச் சாகுந்தருவாயிலிருந்தார். வைத்தியர், அவர் கூடிய சீக்கிரம் இறந்துபோவாரென்று தீர்மானித்தார். இன்று நாம் கொண்டாடுகிற

பெரிய புனிதர் ஞானப்பிரகாசியார் துறவிக்கு தம்மைக் காண்பித்து, பிரிய சகோதரரே, உமக்கு குணம்பெற ஆசையா? அல்லது சாகப் பிரியமா? என, துறவி கேட்டார். "தேவ சித்தமே எனக்குப் பிரியம்" என்றார் புனிதர். புன்னகைகொண்டு மிகுந்த பட்சத்தோடு, தேவ சித்தம் தவிர வேறோர் ஆசையும் உமக்கில்லாததாக நீர் சொன்னது நமது ஆண்டவருக்கு எவ்வளவு பிரியமாயிருக்கிறதென்றால், நீர் திரும்பவும் வாழ்ந்து அவருடைய திருஇருதய பக்தியை விர்த்திசெய்ய உழைக்கும்படியாய் அவர் உமக்கு உத்தரவு கொடுக்கிறார் என்றார்.

ஒரு துறவற சகோதரிக்கு முழுதும் கண் தெரியாமல் போய்விட்டது. யாராகிலும் தன்மேல் பரிதாபப்படுகிறதாக கண்டால், "என்மேல் பரிதாபப்படாதேயுங்கள். உலக காரியங்களையும், பிரகாசத்தையும் நான் பார்ப்பதினால் எனக்கு உண்டாகும் சந்தோஷத்தை நமது ஆண்டவர் எடுத்துக்கொண்டதற்குக் காரணம், என்னுடைய கண்கள் மோட்சத்தில் அவருடைய திரு இருதயத்தின் தெய்வீக ஜோதி வடிவை கண்டு களிக்கும்படியாகவேயன்றி மற்றப்படியல்ல. தவிர, இவ்வுலகத்தில் ஒரே ஒரு பொல்லாப்பு உண்டு: அது பாவம். சிலுவைகளும், துன்பங்களும், தேவாசீர்வாதத்தின் அடையாளங்கள். அவைகள் பாக்கியமேயொழிய பொல்லாப்பல்ல" என்று மறுமொழி சொல்லுவாள்.

இயேசுவின் திருஇருதயப் பக்தியை துறவறவாசிகளிடத்திலும், இல்லறவாசிகளிடத்திலும் வளரசெய்ய தமது வாழ்நாளெல்லாம் உழைத்த இயேசுசபை ருசின் குரு சாகும் படுக்கையிலிருக்கும்போது, ஆ! இயேசுவின் திருஇருதயம் அநுபவித்த வேதனைகளோடு நாம் படும் வேதனைகளையும் ஒன்றுபடுத்தி அவைகளை நமது சம்பாவனையாக மாற்றுகிறது எவ்வளவு இன்பமானது என்று அடிக்கடி அவர் சொல்லுகிற சப்தம் மற்றவர்கள் காதில் விழும். அவர் அனுபவித்த பயங்கரமான வேதனை வெகு உக்கிரமாயும் சகிக்கக்கூடாததாயும் இருக்கும்போது தமது திருஇருதயத்தைக் காட்டும் பாவனையாக அவருக்கு முன்னாலிருந்த திவ்விய இரசகருடைய படத்தைப் பார்ப்பார். எல்லா வேதனைகளையும் மறந்தவராய், சாது அமரிக்கையோடு புன்னகைகொள்வார். அவர் புத்தி சுயாதீனத்தைச் சற்று இழந்தவராகத் தெரிந்த அந்த நேரத்திலும், இயேசுவின் திருஇருதயம் என்கிற நாமத்தைச் சொன்னாலே போதும். உடனே அன்பு பற்றுதலோடு அவ்இனிய நாமத்தை உச்சரிப்பார். தாம் முழுவதும் புத்தி சுயாதீனம் இழந்த சில சமயங்களில் இயேசுவின் திரு இருதயத்தில் கண்டடையும் அருட்கொடைகளை கிறிஸ்துவர்கள் நன்றாய்க் கண்டுபிடிக்கச் செய்வதற்கு உதவியான புது வழிகளையும், சுதந்திரங்களையும் பாப்பானவரிடம் கெஞ்சிக் கேட்கும்படி உரோமாபுரிக்குப் போகவேண்டுமென்று சொல்லிக்கொண்டே படுக்கையைவிட்டு எழுந்திருக்கப் பிரயாசைப்படுவார். கடைசியாய் தனது

கண்கள் ஆண்டவருடைய திருஇருதயத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே சமாதான ஐக்கியமாய் மரித்தார்.

நாமும் தேவ சித்தத்துக்கு முழுதும் அமைந்த மனதோடு இயேசுவின் திரு இருதய சகலத்தையும் ஏற்றுக் கொள்வோமாக. நமது உத்தமதனம், தேவசித்தத்துக்கு அமைந்து நடத்தலிலேதான் அடங்கியிருக்கிறது. அப்போதுதான் ஒரு பாசமுள்ள அரசனைப் போல் நமது ஆண்டவர் நமது ஆத்துமத்தில் அரசாள்வார். சகலத்திலும் ஆண்டவருடைய திருக்கரத்தையும் இருதயத்தையும் காண்போமேயாகில் சோதனைகள் நடுவிலும் வேதனைகள் நடுவிலும் நம்முடைய இருதயம் அமைதியாயிருக்கும்.

**வரலாறு**

பாஜி பட்டணத்து புனித மதலேனம்மாள், ஓர்நாள் பரவசத்திலிருக்கும் போது புனித ஞானப்பிரகாசியார் மோட்சத்தில் அனுபவிக்கிற மகிமைப் பிரதாபத்தைக் காணப் பாக்கியம் பெற்றாள். அவள் கண்டதை விவரித்துச் சொல்ல அவளுக்கு வார்த்தை வராததினால் "என்ன மகிமை! என்ன மகிமை!" என்கிற இந்த இரு வார்த்தைகளையே உச்சரித்து, ஞானப்பிரகாசியார் மோட்சத்தில் இவ்வளவு மேலான மகிமைப் பாக்கியம் அனுபவிக்கக் காரணம் அவர் உயிரோடிருந்த காலத்தில் மன வல்லிய ஜெபத்தாலும், தேவ அன்பு முயற்சிகளாலும் இயேசுவின் திரு இருதயத்தில் வாழ்ந்து வந்ததே என்றாள்.

**புனித மார்கரீத் மரியம்மாளின் சகிர்த வாக்கியம்**

தபோர் மலையில் இயேசுக் கிறிஸ்துநாதரிடத்தில் விளங்கிய அன்பு கல்வாரி மலை வேதனைகளில் குறைந்து போகவில்லை. நமக்கு வரும் சகலத்துக்கும் சர்வேசுரனைப் புகழ்வோமாக. ஆண்டவருடைய சித்தம் சகலத்திலும் நிறைவேறக்கடவது. சர்வேசுவரனுடைய சித்தத்துக்குக் கீழ்ப்படிந்து அநுகூலமான நேரத்திலும், பிரதிகூலமான நேரத்திலும், சமமாய் அவருக்கு நன்றியறிந்திருக்கக்கடவோம். நாம் தேவசித்தத்துக்குக் கீழ்ப்படிந்து செய்கிற சகலத்திலும் சர்வேசுவரன் அதிகப் பிரியப்படுகிறார்.

**மனவல்லிய ஜெபம்**

தேவ நற்கருணையிலிருக்கும் இயேசுவின் திரு இருதயமே! எங்களிடத்தில் விசுவாசம், நம்பிக்கை, தேவ அன்பை அதிகரித்தருளும்.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

# 22-ம் தேதி ******************************



## இயேசுவின் திருஇருதயம் அநித்திய நித்திய காரியங்களை நாம் மதிக்கக் கற்பிக்கிறது

இயேசுக்கிறிஸ்து நாதர் மகிமை பெருமையோடும் செல்வத்தோடும் இந்த உலகத்தில் வந்து வாழ்ந்திருக்கலாம். அதற்கு விரோதமாக இவ்வுலக அழிவுக்குரிய நன்மைகளை நிந்தித்து பரலோக காரியங்களை மதித்து அன்பு செய்ய தமது வார்த்தைகளாலும், விசேஷமாய் தமது திவ்விய மாதிரிகையாலும் படிப்பிக்கச் சித்தமானார். அப்போஸ்தலர் களுக்கும், யூதேயா நாட்டார்களுக்கும் தாம் போதித்த போதகங்களிலும் வீணும் விழலுமான இவ்வுலக காரியங்களிலிருந்து அவர்களுடைய பற்றுதலைப் பிரித்து அவர்களுக்கு ஞான வெளிச்சம் கொடுத்து முதன் முதலில் பரலோக இராச்சியத்தையும், எப்போதும், அழியாமல் நீடித்திருக்கிற நன்மையையும் தேடும்படி அவர்களைத் தூண்டி ஏவுகிறார். அதே பிரகாரம் இப்போது திவ்விய இயேசு இவ்வுலகத்துக்காக அல்ல, மறு உலகத்துக்காக உழைக்கும்படி நம்மையும் தூண்டி அழைக்கிறார். விசுவாச மந்திரத்தில் சொல்லியிருப்பது போல் கிறிஸ்துவர்கள் நித்திய ஜீவியத்தை விசுவசிக்கிறார்கள் என்பது மெய். ஆனால் தங்கள் நடவடிக்கையில் எத்தனை பேர் அழியாத நித்திய செல்வத்தைத் தேடுகிறவர்கள்?

பிள்ளைகள் வெகு ஆசை ஆவலோடு விளையாடுகிறதை நாம் பார்க்கையில் அவர்கள் அந்த நேரத்தில் செய்கிறதெல்லாம் விளையாட்டுக் காரியமென்றே எண்ணுவோம். வயதில் முதிர்ந்தவர்கள் செய்கிற அலுவலை முக்கிய அலுவலென்று சொல்லுவோம். என்றாலும் உலகின் கண்ணுக்கு முக்கியம் என்று நாம் சொல்லுகிற அலுவல்கள் நித்தியத்துக்கு உபயோகப்படாவிட்டால் இதுவும் சிறுவர் விளையாட்டென்றே சொல்லவேணும். வேதபுத்தகம் இவைகளை வீண் பெருமையின் மாயை (ஞான. 4 : 12) என்று அழைக்கிறது.

பல கிறிஸ்துவர்கள் துவக்கத்தில் தங்கள் ஆத்தும மீட்பையும், நித்தியத்துக்கடுத்த காரியங்களையும் தேடுகிறதுண்டு. வேறு பலர் உலக காரியங்களின் பேரில் எவ்வளவு கவலைக் கொண்டிருக்கிறார்களென் றால் பரலோக காரியங்களைப் பற்றி நினைக்க முதலாய் அவர்களுக்கு நேரமில்லை. அவர்களுடைய ஏக ஆசை எவ்விதத்திலும் செல்வம், பெருமை, உயர்ந்த பதவி, சம்பாதிக்க வேணுமென்பதே. இதைப் பற்றி

இராப்பகலாய் நினைப்பார்கள். இதுதான் இவ்வுலகத்தில் அவர்களுடைய முக்கிய அலுவலென்று எண்ணுவார்கள். எப்படியாகிலும் அடையவேண்டும். இதினிமித்தம் என்ன வேலை, பிரயாசை, துன்பங்கள் வந்தாலும் பரவாயில்லை. அதனை அடைந்தாலே போதும். ஆனால் திடீரென்று சில சமயம் சாவு வருகிறது. சகலத்தையும் விட்டு மறுலோகத்துக்குப் போகவேண்டும். சிறுபிள்ளைகளின் விளையாட்டில் தங்கள் வாழ்நாளைச் செலவழித்தார்கள். இப்போது யாதொரு ஆயத்தமின்றி வெறுங்கையாய் சர்வேசுவரனுக்கு முன் ஆஜராகிறார்கள்.

என்றாலும் உலக காரியங்களை, விசேஷமாய்த் தங்கள் தகுதிக்கு அவசரமானவைகளைத் தேடவேண்டாமென்று நமது ஆண்டவர் தடுக்கிறதில்லை. நமது மீட்பே முதன்மையும் அதிமுக்கியமுமான காரியமென்றும், இன்னும் சொல்லவேணுமாகில், இதுவே, இவ்வுலகத்தில் நமக்கு அவசரமான ஒரே ஒரு காரியமென்றும் நாம் மதிக்கவேணுமென்பது அவருடைய விருப்பம். நமது விருப்ப வெறுப்புகளிலும் வீண் மகிமையிலேயுமல்ல, நமது மீட்பை உறுதிப்படுத்தும் விஷயங்களில்தான் நம்முடைய புத்தி மனதைச் செலுத்தவேணுமென்று கேட்கிறார். இவ்வித புத்தியோடு நாம் நடந்தால் இவ்வுலகத்தில் நாம் செய்கிற எந்த அலுவலும் நமது மீட்புக்கு தடையாக இல்லாமல் நம்மை நித்திய பேரின்பத்துக்கு கொண்டுபோய்ச் சேர்க்க ஏதுவாயிருக்கும்.

பக்தி சுறுசுறுப்புள்ள நல்ல கிறிஸ்துவர்கள் அதிக விவேகத்தோடு தங்கள் ஆத்தும இரட்சண்யத்தைத் தேடுவார்கள். தாங்கள் குடும்பத்துக்குத் தலைவர்களாயிருக்கும் பட்சத்தில் தங்கள் பிள்ளைகள் இருதயத்தில் தேவபயத்தையும் அன்பையும் மூட்டி, பக்தியிலும், கிறீஸ்துவப் புண்ணியப் பயிற்சியிலும் அவர்களை வளர்ப்பார்கள். ஞாயிற்றுக்கிழமை வேலை, மோசமான வியாபாரம், இது முதலிய கெட்ட வழிகளால் இவ்வுலக ஆஸ்தியைத் தேடுகிறதற்குப் பதிலாய் தேவ கற்பனைகளையும் தங்கள் கடமைகளையும் நிறைவேற்றுவதில் வெகு கவனமுள்ளவர்களாயிருப்பார்கள். செல்வந்தர்களைப் பற்றி பொறாமைப் படாமல் திருப்தியடைந்து நித்திய பாக்கியத்துக்கு ஆவலோடு காத்துக் கொண்டிருப்பார்கள்.

**வரலாறு**

ஏற்கனவே போர்வீரனாயிருந்து பிற்பாடு குடியானத் தொழில் செய்துவந்த பக்தி சுறுசுறுப்புள்ள கிறிஸ்துவன் ஒருவனோடு ஆண்டவர் தங்களை வைத்திருக்கும் இந்த எளிய நிலையில் ஒரு வேதபோதகர் பேசும்படி நேரிட்டது. இவர்கள் பேசிக்கொண்டிருந்த இடம் ஓர் பெரிய செல்வந்தருடைய கோட்டைக்கு அருகிலிருந்தது.

இந்த இலட்சப் பிரபு உலக சொத்து சுகத்தின் பேரில் கவலை கொண்டிருந்தாரேயொழிய தன் ஆத்தும மீட்பைப் பற்றி கவனித்தவரல்ல! குருவானவர் கிறிஸ்துவனை நோக்கி, இந்தப் பெரிய செல்வந்தருடைய செல்வாக்கைப்பற்றிச் சில சமயத்தில் நீ பொறாமைப்படுகிறதில்லையா? என, குடியானவன் : நான் ஏன் பொறாமைப்படவேண்டும்? அந்த சீமான்தான் என்மேல் பொறாமைப்படவேண்டும். அவன் சாகும்போது அவனுடைய நிலபலமெல்லாம் தன்னோடு கொண்டுபோவானா? அந்த செல்வந்தனை எனக்குத் தெரியும். நான் அவனைவிட ஐந்து அங்குல வளர்த்தியுள்ளவன். நாங்களிருவரும் கல்லறையிலிருக்கும்போது நான் அவனைப் பார்த்து, "ஐயா மிராசுதாரரே, இப்போது நான் உன்னைவிட அதிக சொத்துக்காரன்; ஏனெனில் உன்னைவிட ஐந்து அங்குல பூமி இப்போது எனக்கு அதிகமுண்டு என்று சொல்வேன். ஆதலால் பாருங்கள், நானல்ல, அந்த மிராசுதாரர் தான் சாவுக்குப்பின் என்மேல் பொறாமைப்படுவார்" என்றான்.

நித்திய நன்மையையும், அநித்திய நன்மையையும் சரியானவிதமாய் மதிக்கும்படி மோட்சத்தில் வாழும் முத்தர்களையும் நரகத்தில் வேகும் சபிக்கப்பட்டவர்களையும் நமது நினைவால் போய்ச் சந்திப்பது உத்தமம். இப்போது உலகத்தைப்பற்றி புனித. ஞானப்பிரகாசியார் என்ன நினைக்கிறார் என்று வினவினால், "இவ்வுலக செல்வத்தை வெறுத்துவிட்டு நித்திய செல்வத்தை தெரிந்து கொண்டதில் நான் எவ்வளவு ஞானமுள்ளவனாய் நடந்தேன். காஸ்திலியோன் என்னும் என் அரண்மனைக்கும், அரசுக்கும் என்ன ஆனது! என்னை எதிர்பார்த்திருந்த கிரீடத்தின் மகிமை பெருமை இப்போது எங்கே? நான் அந்த அழிவுக்குரிய நன்மைகளை விரும்பி அனுபவித்திருப்பேனாகில் பலருக்குச் சம்பவித்ததுபோல் நானும் சிலவேளை என் ஆத்துமத்தை இழந்துபோயிருக்கலாம். வீணும் விழலுமான காரியங்களைத் துவேஷித்து அழியாத மகிமைப் பாக்கியத்தை தெரிந்து கொண்டதினிமித்தம் நான் எவ்வளவோ பாக்கியமுள்ளவனாயிருக்கிறேன்" என்பார்.

இவ்வுலக வீண் மாயைகளால் பசாசானது உன் ஆத்துமத்தை ஏமாற்றி இழுக்கப் பிரயாசப்பட்டால், புண்ணிய பாதை வெகு கஷ்டமானதென்று உனக்குக் காட்டி பயமுறுத்தினால், உன் கண்களை இயேசுவின் திரு இருதயத்தை நோக்கி உயர்த்தி, மோட்சத்தையும், நித்தியத்தையும் ஞாபகப்படுத்திக்கொள். நாம் ஒரு நல்ல வெகுமதியை எதிர்பார்க்கும்போது வெகு கஷ்டமான வேலைகளையும் சந்தோஷமாய்ச் செய்வோமல்லவா? பெரிய இலாபம் வரப்போகிறதென்கிற நம்பிக்கை எவ்வளவு பிரயாசையான வேலையையும் இனிமையாக மாற்றிவிடும்.

நித்திய சம்பாவனை விஷயமாயும் இதேவிதம் சொல்லலாம். தென்னிந்தியாவின் அப்போஸ்தலராய் வேதசாட்சி முடிபெற்ற புனித. அருளானந்தர் வேதத்துக்காகத் தமது சீடர்களோடும் சில கிறிஸ்துவர்களோடும் வெகு கொடுமையான வேதனை அனுபவிக்கும்போது "மோட்சத்தின் பக்கமாய் உங்கள் கண்களை உயர்த்துங்கள். சிலுவையோ சிறிதுகாலம்; சம்பாவனையோ முடிவில்லாதது" என்று தம் தோழர்களுக்குத் தைரியம் சொல்லித் தேற்றினார்.

மேற்கண்ட வார்த்தைகளே இயேசுவின் திரு இருதயப் பக்தர்களின் வாக்கியமாக இருக்கக்கடவது. அவைகள் நமது உலக பற்றுதல்களினின்று நம்மைப் பிரித்துப் பரலோக காரியங்களை நாடும்படி செய்யும்.

## புனித. மார்கரீத் மரியம்மாளின் வேண்டுகோள்

திவ்விய இயேசு அன்பு செய்கிறதை மட்டும் நான் அன்புசெய்கிறதும் அவருக்குப் பிரியமில்லாத அனைத்தையும் வெறுத்துத் தள்ளுவதுமே என் ஆசை. மனிதர்களால் மதிக்கப்படவும், புகழப்படவும் உண்டாகும் ஒவ்வொரு வீணாசையையும் முற்றிலும் தள்ளிவிடு. இயேசுவின் திரு இருதயத்துக்குத் திருப்தி வருவிக்கிறதே உன் ஏக எண்ணமாயிருக்கட்டும். சிருஷ்டிக்கப்பட்ட பொருட்கள் பேரிலுள்ள பற்றுதல் இயேசுகிறிஸ்துவின் அன்பை கொல்லும் நஞ்சு. உன் இருதயத்தை முழுவதும் சர்வேசுரனுக்குக் கொடுப்பதில் பிரமாணிக்கமாயிரு. உலக காரியங்கள் மேலுள்ள ஆவலும் விசேஷமாய் படைப்புகள் மேலுள்ள பற்றுதலும் உன் இருதயத்தைப் பகிர்ந்துபோக விடாதே. உன்னால் நேசிக்கப்பட்ட மனிதர் உன்னை நேசிக்கவில்லையென்று கண்டால், திவ்விய இயேசு உன்னை அன்புசெய்கிறாரென்றும், அழிவுக்குரியவைகளின் மேல் உன் பற்றுதலை வைப்பது அவருக்குப் பிரியமில்லையென்றும் அறிந்துகொள். (பர. அரு. பிதா.)

## மனவல்லய ஜெபம்.

அன்பால் பற்றியெரியும் இயேசுவின் திரு இருதயமே! உமது எங்களிருதயத்தைச் சுட்டெரித்தருளும்.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

# 23-ம் தேதி ***************************



## இயேசுவின் திருஇருதயம் பொறுமைக்கு மாதிரிகை.

இயேசுவின் திருஇருதயத்துக்குப் பிரியப்படும்படியாய் இன்று பொறுமை என்கிற புண்ணியத்தை விசேஷ விதமாய் கடைபிடிப்போமாக. இந்தப் புண்ணியமானது எவ்வளவு சம்பாவனைக்குரியதென்றும், நம்முடைய சுபாவத்துக்கு எவ்வளவு வருத்தமானதென்றும் அறிந்த இயேசுக் கிறிஸ்துநாதர் தமது வாழ்நாளில் தம்முடைய வார்த்தைகளினாலும், மாதிரிகையினாலும் அதை கடைபிடித்து நமக்குத் தைரியம் வருவிக்க தம்மாலான முயற்சி செய்தார் தமது பாரமான சிலுவையைப் பொறுமையோடு சுமந்து, அதின் மேல் நமக்காக மரித்து நமது பேரில் வைத்த அன்பை காண்பித்தார்.

திருஇருதயத்துக்கு புகழ்ச்சியாக சில வெளியரங்கமான பக்திமுயற்சிகளை அனுசரிப்பதினாலே அத்திரு இருதயத்தின் மேல் நாம் வெகு பற்றுதல் உள்ளவர்களாயிருக்கிறோம் என்று நினைக்கிறது பெரிய தவறு. செபம், ஞானவாசகம் முதலிய வெளி அநுசாரங்களெல்லாம் தன்னிலே உத்தமமானவை என்றாலும் திரு இருதயத்தின் மெய்யான பத்தி இவைகளாகமாட்டாது. நாம் மெய்யாகவே ஆண்டவருடைய சீடர்களும் அன்பர்களாக வேண்டுமானால் அவருடைய பரித்தியாகமும் பொறுமையும் நம்மிடத்திலிருக்க வேண்டும்.

அன்பு பற்றுதலோடு தேவசித்தத்துக்கு அமைந்து, நமக்கு வரும் துன்பங்களையும், சிலுவைகளையும் நித்திய சம்பாவனையை எண்ணி திவ்விய இயேசுவுக்காக ஏற்றுக்கொள்ள செய்கிறதே பொறுமை என்கிற புண்ணியம். அது சுபாவமாய் நமது இருதயத்தில் வளரும் தன்மையுள்ளதல்ல. அதற்கு விரோதமாய் நமது சுபாவத்துக்கு இந்தப் புண்ணியம் முற்றும் பிரியமில்லாதது; ஆனால் வெகு சம்பாவனையை விளைவிக்கக்கூடியது. இந்தப் புண்ணியத்தைச் சம்பாதிக்க தாழ்ச்சி, பிறரன்பு, சுய ஒறுத்தல் அவசியம். திவ்விய இயேசு சகலருக்கும் சில இலேசான சிலுவைகளை அனுப்புகிறார். இந்தச் சிலுவைகள் ஏதென்றால் நமக்கு வரும் துன்பங்கள், சோதனைகள், வியாதிகள் சாவு முதலியவை. இச்சிலுவைகளை இயேசுவின் அன்புக்காக ஏற்றுக்கொண்டு அவருடைய பாடுகளோடு ஒன்றித்து ஒப்புக்கொடுப்போமேயாகில் பொறுமையை அனுசரிக்கிறோம்.

நமது சிலுவைகளையும், துன்பங்களையும் பொறுமையோடு ஏற்றுக் கொள்ளும்படி தைரியம் கொடுப்பதற்கு இயேசுகிறீஸ்துவின் திவ்விய மாதிரிகையைப் போல் சக்தியுள்ளது மற்றெதுவுமில்லை. நமது பலவீனத்தை ஏற்கனவே அறிந்த திவ்விய இரட்சகர் பாடுகளின் பாதையில் முன்னடைந்து நமக்கு வழி காண்பித்தார். தமது வெளியரங்க வாழ்வில் பரிசேயர்களுடைய பகையால் இடைவிடாத துன்பம் அனுபவித்தார். அவர்களுடைய நிந்தை அவதூறுகளை மாறாத பொறுமையோடு ஏற்றுக் கொண்டு மிகுந்த அன்போடு அவர்களோடு புழங்கினார். மூன்று வருட காலமாய் திவ்விய இயேசுவின் போதகங்களைக் கேட்டிருந்தும் இன்னும் தங்கள் அறியாமையால் மனித புகழ்ச்சியைத் தேடுவதில் கருத்தாயிருந்த தமது அப்போஸ்தலர்களோடு ஆண்டவர் எவ்வளவோ பொறுமையாயிருக்க வேண்டியிருந்தது! என்றாலும், அவர்களுடைய குற்றங் குறைகளையும் பாராமல், அவர்களோடு மிகுந்த அன்போடு எப்போதும் பேசுகிறார்.

தமது திருப்பாடுகளின்போது இயேசுக்கிறீஸ்துநாதர் நிந்தை அவமானங்களையும், வேதனைகளையும் சாவையும் மிகுந்த பொறுமையோடு அனுபவிக்கிறார். இந்த நேரத்தில் தம்மையும் தமது பாடுகளையும் மறந்து, தமது விரோதிகளையும், நல்ல திருடனையும், அப்போஸ்தலர்களையும், தமது திரு மாதாவையும் நினைத்து, சகலருக்கும் அன்பைக் காண்பித்து, ஆறுதலான வார்த்தைகளைச் சொல்லித் தமக்குத் துரோகம் செய்தவர்களையும் மன்னிக்கிறார்.

இதோ நமது திவ்விய மாதிரிகையைப் பாருங்கள்! நமது சோதனை நேரத்தில், துன்பவேளையில் இயேசுவின் திரு இருதயத்தின் பக்கமாய் நமது இருதயத்தை உயர்த்தக்கடவோம். நாம் வருத்தப்படுகிறதைக் கவனியாமல் திவ்விய இயேசு நமது அன்புக்காக எவ்வளவு வருத்தப்படுகிறாரென்று கவனிக்கக்கடவோம். இந்த நினைவே நமது துன்பங்களையெல்லாம் இன்பமாக மாற்றும்.

திவ்விய இயேசுவின் உணர்ச்சியையும், மாதிரிகையையும் தங்களிடத்திலும் விளைவிக்க புனிதர்கள் தங்களாலான பிரயாசப்பட்டார்கள். வேதனையால் அமிழ்ந்தின புனித லித்வீனம்மாள் தேவசித்தத்துக்குச் சந்தோஷமாய் அமைந்து, என் இயேசுவே! நீர் எனக்காக அனுபவித்த துன்பங்களுக்கு முன்பாக நான் அநுபவிக்கிறது வெகு குறைவு என்று சொல்லிக் கொண்டு வருவாள்.

புனித ஜெர்த்துருத்தம்மாள் ஆண்டவரை நோக்கி அவருடைய திரு இருதயத்துக்குப் பிரியப்பட தான் செய்யக்கூடியது எது என்று கேட்கையில், திவ்விய இயேசு, மகளே, நாம் உனக்கு அனுப்புகிற வேதனைகளை அமைந்த மனதோடு ஏற்றுக்கொள்ளுகிறதைவிட நமக்கு அதிக பிரியமானது ஒன்றுமில்லை என்று திருவுளம் பற்றினார். ஓர்

புண்ணியவானை நோக்கி ஓர்நாள் நமது ஆண்டவர், "நமது இருதயத்துக்குப் பிரியமானவர்களுக்கு நாம் மூன்று விதமான உதவி புரிகிறோம். அதாவது பாவத்தை விலக்குதல், நற்கிருத்தியங்களைச் செய்தல், நமக்காக வேதனைப்படுதல். இம்மூன்றில் கடைசியானது மற்ற இரண்டிலும் அதிமேலானது" என்றார். இயேசுவின் அன்புக்காக மிகவும் வேதனை அநுபவித்த புனித. தெரேசம்மாள் தன் மரணத்துக்குப்பின் ஓர் சகோதரிக்குத் தன்னைக் காண்பித்து, "நான் மோட்சத்தில் அனுபவிக்கிற பெரிய பாக்கியத்துக்குக் காரணம் நான் செய்த நற்செயல்கள் மாத்திரமல்ல; ஆனால் நமது ஆண்டவருடைய அன்பினிமித்தம் அமைந்த மனதோடும் சந்தோஷத்தோடும் நான் ஏற்றுக்கொண்ட சிலுவைகளே அம்மாத்திரம் பாக்கியத்துக்கு விசேஷ காரணம்" என்றாள்.

புனிதர்கள் இவ்வுலகில் சிலுவையின் நடுவில் சர்வேசுரனை அன்புசெய்கிறார்கள் மறுமையில் பாக்கியத்தின் நடுவில் அவரை அன்பு செய்கிறார்கள்.

மிகுந்த அவமானம் நிறைந்து தூற்றப்பட்ட ஓர் நல்ல கிறிஸ்துவன் ஆண்டவரை நோக்கி முறைப்படும்போது அவனுடைய மாசற்ற தனத்தை அறிந்த திவ்விய இயேசு அவனைப்பார்த்து, "மகனே, நீ மாசற்றவனென்று சொல்லுகிறாய், சரி. ஆனால் நாம் என்ன செய்தோம்? நம்மை ஏன் குற்றம் சாட்டவேண்டும், சிலுவையிலறைய வேண்டும்," என்று சொன்னார். உடனே அந்த நல்ல கிறிஸ்துவனுடைய ஆத்துமம் ஆறுதலும் தைரியமுமடைந்தது. இயேசுசபை துறவி ஒருவர் தன் கடைசி வேளையில் இராப்பகலாய் வெகு வாதைப்பட்டார். சகோதரே, வியாதியினிமித்தம் இராப்பகல் தூக்கமின்றி வெகு வருத்தப்படுகிறீரா என்று பிறர் அவரைக் கேட்கையில், துறவி "இல்லை இல்லை, வேதனைப்பட்ட நமது ஆண்டவர் இப்போது மோட்சத்தில் மட்டில்லாப் பாக்கியம் அனுபவிக்கிறார். இதை நினைக்க நினைக்க எனக்கு வெகு ஆறுதலாயிருக்கிறதோடுகூட என் இருதயத்தை நம்பிக்கையாலும் சந்தோஷத்தாலும் நிரம்புகிறது" என்றார்.

**வரலாறு**

இயேசுசபைக் குருவான செப்பாரி குருவானவர் ஒரு பெரிய கலாசாலைக்கு தலைவராக நியமிக்கப்பட்டபோது இந்தப் பொறுப்பான உத்தியோகத் தினிமித்தம் வெகுவாய் அஞ்சி மனத்தத்தளிப்பாயிருக்கும் நேரத்தில் தாம் புண்ணிய வழியில் நடத்திவந்த பாவி மதலேனம்மாளிடம் அதை அறிவித்து, தேவ சித்தம் ஏதென்று தெளிவிக்க ஆண்டவரை நோக்கி வேண்டிக்கொள்ளக் கேட்டார். புனிதை, புனிதரை நோக்கி, "திவ்விய இயேசு தமது சிலுவையைத் தாமே ஏற்றுக்கொண்டதுபோல், நீரும் இந்த உத்தியோகத்தை

ஏற்றுக்கொள்ளவேண்டுமென்பது ஆண்டவர் சித்தம். திவ்விய இரட்சகர் சிலுவையின்மேல் எவ்வளவு அமைந்த மனதோடு இருந்தாரோ அப்படியே நீரும் இருக்கவேண்டும். பாடுபடுதல், தமது பிதாவை அன்புசெய்து, மகிமைப்படுத்துதல் ஆகிய இவைகளை மாத்திரம் ஆண்டவர் சிலுவையில் தேடினதுபோல் நீரும் அவைகளை மாத்திரமே தேடவேண்டும்" என்றாள்.

இயேசுவின் திரு இருதயப் பக்தர்கள் ஆண்டவருடையவும், புனிதர்களுடையவும், மாதிரிகையையும் உணர்ச்சியையும் பின்பற்றப் பிராயசப்படுவார்கள். புனிதர்கள் நம்மைவிட நல்ல சுபாவத்தைக் கொண்டிருந்தார்களென்றும், அவர்களுக்குப் பொறுமை என்னும் புண்ணியம் மிக எளிதாயிருந்ததென்றும் நினைக்கக்கூடாது. நம்மைப் போலவே புனிதர்களும் மிகவும் கஷ்டப்பட்டார்கள். பொறுமை முதலிய மற்றப் புண்ணியங்களை கடைபிடிக்க மிக அக்கறையும் சுய ஒறுத்தலும் அவசரமாயிருந்தது. தங்களுக்கு வரும் வேதனைகள் சோதனைகளை அநுபவித்து பிறருடைய குற்றங் குறைகளை சகிக்க தங்கள் ஆசாபாசங்களை அடக்கவேண்டியிருந்தது. ஆனால் அவர்களுடைய உயிருள்ள விசுவாசமும் தேவ அன்பும் தங்களை ஜெயிக்கவும், தங்களுடைய துன்பங்களைப் பொறுமையோடு அநுபவிக்கவும் உதவியாயிருந்தன.

ஆதலால் இனிமேலாக நாமும் திவ்விய இயேசுவைப் போல் நமது சிலுவைகளை அமைந்த மனதோடும் அன்போடும் ஏற்றுக் கொள்வோமாக. திரு இருதயத்தின் கருத்துக்களோடு நமது கருத்தையும் ஒன்றித்து, தேவ தோத்திரத்துக்காவும், திருச்சபைக்காகவும், நம்முடைய ஆத்தும மீட்புக்காகவும், நமது சிலுவைகளையும் அவைகளால் நமக்கு வரும் பலன்களையும் ஒப்புக்கொடுப்போமாக.

### புனித மாக்கரீத் மரியம்மாளின் சுகிர்த வாக்கியம்.

என் சரீரமானது எவ்வளவுக்கு வேதனைப்படுகிறதோ அவ்வளவுக்கு வேதனைப்படுகிற என் இயேசுவோடு ஒன்றித்துச் சந்தோஷம் அடைகிறது. சிலுவையில் மரித்த என் இயேசுவின் உத்தம சாயலாகவேண்டுமென்கிற ஆசையேயொழிய வேறு ஆசை எனக்கில்லை.

### மனவல்லய ஜெபம்!

இயேசுவின் மதுரமான திருஇருதயமே! உம்மை நான் அதிகமதிகமாய் சிநேகிக்க அனுக்கிரகம் செய்தருளும். (300 நாட் பலன்)

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

# 24-ம் தேதி ************************



## இயேசுவின் திருஇருதயம் கீழ்ப்படிதலுக்கு மாதிரிகை

நம்முடைய சுபாவமானது தன்னிலேதானே கீழ்ப்படியாதென்று அறிந்த திவ்விய இயேசு இப்புண்ணியத்தை நாம் எளிதாய் அநுசரிக்கும் பொருட்டு தமது வார்த்தைகளாலும் மாதிரிகையினாலும் படிப்பிக்கத் தயைபுரிந்தருளினார். தமது அந்தரங்க வாழ்வில் முப்பது வருஷமாய் தாம் கீழ்ப்படிதலுக்கு எவ்வளவு உத்தம மாதிரிகையாயிருந்தாரென்றால், பரிசுத்த விவிலியமானது கீழ்ப்படிதல் மட்டில் அவருக்குண்டாயிருந்த ஆவலை மாத்திரம் பாராட்டி அவருடைய முப்பது வருட வாழ்வையும் "**அவர் அவர்களுக்கு** (புனித. சூசையப்பருக்கும், தேவமாதாவுக்கும்) **கீழ்ப்படிந்தார்**" என்கிற மூன்றே வார்த்தையில் கூட்டி அடக்கிவிட்டது. தமது பிதாவின் விஷயமாய் சகலத்திலும் அவருடைய சித்தத்தை மிக உத்தமமாயும் அவருக்கு மிக மனரம்மியம் வருவிக்கக்கூடிய விதமாயும் நிறைவேற்ற மிகுந்த கவனமுள்ளவாராயிருந்தார்.

தமது திருப்பாடுகளின்போது திவ்விய இயேசு தமது சத்துராதிகளுக்கும் கீழ்ப்படிகிறார். ஓர் நியாயசாலையிலிருந்து வேறோர் நியாயசாலைக்கும், கடைசியாய் கல்வாரி மலைக்கும் அவர்கள் தம்மை இழுத்துச் செல்ல விட்டுவிடுகிறார். தமது பிதாபேரிலும் நமது பேரிலும் வைத்த அன்புக்காக தமது கொலைகாரர்களுக்கு கீழ்ப்படிந்து தமது கரங்களைச் சிலுவையில் அறையும்படி நீட்டிக்கொடுக்கிறார். இப்போது பரிசுத்த தேவநற்கருணையில் குருவானவருடைய மனதுக்குக் கீழ்ப்படிந்து தம்மை முழுதும் அவரிடத்தில் கையளிக்கிறார். இயேசுக்கிறிஸ்துநாதரின் திவ்விய மாதிரிகையால் தைரியமடைந்து, நம்முடைய விசுவாசம் தேவ அன்பில் பலம்கொண்டு, நமது ஆண்டவருக்கும் அவருடைய பதிலாளிகளுக்கும் உத்தம விதமாய்க் கீழ்ப்படிந்து இயேசுவின் திருஇருதயத்துக்கு நமது பக்தியைக் காண்பிக்கக்கடவோம்.

பிதாவாகிய சர்வேசுரன் சம்மனசுகளுக்குக் கொடுத்த கட்டளையினிமித்தம் முதல் கீழ்ப்படிதலும், முதல் கீழ்ப்படியாமையும் நடந்தது. புனித. மிக்கேலும் நல்ல சம்மனசுகளும் தேவ கட்டளைக்குக் கீழ்ப்படிந்து நடந்ததால் மோட்சபாக்கியத்தை அடைந்தார்கள். லூசியும்

கெட்ட சம்மனசுக்களுமோவென்றால் தேவ சித்தத்தை மதியீனமாய் எதிர்த்து நின்றதால் நித்திய நரக நெருப்பில் அப்போதேத் தள்ளப்பட்டார்கள். நம்முடைய ஆதித்தாய் தந்தையர் தேவகட்டளைக்குக் கீழ்ப்படியாததினால் இதற்கு தண்டனையாக சிங்காரத்தோப்பிலிருந்து துரத்தப்பட்டு, நாம் இவ்வுலகில் இப்போது அநுபவிக்கிற சகல கேட்டுக்கும் காரண கர்த்தாக்களானார்கள். கோர், ஆபிரோன், பாத்தான் என்பவர் மூவரும் தேவகட்டளையை மீறினதால் உடனே பூமி பிளந்து அவர்களும் அவர்களைச் சேர்ந்தவர்களும் அங்கிருந்து கிளம்பின நெருப்புக்கு இரையாகப் புதைக்கப்பட்டார்கள்.

இவ்வித உதாரணங்கள் இன்னும் அநேகமுண்டு; என்றாலும் கீழ்ப்படியாமையை ஆண்டவர் எவ்வளவு கண்டிப்பாய்த் தண்டிக்கி றாரென்று காட்ட மேற்சொன்ன உதாரணங்களே போதும். நமது ஊழியமும், நமது அலுவல்களும் கடவுளுக்குத் தேவையில்லை. நம்மிடம் அவர் கேட்கிறதேதென்றால் அவருடைய சித்தத்துக்கு அமைந்து அவருக்கும் அவருடைய பதிலாளிகளுக்கும் கீழ்ப்படியவேண்டுமென்பது தான்.

கிறிஸ்துவர்கள் கீழ்ப்படியவேண்டிய ஞான அதிகாரிகள் யார்? சர்வேசுரன், பாப்பானவர், ஆயர்கள், குருக்கள் என்னப்பட்டவர்கள்தான். தவிர துறவிகள், அருட்சகோதரிகளுக்கு தங்கள் தலைவர்களும் ஞான அதிகாரிகளாயிருக்கிறார்கள்.

முதலாவது - **சர்வேசுரன்:** சர்வேசுரன் நமது சிருஷ்டிகர், இரட்சகர், நமது நித்திய அரசர். அவருக்கு நாம் ஆராதனை புரியவும், மரியாதை செலுத்தவும், அவரை அன்புசெய்யவும், அவருக்குக் கீழ்ப்படிந்து அவர் கொடுத்த சகல கற்பனைகளையும் பிரமாணிக்கமாய் அநுசரிக்கவும் கடமைப்பட்டிருக்கிறோம்.

இரண்டாவது - **பாப்பானவர்:** இவ்வுலகத்தில் இயேசு கிறிஸ்துவின் பிரதிநிதி பாப்பானவர். உலகமுடிவு மட்டும் நம்மோடுகூடவிருந்து திருச்சபையை ஆண்டு நடத்தி ஆத்துமாக்களை புனிதப்படுத்தி மீட்க நமக்கு தனிப்பட்ட விதமாய் காணப்படும் இயேசுக்கிறிஸ்து இவரே. புனித. பாப்புவின் அதிகாரம் இயேசு கிறிஸ்துவின் அதிகாரம். புனித. இராயப்பருடைய நிலைக்கு பாப்புமார்கள் ஒருவருக்குப்பின் ஒருவராய் வந்து பற்பல பெயர் தரித்துக் கொள்ளுகிறார்கள். பெயர் வித்தியாச மிருந்தாலும், புனித. பாப்பு எப்போதும் நமது ஆண்டவருடைய பிரதிநிதி.

மூன்றாவது - **ஆயர்கள்:** அப்போஸ்தலர்கள் இறந்துபோனார்கள். இவர்களுடைய அதிகாரம் ஆயர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிறது. இவர்கள் திருச்சபையின் பிரபுக்கள். தங்கள் மேற்றிராசனத்தில் இயேசுக்கிறிஸ்துவின் பிரதிநிதிகள். புனித. பாப்பானவரோவென்றால்

திருச்சபை முழுமைக்கும் இயேசு கிறிஸ்துவின் பிரதிநிதி புனித. பாப்பானவருடைய அனுமதிப்படி, அவரவருக்குக் கொடுக்கப்பட்ட ஆத்துமங்களுக்கு ஆயனும் தகப்பனுமாக நியமிக்கப்பட்டிருக்கும் ஒவ்வொரு ஆயரும் இயேசு கிறிஸ்து நாதரிடமிருந்தே தமது அதிகாரத்தைப் பெற்றுக்கொள்கிறார்.

நான்காவது - **குருக்கள்:** குருக்களுக்குக் கிறிஸ்துவர்கள் மிகுந்த மரியாதையும், உத்தம கீழ்ப்படிதலும் காட்ட வேண்டியது கடமை. பாப்பானவர், ஆயர்களைக்கொண்டு நமது ஆண்டவர் தாமே தமது தெய்வீக குருத்துவத்தையும், அதிகாரத்தையும் அவர்கள் பெறும் குருப்பட்டத்தின் வழியாய் அவர்களுக்குக் கொடுக்கிறார். நமது ஆண்டவரே குருக்கள் மூலமாய் நமக்குப் போதித்து, திரு அருட்சாதனங்களை நிறைவேற்றி இரட்சண்ய பாதையில் நம்மை நடத்துகிறார். குருக்களிடமாய் எப்போதும் இயேசுக்கிறிஸ்துவைப் பார். நமது ஆத்தும நன்மைக்காக அவர்கள் சொல்லும் புத்திமதிகள், செய்யும் தீர்மானங்களனைத்தையும் வணக்கத்தோடும், கீழ்ப்படிதலோடும் ஏற்றுக்கொள். குருவானவருக்குக் கீழ்ப்படிகிறவன் ஆண்டவருக்குக் கீழ்ப்படிகிறான். குருவானவர் மட்டில் நாம் காட்டும் வணக்கக்குறைவும், கீழ்ப்படியாமையும் இயேசுக்கிறிஸ்துவுக்கே காட்டுகிறோம். ஆதலால் நமது ஆண்டவர்தாமே அப்போஸ்தலர்களையும், அவர்களுக்குப்பின் வருபவர்களையும் நோக்கி: உங்களுக்குக் காதுகொடுக்கிறவன் நமக்குக் காது கொடுக்கிறான். உங்களை நிந்திக்கிறவன் நம்மை நிந்திக்கிறான். (லூக் 10.16) என்று சொன்னதே இதற்கு அத்தாட்சி.

### வரலாறு

புனித சாமிநாதர் சபையைச் சேர்ந்த வில்லானி என்னும் பேர்கொண்ட ஓர் அருட்சகோதரிதான் பக்திவைத்திருந்த உத்தரிக்கிற ஆத்துமாக்களுக்காக நவம்பர் 2-ம் தேதி முழுவதும் ஜெபத்தில் செலவழிக்க விருப்பாக இருந்தார். ஆனால் அன்று அதிகாலையில் தலைமைத் தாயார் அவளைக் கூப்பிட்டு அந்த நாள்முழுவதும் எழுதும்படியாக ஓர் எழுத்து வேலை கொடுத்தாள். இது சகோதரிக்கு மிக வருத்தம் உண்டுபண்ணினது. அச்சமயம் திவ்விய இயேசு அவளுக்குத் தம்மை காண்பித்து, "நீ வருந்தவேண்டாம். கீழ்ப்படிதல் உனக்குக் கொடுத்த வேலையை முழுமனதோடு செய். நீ எழுதுகிற ஒவ்வொரு வார்த்தையும் உத்தரிக்கிற ஸ்தலத்து ஆத்துமம் ஒன்றை மோட்சம் சேரச்செய்யும்" என்று திருவுளம் பற்றினார். கீழ்ப்படிதலினிமித்தம் இவ்வளவு சம்பாவனையையும் பலனையும் கொடுத்த இந்த வேலையை அந்தப் பாக்கியம் பெற்ற சகோதரி எவ்வளவு ஞான ஊக்கத்தோடு சகோதரி செய்துமுடித்திருப்பாளென்று வெகு சுளுவாய்க் கண்டு பிடிக்கலாம்.

சில வருஷங்களுக்குமுன் மதுரை மிஷன் வேத போதகர் ஒருவர் கூடிய சீக்கிரம் வரப்போகிற இயேசுவின் திரு இருதயத் திருவிழாவை வெகு பக்தியோடு கொண்டாட ஆயத்தம் செய்துகொண்டிருந்தார். விசேஷமாய் அந்தத் திருநாளிலே தன் தனிக்கருத்துக்காகத் திருப்பலி ஒப்புக்கொடுத்து இயேசுவின் திருஇருதயத்தோடு மிகுந்த ஒன்றிய வாழ்வை அடைய மிக ஆசையாயிருந்தார். திருநாள் காலையில் குருவானவர் திருப்பலி நிறைவேற்றப் போகும்போது தலைமை குருவானவர் வேறே ஒரு விசேஷ கருத்துக்காகப் திருப்பலி நிறைவேற்ற கட்டளையிட்டார். குருவானவர் மிகவும் கலக்கமுற்றுத் தத்தளிப்பான மனதோடு திருப்பலி ஆரம்பித்தார். ஒரு சமயத்தில் திருப்பலியைத் தொடர்ந்து நடத்த முதலாய் அவரால் கூடாதேபோயிற்று. ஆண்டவர் அப்போது குருவானவரை நோக்கி: "உன்னுடைய பக்தி எனக்கு அவசரமென்று நினைக்கிறாயா? நீ என்னை அன்புசெய்தால் நீ எனக்குப் பிரியப்பட விரும்பினால், உன்னுடைய தலைவருக்கு நல்ல மனதோடு கீழ்ப்படி. அப்படி செய்யாவிடில், நீ கொண்டாடும், திரு இருதய பத்திக்கும், நமது திரு இருதயத்துக்கும் சம்பந்தமேயில்லை" என்று தெளிவாய் திருவுளம்பற்றினார். இதைக்கேட்ட குருவானவர் வெகு வெட்கப்பட்டார். தான் இதுவரையில் திரு இருதயப் பக்தி விசேஷமாய்க் கொண்டிருந்த தவறான எண்ணத்தை மாற்றி, கீழ்ப்படிதல் சொன்னபடி திருப்பலியை பக்தியோடு செய்து முடித்தார்.

ஓர் தீர்மானத்தை இயேசுக்கிறிஸ்துநாதரின் பிரதிநிதிகள் கொடுக்கிறதற்கு என்ன காரணமென்று நாம் சில சமயம் அறியாதிருக்கும்போது, நமது ஆண்டவர் தாமே பாப்பு, ஆயர்கள், குருக்கள் வழியாய்ப் பேசி நம்மை நித்திய வாழ்வுக்கு அவர்கள் வழியாய் தான் நடத்துகிறாரென்று நிச்சயித்து, புனித. சூசையப்பர் பாவனையாக மிகுந்த விசுவாசத்தோடு கீழ்ப்படிய வேண்டியது.

### புனித. மார்க்கரீத் மரியம்மாளின் சுகிர்த வாக்கியம்

நம்மாலான அன்பு முயற்சிகளையும், ஆராதனை நமஸ்கார முயற்சிகளையும், இன்னும் நம்மை முழுதும் இயேசுவின் திரு இருதயத்துக்கு காணிக்கையாக ஒப்புக்கொடுக்கிறதையும் விட உத்தம தனத்துக்குக் குறுக்குப் பாதையும், இரட்ச்சண்யத்துக்கு அதிக உண்மையான வழியும் வேறு கிடையாது. (பர. அரு. பிதா.)

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 25-ம் தேதி ********************************



### இயேசுவின் திருஇருதயம் நிந்தை அவமானங்களை மன்னிக்கக் கற்பிக்கிறது.

இயேசுவின் திருஇருதயத்துக்குப் பிரியப்படும்படியாய், நிந்தை அவமானங்களை மன்னித்தல் என்கிற புண்ணியத்தை நாம் இன்று விசேஷமாய் அனுசரித்து ஆண்டவருடைய இரக்கத்தையும் பிறரன்பையும் பின்பற்றுவோமாக. இயேசுவின் திரு இருதயத்திலுள்ள எண்ணங்கள் நமக்கும் இருக்குமேயாகில் அவருடைய வாழ்வை பின்பற்றுதல் நமக்கு எளிதாயிருக்கும். நம்மைத்தானே ஜெயித்து இயேசுவின் திரு இருதயத்தின் கருத்தை நம்மிடத்தில் நிலைநிறுத்தா விடில், மன்னித்தல் என்கிற புண்ணியம் நமக்கு மிக கடினமாயிருக்கும். தவிர, நமது சுபாவத்துக்கே அது ஒருபோதும் கூடாததாயிருக்கும்.

இந்தப் புண்ணியத்தை அனுசரிக்கும்படி நமக்கு உதவியாக திவ்விய இரட்சகர் பிறர்சிநேகத்தைப்பற்றி, விசேஷமாய் நிந்தையை மன்னித்தல் என்னும் பெரிய கற்பனையை, தமது வார்த்தைகளாலும் மாதிரிகையினாலும் நமக்கு அடிக்கடி ஞாபகப்படுத்துகிறார். "உங்கள் சத்துருக்களை அன்புசெய்யுங்கள், உங்களைப் பகைக்கிறவர்களுக்கு நன்மை செய்யுங்கள், உங்களுக்குக் கெடுதல் செய்கிறவர்களுக்காகவும் உங்கள் மேல் அவதூறு சொல்லுகிறவர்களுக்காகவும் வேண்டிக் கொள்ளுங்கள். நல்லவர்கள் பேரிலும் கெட்டவர்கள் பேரிலும் சூரியனை உதிக்கச் செய்கிறபெரும், நீதிமான்கள் பேரிலும் அநீதர் பேரிலும் மறை வருவிக்கச் செய்கிறவருமாகிய உங்களுடைய பிதாவுக்கு நீங்கள் உகந்த பிள்ளைகளாகும்படிக்கு, மற்றவர்கள் உங்களுக்குச் செய்கிற நிந்தைகளை மன்னித்தால், மோட்சத்திலிருக்கிற உங்கள் பிதாவும் உங்கள் குற்றங்களை மன்னிப்பார். நீங்கள் மன்னிக்காவிட்டால் அவரும் உங்களை மன்னிக்கமாட்டார். ஏனென்றால் நீங்கள் மற்றவர்களுக்குச் செய்கிறதை அவர் உங்களுக்கும் செய்வார்." (மத்.5)

இந்தப் போதகத்தை உறுதிப்படுத்துவதற்காக நமது ஆண்டவர் கெட்ட ஊழியனுடைய உவமையைச் சொல்லிக் காண்பிக்கிறார். இந்த ஊழியன் தான் கொடுக்க வேண்டிய ஒரு பெருங்கடனை தன் எஜமான் மன்னித்திருக்க, இன்னொரு எளிய ஊழியன் தனக்குச் செலுத்த வேண்டிய சிறிய கடனுக்காக அவனை இரக்கமில்லாமல் கொடுமையாய் நடத்தினான். இந்தக் குற்றத்தினிமித்தம் அந்த தீய ஊழியன்

கடுஞ்சிறையில் அடைக்கப்பட்டு மிக கண்டிப்பான வேதனைகளுக்குத் தீர்வையிடப்பட்டான். இதேவிதமாய், நீங்கள் உங்கள் எதிரிகளை முழுமனதோடு மன்னியாதிருப்பீர்களாகில், நமது பிதாவும் உங்களையும் அப்படியே நடத்துவார் என்று திருவாய் மலர்ந்து இந்த உவமையை முடிக்கச் சித்தமானார்.

எந்த அளவு நாம் நமது அயலாரை மன்னிப்போமோ அந்தளவு நாமும் மன்னிக்கப்படுவோம். நாம் சொல்லுகிற கர்த்தர் கற்பித்த ஜெபத்தில் **எங்கள் பிதாவே! எங்களுக்கு தீமை செய்பவர்களை நாங்கள் பொறுப்பது போல் எங்கள் பாவங்களை எங்களுக்குப் பொறும்** என்று கேட்கிறோம். இந்த வார்த்தைகளை நாம் சொல்லும்போது நாம் மற்றவர்களை எப்படி நடத்துகிறோமோ அப்படியே நமது ஆண்டவரும் நம்மை நடத்தக் கேட்கிறோம். ஆதலால் நாம் மன்னித்தால் நம்மை மன்னிக்கும்படி கேட்கிறோம். மன்னியாவிட்டால் மன்னியாதிருக்கக் கேட்கிறோம். இதைப் போல் **இரக்கமில்லாதவனுக்கு இரக்கமில்லாத தீர்ப்பு கிடைக்கும்** என்று புனித யாகப்பர் சொல்லுகிறார். (யாக.12-13)

திவ்விய இயேசு நம்முடைய பலவீனத்தை நன்றாய் அறிந்திருந்த தினால் நிந்தை அவமானங்களால் பூரிக்கப்பட சம்மதித்த அவருடைய மாதிரிகையாய் நாமும் நம்மை நிந்திக்கிறவர்களை மன்னிக்கப் படிப்பிக்கிறார். பூங்காவனத்தில் பிரவேசித்து அங்கே நடக்கிறதைக் கவனி. தம்மை முப்பது வெள்ளிக்காசுக்கு காட்டிக்கொடுக்கத் தயாராயிருக்கும் சதிகாரனான யூதாசென்பவனோடு நேருக்கு நேர் நிற்கிற உன் ஆண்டவரைப் பார். அவனைப் பழிவாங்க நினையாமலும், தமது சர்வ வல்லமையால் அவனைக் கீழே விழத்தாட்டிக் கொல்லாமலும், அவனை நோக்கி, **நண்பா, எங்கே வந்தாய்? என்ன யூதாஸ், மனுமகனை முத்தத்தால் காட்டிக்கொடுக்கவா வந்தாய்** என்று தோழமையோடும், சாந்தகுணத்தோடும் சொல்லுகிறார். ஒரு பக்கத்தில் துன்பமும் வேறொரு பக்கத்தில் அன்பும் நிறைந்த இந்த வார்த்தைகளேயல்லாமல் மற்றப்படி கோபமான, கசப்பான, பழிக்கான, மற்றெவ்வித கண்டிப்புக்கான வார்த்தைகளும் அவரது திரு வாயிலிருந்து புறப்படவில்லை. இன்னும் கல்வாரி மலையில் ஆண்டவருடைய எதிரிகள் அவரைச் சிலுவையிலறைந்து, நிந்தை அவமானங்களாலும், தீயவார்த்தைகளாலும் அவரை நிந்திக்கும் போது, **"பிதாவே, இவர்களை மன்னித்தருளும், ஏனென்றால் இவர்கள் செய்கிறதெல்லாம் அறியாமல் செய்கிறார்கள்"** என்று அவர்களுக்காக பரிந்து பேசுகிறார்.

கல்வாரி மலையில் ஆண்டவருடைய இருபக்கத்திலும் சிலுவையில் அறையுண்ட திருடர்களும் திருடர்களும் ஆண்டவரை நிந்தித்தார்கள். ஆனால் வலது பக்கத்தில் தொங்கின திருடன் அருட்கொடைகளால்

தூண்டப்பட்டு அவனுடைய இருதயம் ஆண்டவர் பக்கமாய் இழுக்கப்பட்டு, **ஆண்டவரே, உமது இராச்சியத்தில் நீர் பிரவேசிக்கும் போது என்னை நினைத்துக்கொள்ளும்** என்று பேரொலியிட்டதும், நமது அன்பார்ந்த இரட்சகர் நல்ல திருடனை நோக்கி, **மெய்யாகவே, மெய்யாகவே நாம் உனக்குச் சொல்லுகிறோம்: இன்றுதானே நீ நம்மோடுகூட மோட்சத்திலிருப்பாய்** என்றார்.

திவ்விய இரட்சகர் காட்டும் இவ்வித மாதிரிகைகளைப் பார்த்தபிறகும், அவருடைய சிலுவையைக் கண்ணாரக் கண்டபொழுதும், என் எதிரிகள் எனக்கு அதிக நிந்தை வருவித்திருக்கிறார்கள். ஆதலால் நான் அவர்களை மன்னிக்கமாட்டேனென்று யார் சொல்லத் துணிவார்? நீ நிந்தை அவமானப்படும் படி திவ்விய இரட்சகர் விட்டுவிடக் காரணம், தமது திவ்விய மாதிரிகையைப் பின்பற்றும்படி உனக்குச் சமயம் கிடைக்கும் படியாகத்தான். சிலுவையாகிய அந்த உயர்ந்த சிம்மாசனத்திலிருந்து இயேசுக்கிறீஸ்துநாதர் : “எஜமானைவிட சீடன் அதிக மேன்மையாய் நடத்தப்படமுடியாது. நாம் நிந்தை அவமானங்களை ஏற்றுக் கொண்டோம்; நீங்களும் அவைகளை ஏற்றுக் கொள்ளவேண்டியது. நாம் மற்றவர்களை மன்னித்ததுபோல் நீங்களும் மன்னிக்க உங்களுக்கு மாதிரிகை காண்பித்திருக்கிறோம்” என்று போதிக்கிறார்.

இதைக் கேட்ட பின்னும், ஆண்டவரைப் பார்த்த பின்னும் இன்னும் உன் அயலான் பேரில் பழிவாங்க உனக்கிருக்கும் ஆசையை மாற்றுகிறது வருத்தமாயிருந்தால், அல்லது உன்னுடைய மன்னிப்புக்கு அவன் தகுதியில்லாதவன் என்று கண்டால், அவனுக்காக நீ அவனை மன்னிக்காதே போனாலும், நமது ஆண்டவருக்காக அவனை மன்னி. ஆண்டவர் இதை உன்னிடமிருந்து கேட்கிறார். இந்தப் பலியை உன்னிடமிருந்து எதிர்பார்க்கிறார். இதிலும் அதிக பெரிய குற்றங்களை நாள்தோறும் செய்கிற உன்னை ஆண்டவர் பெரிய தயவாய் மன்னிக்கிறாரென்பதை ஞாபகப்படுத்திக்கொள்.

முதல் வேதசாட்சியான புனித முடியப்பருடைய மாதிரிகையைப் பார். தமது எதிரிகளால் கல்லாலெறியப்பட்டு சாகுந்தறுவாயிலிருக்கும் போது, நமது திவ்விய குருவின் பாவனையாக மோட்சத்தை அண்ணார்ந்து பார்த்து, ஆண்டவரே! **இந்தப் பாவத்தை அவர்கள்மேல் சுமத்தவேண்டாம்** என்று மன்னிப்புக் கேட்கிறார்.

**வரலாறு**

கன்னியர் மடத்திலுட்பட்ட ஒரு இள வயதுள்ள பெண்ணை சில வருடங்களுக்கு முன் அவளுடைய தாய் தகப்பன் கட்டாயஞ்செய்து மடத்திலிருந்து கொண்டு தங்கள் சொந்தக்காரன் ஒருவனுக்கு அவளை

திருமணம் செய்து கொடுத்தார்கள். இவ்வகை திருமணங்கள் எப்பொழுதும் தீமையானதே. திருமணம் செய்த கொஞ்சநாளைக்குள்ளாக வாலிபன் தன் இஷ்டம் போல் தாறுமாறாய் நடந்து முழுதும் துர்க்குணமான வாழ்வு வாழ்ந்தான். இதுகண்ட அந்த வாலிபப்பெண் தன் கண்ணீரையும், துன்பத்தையும் இயேசுவின் திரு இருதயத்துக்கு ஒப்புக்கொடுத்து, தன் கணவன் மனந்திரும்ப அத்திரு இருதயத்தை கெஞ்சி மன்றாடினாள். பதினைந்து வருடம் ஆயிற்று, அவன் மனந்திரும்பவில்லை. ஆனால் அவனுக்கு ஓர் கடினவியாதி வந்தது; சாகும் ஆபத்திலிருந்தான். மனைவி தன் வருத்தங்களையெல்லாம் மறந்தவளாய் தன் கணவனுடைய ஆத்துமத்தை எவ்விதத்திலும் மீட்கவேண்டுமென்கிற கவலைகொண்டு குருவானவரைக் கூப்பிட்டு வியாதிக்காரன் அறியாமல் தன் வீட்டில் ஒரு அறையில் இருக்கும்படி சொல்லிவிட்டு, இயேசுவின் திரு இருதயத்தை நோக்கித் தன் புருஷன் மனந்திரும்ப பக்தி உருக்கத்தோடு வேண்டிக்கொண்டு வியாதிக்காரனிடம் சென்று மிகுந்து பாசத்தோடு, "நீங்கள் எனக்கு வருவித்த சகல துன்பங்களையும் என் முழு இருதயத்தோடு மன்னிக்கிறேன். உங்களுடைய ஆத்தும மீட்புக்காக இவைகளையெல்லாம் நமது ஆண்டவருக்கு ஒப்புக்கொடுக்கிறேன். நீங்கள் செய்த சகலத்தையும் மறந்துவிட்டேன். உங்களை இரட்சிப்பதே என்னுடைய ஒரே ஆசை" என்றாள். வாலிபனுடைய இருதயம் முழுவதும் இளகிப்போய், "நான் உனக்கு கொடுத்த துன்பங்களையும் நீ மன்னிக்கிறது கூடுமா ?" என மனைவி, "ஆம் என் பிரிய கணவனே, முழுவதும் மன்னிக்கிறேன்" என்று பதில் சொல்லி, அவன் பக்கத்தில் முழந்தாளிலிருந்து கொண்டு கண்ணீர் ததும்பின கண்களோடு அவனைக் கட்டி முத்தமிட்டு சொல்வாள்: என் அருமை கணவனே, நான் உம்மிடத்திலிருந்து ஓர் கடைசி ஆறுதல் கேட்கிறேன். உமக்கு ஒப்புரவு அருட்சாதனம் கொடுத்து உம்மைச் சர்வேசுரனிடம் சேர்க்கத் தயார் செய்யும்படி ஓர் குருவானவரைக் கூப்பிட உத்தரவு கேட்கிறேன். அவ்வியாதிக்காரன், "இவ்வளவு பிறர் சிநேகமும் அன்பும் காட்டுகிற உனக்கு நீ கேட்கிறதை எப்படி இல்லையென்று மறுதலிப்பேன்; உடனே குருவானவரை அழைத்துவா" என்றான்.

மனைவியானவள் மனங்குளிர்ந்து உடனே அறைக்குள்ளிருந்த குருவானவரை அழைத்து வியாதிக்காரனிடம் விட்டுவிட்டு வெளியே போனாள். நல்ல பாவசங்கீர்த்தனம் செய்தபிற்பாடு, நோயாளி தன் மனைவியையும் தன் குடும்பத்தைச் சேர்ந்த மற்றவர்களையும் தன்னருகே கூப்பிட்டு, தான் காண்பித்த சகல துர்மாதிரிகைக்கும் மிகு மனஸ்தாபப்பட்டு சர்வேசுவரனிடத்திலும் அவர்களிடத்திலும் பொறுத்தல் கேட்டு, தன் பாவத்துக்குப் பரிகாரமாகவும், தேவ இரக்கத்தில் தான் மரிக்கும்படியாகவும் அவர்கள் வேண்டிக்கொள்ள மன்றாடினான்.

மறுநாள் அவனுடைய ஆத்துமமானது இவ்வுலகத்தைவிட்டு நித்திய மோட்ச பாக்கியம் அநுபவிக்கப்போனது. பக்திப் பற்றுதலுள்ள மனையாளின் பிறர் சிநேகத்தாலும், மாறாத பொறுமையாலும் நித்திய மோட்ச பாக்கியமடைந்தான்.

இயேசுவின் திரு இருதய அன்பர்கள் தங்களுக்கு நிந்தை அவமானம் வருவித்தவர்களை மன்னித்து, தங்கள் வார்த்தைகளில் மாத்திரமல்ல, செயல்களிலும் அவர்களுக்கு அன்பு காண்பிப்பார் களேயாகில் உண்மையில் தாங்கள் திரு இருதய சீஷர்களென்று காட்டுகிறார்கள். தம்மைக்குறித்துத் தங்கள் சகோதரர்களுக்கு செய்ததெல்லாவற்றையும் தமக்கே செய்ததாக திவ்விய இயேசு எண்ணுவார். அவர்களுடைய குற்றங்குறைகளையெல்லாம் மன்னித்து நித்திய மோட்சபாக்கியத்துக்கு அவர்களை இட்டுக் கொண்டுபோவார்.

### அர்ச். மார்கரீத் மரியம்மாளின் சுகிர்த வாக்கியம்

உன்னைத் தாழ்த்துகிறவர்களையும், உனக்கு எதிரிடையாய்ப் பேசுகிறவர்களையும் சிநேகி. உன் புண்ணிய சாங்கோபாங்கத்துக்கு அதிகப் பிரயோசனமாயிருக்கிறார்கள். இயேசுவின் திரு இருதயத்தை அண்டிப்போ. அதிலிருந்து ஒரு புது ஜீவியத்தை அடைவாய் இந்த. ஜீவியத்தில் ஜீவிக்கிறது நீயல்ல, திவ்விய இயேசுதான். அவருடைய திருஇருதயத்தைக் கொண்டு சிநேகிக்கிறாய். (பர. அரு. பிதா.)

### மன வல்லப செபம்

இருதயத்தில் தாழ்ச்சியும் சாந்தகுணமுமுள்ள இயேசுவே! என்னிருதயத்தை உமது இருதயத்தைப் போலாகச் செய்தருளும்.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 26-ம் தேதி



### இயேசுவின் திருஇருதயம் நீதிக்கு மாதிரிகை

தமது ஜீவிய காலமெல்லாம் திவ்விய இயேசு அனுசரித்து வந்த நீதியென்ற புண்ணியமானது திருஇருதய சிநேகத்தின் வேறோர் சாயல். சேசாருக்கு உரியதைச் சேசாருக்குச் செலுத்துங்கள். சர்வேசுரனுக்கு உரியதைச் சர்வேசுரனுக்குச் செலுத்தங்கள் (லூக்20:25) என்று நமதாண்டவர் சொன்னபோது, இந்தப் புண்ணியத்தை எம்மாத்திரம் நன்கு மதித்தாரென்றும், புகழ்ந்தாரென்றும் அறிகிறது சுலபம். ஒவ்வொருவனுக்கும் அவனுக்குரியதைச் செலுத்துவதில்தான் நீதி அடங்கியிருக்கிது. இந்தப் புண்ணியமானது சர்வேசுரனுக்கும் மனிதர்களுக்கும் நாம் செய்ய வேண்டிய கடமைகளையெல்லாம் உத்தமமாய் நிறைவேற்ற நம்மைத் தூண்டுகிறது.

உத்தமமான தேவ ஊழியத்துக்கும், சர்வேசுரன்மட்டில் நமக்குள்ள கடமைகளை நிறைவேற்றுகிறதற்கும், திவ்விய இயேசு மாதிரியையிருக் கிறார். தமது தேவபிதாவை மகிமைப்படுத்தி, அவருடைய சித்தத்தை நிறைவேற்றி மனிதர்களுக்கு அறிவித்து சிநேகிக்கச்செய்வதில் திவ்விய இயேசு கொண்டிருந்த ஆவல் இம்மாத்திரமென்று விவரிக்க இயலாது. இதற்காகவே அவர் இவ்வுலகத்துக்கு வந்தார். இந்தத் தேவ ஊழியத்தை விர்த்தி செய்யவே தமது பிராணனைக் கொடுத்தார். இயேசுக்கிறிஸ்து நாதர் இவ்வுலகத்தை விட்டு பிரியுந்தருணத்தில் பிதாவே! நீர் எனக்குக் கற்பித்ததையெல்லாம் நான் நிறைவேற்றினேன் என்று அவர் திருவுளம் பற்றினது சர்வ நீதிக்கும் ஒத்திருக்கும்.

நாம் சாகுந்தருணத்தில் இதே வார்த்தைகளை நாம் உச்சரிக்கக் கூடுமானால், நாம் எவ்வளவோ பாக்கியவான்களாயிருப்போம்! சர்வேசுரன் நமது சிருஷ்டிகர்; நமது இரட்சகர். ஆதலால் நாம் அவரை வணங்கி, சிநேகித்து சேவிக்கவும், அவருக்குக் கீழ்ப்படியவும் கடமைப்பட்டிருக்கி றோம். நாம் நல்ல கிறிஸ்தவர்களாய் நடக்க விரும்பினால் சர்வேசுரன் மட்டில் நீதிக்க ஒத்தபிரகாரம் நடந்து, அவருடைய கற்பனைகளுக்குக் கீழ்ப் படிந்து, கிறிஸ்துவனுக்குரிய கடமைகளை நிறைவேற்றி, சாகும்பரியந்தம் அவருடைய ஊழியத்தில் பிரமாணிக்கமாய் நிலைத்திருக்க வேண்டியது.

சர்வேசுவரனுக்கடுத்த கடமைகளை நிறைவேற்ற தங்களாலான பிரயாசப்படுகிற நல்ல கிறீஸ்தவர்கள் பலர் இருக்கிறார்கள். இவர்கள் தங்கள் நடத்தையால் தங்களைக் கண்காணிக்கும் வேதபோதகர்களுக்கு

மெய்யாகவே ஆறுதலாயிருக்கிறார்கள். இன்னும் வேறு பலர் இருக்கிறார்கள்; இவர்கள் தேவ ஊழியத்தில் அஜாக்கிரதையாய் நடந்து, பாவ வழியில் வாழ்கிறார்கள். தங்களுக்கு இஷ்டமான கடமைகளைச் செய்வார்கள்; தங்கள் சுபாவத்தோடு ஒத்துப்போகாத கடமைகளை விட்டுவிடுவார்கள். நித்திய கேட்டுக்கு ஆளாக்கும் இந்த அசமந்தத்திலிருந்து இவர்களை அசைக்கக் குருவானவர் பிரயாசப்படுவாராகில், உடனே முறையிடுவார்கள்; அவருக்கு விரோதமாய்ப் பேசுவார்கள். தங்கள் பேரில் கண்டிப்பாயிருக்கிறாரென்று தூற்றுவார்கள். சிலசமயங்களில் கலகம் உண்டு பண்ணுவார்கள். அசட்டைத்தனமுள்ள கிறீஸ்துவர்களுக்கு ஆபத்தாய் வந்துமுடியும் இந்தக் குற்றங்களைக் கவனியாமல், கண்ணை மூடிக்கொண்டிருப்பது குருவானவருக்கு மிக எளிது. ஆனால் தமது வசத்தில் ஒப்புவிக்கப்பட்ட ஆத்துமங்களைத் தமது அசட்டைத்தனத்தால் கவனியாமல் விடுவாரேயாகில், இவர் ஆண்டவருக்குக் கண்டிப்பான கணக்குக் கொடுக்க வேண்டியிருக்கும்.

இயேசுவின் திருஇருதய பக்தர்கள் சர்வேசுரன் மட்டில் நீதியென்கிற புண்ணியத்தைத் தங்களால் இயன்றளவு அனுசரிப்பார்கள். தேவ ஊழியத்தில் தாராள குணத்தோடு நடப்பார்கள். சோதனை நேரத்திலும், ஞான ஆறுதலான நேரத்திலும் சர்வேசுரனுக்குப் பிரமாணிக்கம் தவறமாட்டார்கள். தேவ ஊழியத்தில் தவறி, சர்வேசுரனுக்குத் துரோகம் பண்ணுகிறதைவிட சாகத் துணிந்திருப்பார்கள்.

புனித அதிரியானப்பர் கொடிய சாவுக்கு தீர்வையிடப்பட்ட போது, தமக்கு வரப்போகிற வேதசாட்சி முடியைப்பற்றி தமது மனைவிக்கு அறிவிக்கும்படி காவற்காரர்களுடைய அனுமதி பெற்று வீட்டுக்குப் போனார். அவருடைய பக்தியுள்ள மனைவி, தன் புருஷன் நிர்ப்பாக்கியமாய்த் தன் விசுவாசத்தையும் இயேசுக்கிறிஸ்துவையும் மறுதலித்து விட்டதினிமித்தமல்லவா சினத்திலிட்டு விடுதலையாகி வருகிறாரென்று எண்ணி, கோபங்கொண்டு கதவை சாத்திவிட்டுச் சொன்னதாவது: “ஆ! கோழை, சதிகாரரே, என்முன் ஒருபோதும் வராதேயும், என்னோடு பேசாதேயும். தேவ ஊழியத்தை விட்டுப் பிரிந்து, உமது சிருஷ்டிகருக்கும் இரட்சகருக்கும் துரோகம் புரிந்த நீர் என் முகத்தில் விழிக்கவேண்டாம். தீர்வை நாளில் தேவ சந்திதானத்துக்கு முன் வேத விரோதியாய் நீர் நிற்கும்போது உமது நிர்ப்பாக்கியம் எவ்வளவு பெரிதாயிராது” என்று கத்தினாள்.

புனித அதிரியானப்பர் தன் மனைவி போட்ட சப்தத்தைக் கேட்டு ஆச்சரியப்படாமல், உண்மையை உள்ளது போல் அறிவிக்க, அவள் உடனே சந்தோஷப்பட்டதுமல்லாமல், இருவருமாக ஆண்டவருக்கு நன்றியறிந்த தோத்திரம் செலுத்தினார்கள். தேவ ஊழியத்தில் விசுவாசிகளுக்கு இருக்கவேண்டிய வீரத்துவமான பிரமாணிக்கத்தின் ஆச்சரியமான மாதிரிகை இதுவே!

தென்னிந்தியாவைச் சேர்ந்த ஓர் பங்கில் சில வருஷங்களுக்கு முன் தங்கள் பங்கு குரு செய்த தீர்மானத்தை ஏற்றுக்கொள்ளப் பிரியமில்லாத சில பெரிய மனிதர்கள் குருவானவருக்கு விரோதமாய்க் கலகஞ்செய்து, இந்தத் தீர்மானத்தை மாற்றினாலொழிய நாங்கள் திருப்பலியில் கலந்து கொள்ள மாட்டோம் என்றும், திருவருட் சாதனங்களைப் பெறமாட்டோமென்றும் பிடிவாதம் பண்ணினார்கள். ஆனால் அவ்வூர்ப் பெண்பிள்ளைகள் பக்தியுள்ள புத்திசாலிகள். அவர்களில் பலர் மரியன்னையுடைய சபையைச் சேர்ந்த சுறுசுறுப்புள்ள கிறீஸ்துவர்கள். தங்களுடைய கணவர்கள் அநேக சாவான பாவங்களுக்கு உத்திரவாதிகளாகி நித்திய கேட்டின் மார்க்கத்தில் நடக்கப்போகிறதைப் பற்றி மிக துன்பப்பட்டார்கள். ஆதலால் பெண்களெல்லோரும் சேர்ந்து தாங்களே ஒரு கூட்டம் கூடி, தங்கள் வீட்டுக்காரர்கள் சர்வேசுரனுக்கு குருவானவருக்கும் விரோதமாக எடுத்த பிடிவாதப்படி தாங்கள் நடக்கிறதில்லையென்றும், அவர்கள் திருச்சபையின் சொற்படி கேட்கும் வரையில் அவர்களுக்கு சமையல் செய்து போடுகிறதில்லையென்றும் தீர்மானம் பண்ணினார்கள். இந்தத் தீர்மானத்தால் குடும்பத்தில் மிக தொந்தரவுகள் ஏற்பட்டன. கணவர்கள் அவர்களைத் திட்டினார்கள், அடித்தார்கள், கொடுமையாய் நடத்தினார்கள்.பெண்கள் பயப்படவில்லை, வெகு உறுதியாயிருந்தார்கள். ஆண் பிள்ளைகள்தான் பட்டினியும் பசியுமாய்க் கிடந்து உடல் மெலிந்து வருத்தப்படவேண்டியிருந்தது. கடைசியாய்த் தங்கள் மனைவிகளின் எண்ணப்படி புருஷர் இணங்க வேண்டியிருந்தது. குருவானவர் கட்டளைக்கு முழுதும் கீழ்ப்படிந்தார்கள். இவ்வகையாய் அவர்களுடைய சரீர உயிரும், ஆத்தும உயிரும் காப்பாற்றப்பட்டது.

தேவ ஊழியத்தில் இந்தப் பக்தியுள்ள பெண்கள் காட்டின ஆச்சரியத்துக்குரிய நன்மாதிரிகையைக் கண்டு உணர்வோம். இவர்கள் தங்கள் நல்ல நடத்தையால் போதிக்கும் படிப்பினை மிக பலனுள்ள படிப்பினை. இவ்வித சந்தர்ப்பங்களில் பெண்கள் தங்கள் வேத வைராக்கியத்தைக் காண்பிக்கிறது, மற்றவிடங்களிலும் மிக பிரயோஜனமாயிருக்கும்.

2- வது - **நமது அயலார்மட்டில் நமக்குள்ள கடமைகள் :** தேவ ஊழியத்தில் சுறுசுறுப்பும் பிரமாணிக்கமுமுள்ள கிறிஸ்துவன், தன் அயலான் மட்டில் தனக்குள்ள கடமைகளையும் பிரமாணிக்கமாய்ச் செலுத்துவான். பிறருடைய சொத்துக்கும் பெயருக்கும் கெடுதலான சகலத்தையும் விலக்கி, நல்ல கிறிஸ்துவர்கள் எச்சரிக்கையாய் நடப்பார்கள். பிறருடைய சொத்தில் அல்லது காணிபூமியில் ஒரு சொற்பப் பாகத்தையென்கிலும் தங்களுடையதாக்கிக் கொள்ளுதல், மற்றவர்களுக்குச் சொந்தமான பணத்தைத் தன்வசம் வைத்திருத்தல், கேடுவரும் படி பொய்ப் புகார் செய்தால், பொய்ச்சாட்சி சொல்லுதல்,

விற்கிற வாங்குகிற ஜாமான்களின் அளவில் ஏமாற்றுதல், புறணி ஆவலாதிகளால் மற்றவர்களுடைய பெயரைக் கெடுத்தல் ஆகிய இவைபோன்றவைகள் பிறருக்கு அநீதம் வருவிக்கிறதென்று அவர்களுக்கு நன்றாய்த் தெரியும். சில சமயம் ஏதேனும் கெடுதல் வருவித்துவிட்டதாகக் கண்டால் உத்தரித்தாலொழிய பாவப்பொறுத்தல் கிடையாதென்று நல்ல கிறீஸ்துவன் எப்போதும் அறிந்திருப்பதினால், அது பொருள் நஷ்டமோ அல்லது பெயர் நஷ்டமோ தான் செய்த கெடுதலை நிவர்த்திசெய்ய தன்னாலான பிரயாசப்படுவான்.

இயேசுவின் திருஇருதயப் பக்தர்கள் அனைவரும், ஆண்டவரிடமும் அயலார்மட்டிலும் தாங்கள் செலுத்த வேண்டிய கடமைகளையெல்லாம் உத்தமமாய் நிறைவேற்ற உறுதியான பிரதிக்கினை செய்யும்பட்சத்தில் அவர்களும் புனித சூசையப்பரைப்போல் நீதிமான், அதாவது "சர்வேசுரன்மட்டிலும், மனிதர்கள் மட்டிலும் தனக்குள்ள சகல கடமைகளையும் நிறைவேற்றுகிற கிறிஸ்துவன்" என்கிற பெயருக்குப் பாத்திரமாவார்கள். இயேசுவின் திரு இருதயமானது நித்தியத்துக்கும் அவர்களுடைய சம்பாவனையும் பாக்கியமுமாயிருக்கும்.

**வரலாறு**

ஓர் வியாதிக்காரனுக்கு அவஸ்தை கொடுக்க குருவானவரைக் கூப்பிட்டார்கள் குருவானவர் போனார். சரீரமெல்லாம் காயங்களால் மூடப்பட்டு அசையாமல் கட்டைபோல் கிடக்கும் வாத வியாதியுள்ள ஒரு மனிதனைக் கண்டார். அவனுக்கு உதவிசெய்ய ஒருவருமில்லை. அவன் மகள் நாள் முழுதும் கடின கூலிவேலை செய்து சாப்பாடு கொண்டுவர வேண்டியிருந்தது. இவ்வித வேதனைகளின் நடுவில் அவனுடைய அமரிக்கையையும், பொறுமையையும் கண்ட குருவானவர் ஆச்சரியப்பட்டு அவனை நோக்கி : இந்தப் பரிதாபத்துக்குரிய நிலையில் நீ இவ்வளவு மனச்சமாதானமாயிருக்கிறதெப்படி என, வியாதிக்காரன், சுவாமி, உங்கள் கண்களை உயர்த்திப் பாருங்கள், எங்கிருந்து எனக்கு ஆறுதல் வருகிறதென்று காண்பீர்கள், என்றான். அப்படியே குருவானவர் மேலே பார்த்தார். அங்கே இயேசுவின் திருஇருதயப்படமும், மரியாயின் மாசற்ற இருதயப் படமும் சுவரில் தொங்கிக்கொண்டிருந்தன. "சுவாமி, இங்கேயிருந்துதான் நான் ஆறுதலடைகிறேன். வேதனை அதிகரிக்கும் போது இந்தப் படங்களைப் பார்த்து சேசுவும் மரியாயும் என்னிலும் அதிக வேதனை அனுபவித்தார்கள். என்றாலும் அவர்கள் மாசில்லாதவர்கள். நானோ பெரும் பாவி என்று நினைத்ததும், உடனே எனக்கு ஆறுதல் வருகிறது. தவிர, இதே நினைவுதான் இயேசுவுக் காகவும், தேவமாதாவுக்காவும் அவர்களுடைய திருஇருதயங்களுக்குப் பிரியப்பட எந்த வேதனைகளையும் நான் சந்தோஷமாய் ஏற்றுக்கொள்ளச் செய்கிறது" என்றான்.

இவ்வரிய வார்த்தைகளைக் கேட்டதும், பக்தி அன்புக்குரிய இவ்வுணர்ச்சிகளை அவனிடம் கண்டதும், குருவானவருடைய இருதயம் சந்தோஷத்தால் பூரித்து, கடைசி திருவருட்சாதனங்களை எல்லாம் நிறைவேற்றினார். "இயேசுவின் திரு இருதயமும் மரியன்னையின் மாசற்ற இருதயமும் என் ஆத்துமத்தை மோட்சத்துக்கு இட்டுக் கொண்டுபோக வருகிறதை நான் பார்க்கிறேன்" என்னும் பரம வார்த்தைகளைச் சொல்லிக்கொண்டு தேவ ஆனந்தத்தில் அமிழ்ந்தினவனாய் இரண்டு தினத்தில் பாக்கியமான மரணமடைந்தான்.

### புனித. மார்கரீத் மரியம்மாளின் சுகிர்த வாக்கியம்.

ஆண்டவருடைய பிரமாணிக்கமுள்ள ஊழியர்களுக்கொத்த வண்ணம் உன்னைத்தானே மறுதலித்து உன் எஜமானுடைய ஊழியத்துக்கு சுறுசுறுப்போடு உன்னைக் கையளி. உன் அன்பு ஏற்றபடி ஆண்டவர் பலன் அளிப்பார். இயேசுவின் திரு இருதயத்தின் வார்த்தை, மாதிரிகை, புண்ணியக் கிரிகைகளுக்கு ஒத்தவண்ணம் உன்னுடைய வாழ்வை சீர்படுத்து.

இயேசு உன் இருதயத்தை முழுதும் கைப்பற்ற ஆசைப்படுகிறார். அதுபோலவே நீயும் அவருடைய அன்பை கைப்பற்ற ஆசைப்படு. கூடுமானால் சகலத்துக்குமேலாய் அவரை அன்புசெய்ய உன்னாலான முயற்சி எடுத்துக்கொள்.

சிலுவையில் என் இயேசு தொங்கின தோற்றமாய் அல்லது பிலாத்தென்பவனுடைய அரண்மனையில், இதோ மனிதன் என்று காட்டின பாவனையாய் எனக்கு என் ஆண்டவர் அடிக்கடி தம்மைக் காண்பித்தார். இந்தக் காட்சி என் இருதயத்தில் எவ்வளவு இரக்கத்தையும், அன்பையும் சிலுவைகளின்மேல் ஆவலையும் உண்டுபண்ணினதென்றால் எனக்கு வந்த சகல துன்பங்களும் மிக எளிதாயிருந்தது. (பர. அரு. பிதா)

### மனவல்லய ஜெபம்

இயேசுவின் மதுரமான இருதயமே! உம்மை நான் அதிகமதிகமாய் அன்பு செய்தருளும்.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 27-ம் தேதி ****************************



# இயேசுவின் திரு இருதயம் பரித்தியாகத்துக்கு மாதிரிகை.

பரித்தியாகம் என்கிற புண்ணியம் இயேசுவின் திரு இருதயத்துக்கு எவ்வளவு மனமொத்தது என்றால், அவருடைய வாழ்நாள் முழுதும் ஓர் தொடர்ந்த பரித்தியாக முயற்சியாயிருந்தது. நமது ஆசாபாசங்களுக்கு விரோதமாய்ப் போராடவும், நமது உடலை ஒறுக்கவும், நமது ஆண்டவருக்குப் பிரியமில்லாதது எதையும் நமது சுபாவத்துக்கு இலலையென்று மறுதலிக்கவும், நமது ஆத்தும நன்மைக்காக அவர் அனுப்பும் சிலுவைகள், சோதனைகள், பலிகள் எல்லாவற்றையும் ஏற்றுக்கொண்டு அவருக்கு ஒப்புக்கொடுக்கவும், இந்தப் புண்ணியம் நமக்குப் பலம் அளிக்கிறது. பரித்தியாக முயற்சி புனிதர்களுக்கு மட்டும் உரியதென்றும், தாங்கள் புனிதர்கள் அல்லாததால், சுயபலி, சுயஜெபம் தங்களுக்கல்லவென்றும் சில கிறீஸ்துவர்கள் நினைக்கிறார்கள். இந்த எண்ணம் நமது சுபாவத்தால் ஏவப்பட்ட ஓர் தவறை நமது ஆத்துமத்துக்கு மிக அபாயகரமானது. புனிதர்கள் புனிதர்களாய் பிறக்கவில்லை. தங்கள் ஆசாபாசங்களோடு எதிர்த்துப் போராடாத பட்சத்தில் பலர் பெரும்பாவிகளாயிருந்திருப்பார்கள். “**யாதாமொருவன் நமது பின்னால் வர ஆசைப்பட்டால், அவன் தன்னைத்தானே மறுதலித்து, தன் சிலுவையைச் சுமந்துகொண்டு நம்மைப் பின்பற்றட்டும்.**” (மத்.16:29) என்று நமதாண்டவர் சகல மனிதர்களுக்கும் சொல்லுகிறார். ஆதலால் இயேசுக்கிறீஸ்துவின் சீடனாயிருக்க, விசேஷமாய் திரு இருதயத்துக்கு அன்பராயிருக்க பரித்தியாகம் இன்றியமையாதது.

நமது ஆசாபாசங்களோடு எதிர்த்துச் சண்டை செய்யாவிட்டால், அவைகள் நம்மை நித்திய கேட்டுக்குள்ளாக்கும். இது காரியத்தில் புனித சின்னப்பர், **நீ சரீரத்துக்கு ஏற்றபடி வாழ்ந்தால் சாவாய்** (உரோ. 8:13) என்று சொல்லுகிறார். நமது உடல் ஆசிக்கிற இன்ப சுகங்களை அவைகளுக்குக் கொடுக்கிறவர்களும், மோசமான வாசகங்கள், அபாயமான படங்கள், துஷ்ட சகவாசம் முதலியவைகளில் காலம் போக்குகிறவர்களும், ஒறுத்தல், சுய பலி, சுயஜெயம் முதலிய புண்ணிய முயற்சிகளை கடைபிடிக்காமல் விடுகிறவர்களும், நாளுக்குநாள் ஞான பலவீனர்களாகி சாவான பாவத்தில் விழுந்து தங்களாத்துமத்தை இழந்து போவார்கள்.

நம்முடைய கெட்ட சுபாவத்துக்கு மிகவும் அருவருப்பான இந்தப் புண்ணியத்தை நாம் அநுசரிக்கும்படி செய்ய, இயேசு ஓயாத பரித்தியாக முயற்சி நிறைந்த வாழ்வை நமது ஆத்தும நன்மையை முன்னிட்டு ஏற்றுக் கொண்டார். புனித சின்னப்பர் திவ்விய இரட்சகரைப் பற்றி: **சேசுக்கிறிஸ்துநாதர் தமக்குத் தாமே பிரியப்படத் தேடினதில்லை** (உரோ.15:3) என்று சொல்லுகிறார். அவர் தமது சொந்தப் பிரியத்தை கடைபிடித்திருந்தால் மோட்ச பாக்கியத்தில் சுகமே இருந்திருக்கலாம் அல்லது இவ்வுலகத்துக்கு அவர் வந்தபோது, செல்வம், பெருமை, மகிமையோடு வந்திருக்கலாம். ஆனால் ஒறுத்தலும் பலியும் நிறைந்த வாழ்வைத் தெரிந்துகொண்டு, தமது பிதா தமக்குக் கொடுத்தருளிய சகல நிந்தை அவமான வேலைகளையும் பூரண மனதோடும் சந்தோஷத்தோடும் ஏற்றுக்கொண்டு, முப்பத்துமூன்று வருஷகாலம் வேதசாட்சியின் வாழ்வு வாழ்ந்து கடைசியாக சிலுவையில் உயிர்துறந்தார்.

புனிதர்கள் நமது ஆண்டவருடைய திவ்விய மாதிரிகையைப் பின்பற்றினார்கள். இவ்வுலக சுகத்துக்காகவல்ல, பரலோக பாக்கியத்துக்காக தாங்கள் படைக்கப்பட்டதை நினைவுகூர்ந்து, தங்கள் உடல் கேட்கும் அடாத திருப்திகரங்களை, திருவருட் சாதனங்கள் உதவியால் மறுதலித்தார்கள்; தங்கள் கண்களையும், இருதயத்தையும் இயேசுகிறிஸ்துவின் சிலுவையின் பக்கமாய் திருப்பினார்கள்; தங்களை மயக்கிக்கெடுக்கத் தேடும் படைக்கப்பட்ட பொருட்களைப் பார்த்து : "நாங்கள் உம்முடைய அடிமைகளல்ல; பரலோக பாக்கியமும் பரலோக காரியங்களுமே எங்களுடைய பொய்யான வீண் மகிமையையும், கடந்து போகும் வெட்கத்துக்குரிய இன்பத்தையும் கண்டு நாங்கள் ஏமாந்து போகமாட்டோம்; அநித்திய காரியங்களையெல்லாம் நிந்தித்து நித்தியத்துக்காக மட்டும் வாழ்வது எங்கள் கடமை; என்றும் அழியாத பாக்கியமே எங்கள் உன்னத பதவி" என்பார்கள்.

இவ்வித உன்னத எண்ணங்களையும் உத்தம மாதிரிகைகளையும் நாம் பின்பற்றி அநுசரிக்கிறோமா? இவ்வுலகில் மிக அவசரமான ஆத்தும மீட்பராகிய ஒரே முக்கிய அலுவலை எத்தனை கிறீஸ்துவர்கள் மறந்து போகிறார்கள்; உலக காரியங்களுக்குப் பின் தணிக்கக் கூடாத தாகத்தோடு ஓடுகிறார்கள். அழியாத பரலோக பாக்கியத்தின் மட்டிலோவென்றால் அச்சத்துக்குரிய சோம்பலாயிருக்கிறார்கள்! அபாயமும் பாவமான சந்தோஷங்களைத் தங்கள் உடல் அனுபவிக்க இடங்கொடுக்கிறார்கள். தங்கள் வீண் மகிமையைச் சற்றே பங்கப்படுத்துகிற ஒரு சொற்ப வார்த்தையால் கலங்கி ஆறாக் கோபத்துக்கு உள்ளாகிறார்கள். இயேசுவின் திரு இருதயப் பக்தர்களோவெனில், திவ்விய இயேசுவின் பற்றுதல்களையும், மாதிரிகைகளையும், அவருடைய பத்தினியாகிய புனித மார்கரீத் மரியாம்மாளுடைய புண்ணியப் பயிற்சிகளையும் தாராள குணத்தோடு பின்பற்றுவார்கள்.

புனித மார்கரீத் மரியம்மாள் தன் தலைவருக்கு இது காரியத்தில் எழுதினதாவது : "அன்புக்குரிய இயேசுவின் திரு இருதயமானது சகலவித சிலுவைகளையும் எனக்கு அனுப்புவதினால் எனக்குண்டாகும் பலவீனமும் களைப்பும் எம்மாத்திரமென்றால், பாவம் நிறைந்த இச்சடலத்தை வெகு பிரயாசையோடு நான் சுமக்கவேண்டியிருக்கிறது. நான் சில சமயங்களில் துன்ப வேதனைகளால் சோதிக்கப்பட்டு எவ்வளவு ஆறுதலற்றவளாயிருந் தேனென்றால், என் அன்புக்குரிய ஆண்டவர் எனக்கு உதவி செய்து என்னைத் தைரியப்படுத்தாவிடில் நான் இறந்திருப்பேன்; என் நிலைமை அவ்வளவு சகிக்கக்கூடாத நிலைமையாயிருந்தது. என் ஆத்துமத்திற்கும், சரீரத்திற்கும் நானே ஒரு சிலுவையாயிருக்கிறேன்."

ஆனால் சிலுவைகளும், துன்பங்களும் அவளுடைய இருதயத்துக்கு வெகு மனரம்மியமாயிருந்தன. ஏனென்றால் இயேசுவோடு அவருடைய அன்புக்காக அவைகளை அனுபவித்தாள். திவ்விய இயேசு அனுப்பிய சிலுவைகள் போதாதென்றாற்போல விசேஷ ஒறுத்தல் முயற்சிகளையும், தன் சுபாவ சந்தோஷத்துக்கு எதிரிடையான இடைவிடாத பரித்தியாகப் பலிகளையும் அனுசரித்து வந்தாள்.

**வரலாறு**

புனித மார்கரீத் மரியம்மாள் தான் உலகத்திலுள்ள சகலரிலும் பெரும் பாவியென்றும், ஆதலால் மனிதர்களுடைய புகழ்ச்சிக்கும் மதிப்புக்குமல்ல, அவர்களுடைய இகழ்ச்சிக்கும் அவமதிப்புக்குமே தான் பாத்திரமென்றும் உண்மையில் எண்ணிக் கொள்வாள். இம்மையிலும் மறுமையிலும் மனிதர்களெல்லாரும் தன்னை நிந்தித்து மறந்து போகவேண்டுமென்பதே அவளுடைய பெரிய ஆசை. இதை முன்னிட்டே "எந்த சமயத்திலும் என்னைத் தாழ்த்தி ஒறுக்கச் செய்வதைவிட நீங்கள் உங்கள் அன்பின் அதிக பெரிய அத்தாட்சி எனக்குக் காட்ட முடியாது" என்று தன் சிரேஷ்டருக்கு எழுதுவாள். இந்த வார்த்தைகள் அவளுடைய இருதயப்பற்றுதல் இன்னதென்று உத்தமமாய் எடுத்துக் காட்டுகிறது. பிறர் தன்பேரில் குற்றம் சாட்டும்போது அல்லது தன்னைக் கண்டிக்கும் போது சாக்குப் போக்குச் சொன்னவளல்ல. தமது திருப்பாடுகளின் போது நிந்தை அவமானங்கள் நடுவில் மவுனமாயிருந்த திவ்விய இரட்சகரைப் பின்பற்ற சமயங் கிடைக்கிறதைப் பற்றி சந்தோஷப்படுவாள். தன்னைத் தாழ்த்திக் கண்டித்தவர்களைத் தன் நல்ல நண்பர்களாகவும் பேருபகாரிகளாகவும் எண்ணித் தன் ஜெபத்தில் அடிக்கடி அவர்களுக்காக இயேசுவின் திரு இருதயத்தை நோக்கி வேண்டிக்கொள்வாள்.

அவளிடத்தில் விளங்கிய தாழ்ச்சிதான், மடத்தின் மகிமை உத்தியோகங்களைத் தன்னாலியன்ற வரையில் தவிர்த்து விலக்கி

நடக்கும் படி அவளைத் தூண்டினது. தான் எல்லாருக்கும் அடிமையென்றும், எவருடைய கவனிப்புக்கும் தான் தகாதவளென்றும் எண்ணி, எல்லோரிலும் கடைசியாய் நடத்தப்பட வேண்டுமென்கிற ஆவலால் மிக்க தாழ்ந்ததும் வருத்தமுமான அலுவல்களில் தன் சகோதரிகளுக்கு உதவிபுரிய எப்போதும் தயாராயிப்பார்கள். இவைகள்தான் புனித மார்கரீத் மரியம்மாளின் பரிசுத்தமும் உத்தமுமான எண்ணங்களும் நன்மாதிரிகையுமாம். இந்த புனிதர்களின் வாழ்வை நாம் வாசிக்கும்போது, நமக்கும் இந்த சகோதரிக்கும் வெகுதூரம் இருக்கிறதென்று உணர்ந்தால், நிந்தை அவமானங்களுக்கு அஞ்சி ஓடுகிற நாம் உண்மையாகவே தாழ்ச்சியில் குறைவுள்ளவர் களென்றாகிலும் ஏற்றுக்கொள்ளக் கடவோம். நிந்தை அவமானங்களை ஆசித்துத் தேடும் அவ்வளவு மேலான உத்தமதனம் நம்மிடத்திலில்லா திருந்தாலும், நம்முடைய நடத்தைக்கு இயேசுவின் திருஇருதயம் அனுப்புகிற நிந்தை அவமானங்களையும், சிலுவைகளையும் பொறுமையோடாகிலும் ஏற்றுக்கொள்ளவேணும். இவ்வளவு புண்ணியமாகிலும் நம்மிடமிருக்க வேண்டுமென்று நமது ஆண்டவர் எதிர்பார்க்கிறார்.

நம்முடைய கேவலமான சுபாவத்துக்கு இவ்வளவு எதிரிடையாயிருக்கிற இந்தப் புண்ணியத்தை நாமே நமது சொந்த பலத்தால் அநுசரிக்க முடியாது; ஆனால் தேவ கொடையால் எல்லாம் கூடும். ஆதலால் ஜெபம், பக்திக்கிருத்தியங்கள், இயேசுவின் திரு இருதயத்தோடும், தூய மரியாவின் மாசற்ற இருதயத்தோடும் ஒன்றிப்பு, திருவருட்சாதனங்களை அடிக்கடி பெறுதல், பஞ்சேந்திரியங்களை ஒறுத்தல் முதலிய வழிகளை அநுசரித்தால், இஷ்டப்பிரசாதம் தானே நம்மிடம் ஓடிவரும். ஆனால் விசேஷமாய் இயேசுவின் திரு இருதயத்தை சகலத்துக்கு மேலாய், உண்மையாகவே, வஞ்சகமின்றி, முழுதும் சிநேகிப்போமாக. இந்த திவ்விய அன்புதான் நமது சிலுவைகளையெல்லாம் நாம் நல்ல மனதோடு ஏற்றுக்கொண்டு ஆண்டவருக்கு ஒப்புக்கொடுக்கவும், நமது பேரிலும் சிருஷ்டிகள் பேரிலும் நமக்குள்ள பற்றுதல்களையெல்லாம் களைந்தெறிந்து, இவ்வுலக மகிமை சுகங்களிலிருந்து நம்மைப் பிரித்து நமது அழியாத பாக்கியமாகிய திவ்விய இயேசுவைப் பின்பற்றச் செய்யும். இந்த கொடையை அடைய பர. அரு. பிதா. சொல்லுவோமாக.

## மனவல்லிய ஜெபம்

தேவநற்கருணையில் வீற்றிருக்கும் இயேசுவின் திரு இருதயமே! என்னிடத்தில் விசுவாசம், நம்பிக்கை, தேவ அன்பை அதிகரித்தருளும்.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 28-ம் தேதி ***********************



# இயேசுவின் திருஇருதயம் முகத்தாட்சண்யத்தை விலக்கி நடக்கப் படிப்பிக்கிறது

முகத்தாட்சண்யம் என்னும் குற்றமானது பிறரால் நமக்கு வரக்கூடிய புகழ்ச்சியையும் பிறருக்கு வருத்தம் வருமோ என்கிற அச்சத்தையும் முன்னிட்டு நமது கடமைகளை அநுசரியாமல் நமது மனச்சாட்சிக்கு முழு விரோதமாய் நடக்கச் செய்கிற பாவமுள்ள கோழைத்தனமாம். இந்தக் குற்றமானது இயேசுவின் திரு இருதய சுபாவத்துக்கு முற்றும் எதிரிடையாயிருக்கிறது. முகத்தாட்சண்யமுள்ள கிறீஸ்துவர்களைப் பற்றி இயேசுக்கிறீஸ்துநாதர் சொல்வதைக் கேள்: **“நம்மையும், நமது வார்த்தைகளையும் பற்றி மனுமகனும் தமது மகிமைப்பிரதாபத்தில் எழுந்தருளிவரும்போது வெட்கப்படுவார்”** (லூக்.9:26) வேறோரிடத்தில் **“எவன் நம்மை மறுதலிப்பானோ அவனை மோட்சத்திலிருக்கிற நமது பிதாவுக்கு முன்னால் நாமும் மறுதலிப்போம்.”** (மத். 10 : 33)

கிறிஸ்துவர்களுக்குள், விசேஷமாய் இயேசுவின் திரு இருதய முகத்தாட்சண்யத்துக்கு இடமிருக்கக்கூடாது. தாங்கள் சர்வேசுரனுடைய பிள்ளைகள், இயேசுக்கிறீஸ்துவின் சகோதரர்களென்கிற மகத்துவமும் பெருந்தன்மையான எண்ணமும் அவர்களிடமிருக்க வேண்டும் என்றாலும் பிறமத்தவர்கள், அவிசுவாசிகள் தங்கள் பொய் மார்க்கத்தை வெளியரங்கமாய் அநுசரிக்க வெட்கப்படாதிருக்கக் கொள்ள, பரலோக பூலோக அரசரும் நம்மை படைத்தவரும் மீட்பருமாகிய இயேசுக்கிறீஸ்துவின் சீஷர்கள் என்று காட்ட அநேகம் கிறிஸ்துவர்கள் பயப்படுகிறதெப்படி? தங்கள் தோழர்களுடைய மனதை முறிக்க அல்லது அவர்களுக்கு தளர்ச்சி வருவிக்கத் துணியாதவர்களை சர்வேசுரனுக்கு மாத்திரம் வருத்தம் வருவிக்கத் துணிகிறதெப்படி? பொய் மதங்களை அநுசரிக்க உதவி செய்யும் சாத்தானுடைய வேலை இது. அதே சாத்தான் தான் உண்மையான தேவனாகிய அளவில்லாத தயை நிரம்பிய ஆண்டவருக்கு ஆராதனை நமஸ்காரம் செய்ய கிறீஸ்துவர்களை எவ்விதத்திலும் தடுக்கப் பிரயாசப்படுகிறது.

ஓர்நாள் ஒரு குருவானவர் முகத்தாட்சண்யத்துக்கு விரோதமாய் ஓர் கண்டிப்பான பிரசங்குஞ்செய்து, கிறீஸ்துவனுக்கும் மரியாதையுள்ள எந்த மனிதனுக்கும் இந்தக் குற்றம் எவ்வளவு தகாததென்று தெளிவாய் எடுத்துக்காட்டினார். பிரசங்கம் முடிந்ததும் குருவானவரிடம் ஓர் ஆள்

வந்தார். அவர் ஒரு தளகர்த்தர். சுவாமியாரை நோக்கி, "சுவாமி, நானும் இந்தப் பிரசங்கத்தைக் கேட்டேன். கோழைகள் பேரில் எனக்குப் பிரியமில்லை. நான் என்னைத்தானே ஒரு தைரியசாலியென்றும், மரியாதையுள்ளவனென்றும் எண்ணிவந்தேன். ஆனால் நீங்கள் இன்று செய்த பிரசங்கத்தில், முகத்தாட்சண்யத்தாலும் மனிதர்கள் பயத்தாலும் கிறீஸ்துவனுக்குரிய கடமைகளை நிறைவேற்றாத எவனும் ஒரு பெரிய கோழை என்று விளக்கிக் காட்டினீர்கள். இது ஒரு போர் வீரனாகிய எனக்குப் பெரிய அவமானம். தயவு செய்து எனக்குப் பாவசங்கீர்த்தனம் கொடுங்கள். இன்று உங்களுக்கு என் உறுதிமொழி கொடுக்கிறேன். இதுவரை நான் கோழையாய் இருந்ததற்குப் பதிலாய் இனி இயேசுக்கிறீஸ்துவின் பிரமாணிக்கமுள்ள போர்வீரனாயிருப்பேன்" என்றார். சொன்ன வார்த்தை மாறவில்லை. கடைசிவரை தேவ ஊழியத்தில் பிரமாணிக்கமாய் நடந்து சகலருக்கும் நன்மாதிரிகையாயிருந்தார்.

தாங்கள் பக்தியுள்ளவர்களாய் நடந்தால் மற்றவர்கள் தங்களை மதிக்கமாட்டார்கள் என்று முகத்தாட்சண்யமுள்ள கிறிஸ்துவர்கள் பயப்படுகிறார்கள். இது ஒரு பெரிய மோசம். அதற்கு விரோதமாய் நீ உன் வேதத்தின் கடமைகளை உறுதியாயும் தைரியத்தோடும் கடைபிடிக்கறதை பிறமதத்தினரும், கெட்ட கிறீஸ்துவர்களும் பார்க்கும் போது உன் விசுவாசத்தைக் கண்டு ஆச்சரியப்பட்டு தங்கள் உள்ளத்தில் நீ மற்றவர்களைவிட நல்லவனென்று மதிப்பார்கள்.

முகத்தாட்சண்யம் என்கிற துர்க்குணத்தை ஜெயித்து நமது கடமைகளை உறுதியோடு நிறைவேற்றுவதற்கான சக்தி தரக்கூடியது இயேசுக்கிறீஸ்துவின் மாதிரிகையைப் போல் எதுவுமில்லை. தமது வெளியரங்க வாழ்வில் தமது எதிரிகள் தம்மை நிந்தித்துப் பயமுறுத்தினாலும், தமது பிதாவின் வேதத்தை அவர் போதியாமல் விட்டவரல்ல. நீ தேவ குமாரனாகிய கிறீஸ்துவா என்று நியாயாதிபதி கேட்டபோது தமது சத்துருக்களுக்கு முன்பாக: ஆம், நாம் தேவகுமாரன் தான் என்று மறுமொழி சொன்னார். இப்படி அவர் தெளிவாய் பேசுவதினால் தமது பேரில் கொண்ட பகை அதிகரிக்குமென்று கண்டிருந்தாலும், வெகு தைரியத்தோடு தாம் யூதர்களுக்கும், இவ்வுலகத்துக்கும் அரசரென்று பகிரங்கமாய்க் கூறுகிறார். ஏரோது அரசர் அவரை நிந்தித்து, தூஷணித்த சமயத்தில் அந்த அரசரின் பரிவாரத்துக்கு முன் திவ்விய இயேசு உறுதியாயும் அசையாமலும் இருக்கிறார். சிலுவையில் தொங்கும்போது முதலாய் தமது பரம பிதாவைப் புகழ்ந்து பாராட்டி அவருடைய சித்தத்துக்கும் ஊழியத்துக்கும் பிரமாணிக்கராயிருந்து தமது உயிரைக் கையளிக்கிறார்.

மரியன்னையின் நன்மாதிரிகையையும் சற்றே கவனிப்போம். தமது திவ்விய குமாரன் இயேசுக்கிறிஸ்துவோடு கல்வாரிமலைக்குப் போக

அறியச் சொன்னான். கிறீஸ்துவனுக்குரிய தைரியமும் வல்லமையும் இம்மாத்திமாவென்று கொடுங்கோலன் ஆச்சரியப்பட்டு, மனதிலே அச்சமுற்று மௌனமாய்த் தன் அரண்மனை போய்ச் சேர்ந்தான்.

சுறுசுறுப்பும் பிரமாணிக்கமுமுள்ள கிறிஸ்துவனுடைய மகிமையும் வல்லமையும் எவ்வளவென்று பார். இயேசுக்கிறீஸ்துவை தான் பின்பற்றுகிறேனென்று எவ்வளவு துணிவோடு சொல்லுகிறான். இயேசுவின் திரு இருதய சிநேகிதர்கள் இந்த உத்தம மாதிரிகையைப் பின்பற்றி சத்திய வேதத்தைப் பகிரங்கமாய் அனுசரிக்க அஞ்சாதிருப்பார்களாக. நாம் சர்வேசுரனுடைய பிள்ளைகள் அவருடைய தெய்வீக அரச வம்சத்தின் அங்கத்தினர்கள். நாம் நம்முடைய மதிப்புக்கும் மரியாதைக்கும் பாத்திரமில்லாத சில மனிதர்களுக்குப் பயந்து, அவர்களுடைய அடிமைகளாக மாறாதிருப்போமாக. முகத்தாட்சண்யம் நம்மைத் தேவ ஊழியத்தில் பிரமாணிக்கமற்றவர்களாய் ஆக்கும் பட்சத்தில் இயேசுக்கிறீஸ்துநாதர் தமது பிதாவின் சமுகத்தில் நம்மைப் பார்த்துச் சொல்லும் வாக்கியத்தைக் கேள் : நீ நமது சீடனல்ல, நமது நிமித்தம் நீ வெட்கப்பட்டாய். நாமும் உன்னிமித்தம் வெட்கப்படுகிறோம். நீ நமது சீடனாயிருக்க அபாத்திரவான் என்பார்.

உன் வார்த்தையிலும், கிரிகையிலும், தனித்தும், மற்றவர்கள் முன்பாகவும், நல்ல கிறீஸ்துவனுக்குரிய விதமாய் நடந்து உன் அன்பை இயேசுவின் திரு இருதயத்துக்குக் காட்டக் கடவாய். நீ பேசும் போதும் வேலை செய்யும்போதும், எங்கேயிருந்தாலும், எல்லா இடங்களிலும் உன் திவ்விய வேதத்தை அனுசரிக்கப் பயப்படாமல், அப்போஸ்தலர்கள் பாவனையாய் வாழ்ந்து புனித சின்னப்பரோடு **சுவிசேஷத்தைப் பற்றி நான் வெட்கப்படமாட்டேன்** (உரோ. 1: 16) என்று உறுதியாய்ச் சொல். உனக்கு முன்பாக எவரும் நமது வேதத்தைத் தூஷணித்தால், திருச்சபைக்கு விரோதமாய்ப் பேசினால், குருக்களை நிந்தித்தால், நீ தைரியமாய் அவர்களை எதிர்த்துப் போராடி, கிறிஸ்துநாதருடைய போர்வீரன் என்கிற பெயருக்கும், திருஇருதய அன்பன் என்கிற பெயருக்கும் பாத்திரவான் என்று காண்பி. கடைசியாய்ப் பாவதோஷமில்லாத வாழ்வால் யாவருக்கும் நன்மாதிரிகையாயிருந்து இயேசு கிறிஸ்துவுக்கும், அவருடைய திவ்விய இருதயத்துக்கும் உகந்த தைரியமுள்ள சீடனாகவும் ஞானவேகமுள்ள அப்போஸ்தலனாகவும் நடந்து, நமது வேதத்தின் மகிமையையும் பரிசுத்ததனத்தையும் பிரபல்யப்படுத்தக் கடவாய்.

## புனித மார்கரீத் மரியம்மாளின் சுகிர்த வாக்கியம்

படைக்கப்பட்ட பொருட்களிடம் நீ எதிர்பார்த்ததை அடையாததாகக் கண்டால் சர்வேசுரன் உன்னைச் சிநேகிக்கிறார் என்று

நினைத்துக்கொள். அழிவுக்குரியவைகளோடு நீ பந்தனமாகாமல் அவரோடு மாத்திரம் பந்தனமாகும் படி விரும்புகிறார். அவரை அன்பு செய்கிறதும், அவருக்கு முழுதும் சொந்தமாயிருக்கிறதும் எவ்வளவு இனிமையானதென்று நாம் கண்டுபிடிக்கக் கூடுமேயாகில் மற்றெந்த அன்பை பரிகசித்து அவரை மாத்திரம் நமது வார்த்தையாலும், செயலால் அன்பு செய்வோம். சகலத்தையும் விட்டு விட்டு இயேசுவின் திரு இருதயத்தில் சகலத்தையும் கண்டடைவாய். இந்த கொடையை அடையும்படி ஒரு பர. அரு. பிதா. சொல்வோமாக.

**மனவல்லிய ஜெபம்**

இயேசுவின் திரு இருதயமே, உமது இராச்சியம் வருக

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*
*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 29-ம் தேதி **************************



## இயேசுவின் திருஇருதயத்தின் மட்டில் புனித இராயப்பர் வைத்த அன்பு

பெரிய அப்போஸ்தலராகிய புனித இராயப்பர் திவ்விய இரட்சகருடைய இருதயத்தின் பேரில் வைத்த அன்பாலும் ஆண்டவர் விஷயமாய் அவர் காண்பித்த தாராள குணத்தாலும் பிரமாணிக்கத்தாலும் சகலருக்கும் மாதிரிகையாயிருக்கிறார். இயேசுக்கிறீஸ்து நாதர் புனித இராயப்பரைத் தமது ஊழியத்துக்குக் கூப்பிட்டதும், அவர் சகலத்தையும் விட்டு உடனே பிரமாணிக்கமுள்ள சீடனாகப் பின்பற்றுகிறார். பின்பற்றின முதல் நிமிஷம் துவக்கி திவ்விய இயேசுவின் பேரில் அவர் வைத்த விசுவாச வணக்கப் பற்றுதலால் மற்றச் சீடர்கள் எல்லோரையும் விட மேலானவராய் விளங்கினார்.

தம்மைப் பற்றி மனிதர்கள் என்ன சொல்கிறார்களென்று அப்போஸ்தலர்களை விசாரித்த பிற்பாடு, நீங்கள் என்ன சொல்லுகிறீர்களென்று அவர்களைக் கேட்கையில், புனித இராயப்பர் மற்றவர்கள் பேரால் வெகு துடுக்காய்: **"சுயஞ்சீவியரான சர்வேசுவரனுடைய குமாரனாகிய கிறிஸ்துவாய் நீர் இருக்கிறீர்"** என்கிற விசுவாச பிரகடனம் செய்தார்.

கடைசி இராப்போஜனத்துக்குப் பிறகு திவ்விய இரட்சகர் அப்போஸ்தலர்களுடைய பாதங்களைக் கழுவ முழந்தாளிலிருக்கும் போது புனித இராயப்பர் தமது திவ்விய குருவின் மட்டில் எந்த அளவு விசுவாசமும் வணக்கமும் உடையவராயிருந்தாரென்றால், தேவ மகத்துவம் நிறையப் பெற்ற தெய்வம் தம் பதவியை மறந்து பாவியாகிய தன் பாதத்தைக் கழுவ வந்ததைக்கண்டு புனித இராயப்பர் கூச்சப்பட்டு, இந்தத் தாழ்ச்சி முயற்சியை நீர் செய்யக்கூடாதென்று உறுதியோடு தடுத்தார். ஆகிலும் ஆண்டவருடைய சித்தத்துக்குத் தடைசெய்தால் அவருடைய அன்பை இழந்துபோக நேரிடும் என்னும் பயத்தால் மாத்திரம் சம்மதித்தார்.

ஜெத்செமனி தோட்டத்தில் துரோகியான யூதாஸென்பவன் அழைத்து வந்த ஜனத்திரள் நமது ஆண்டவரைப் பிடிக்கத் தங்கள் பாவாக்கிரமம் நிறைந்த கரங்களை நீட்டி விரைந்து வரும்போது, புனித இராயப்பர் தன் திவ்விய குருவைக் காப்பாற்றும்படி தன் வாளை உபயோகிக்க உத்தரவு கேட்கிறார். ஆண்டவர் மறுமொழி சொல்வதற்கு

முன்பாகவே மால்கூஸ் என்பவனைக் காதற வெட்டுகிறார். எல்லாச் சமயத்திலும் புனித இராயப்பர் தன் அன்பின் முதல் ஏவுதலுக்கு உடனே கீழ்ப்படிவார். தன் திவ்விய எஜமானைக் காப்பாற்றி மகிமைப்படுத்துவதில் எப்போதும் முதன்மையானவர் அவரே.

புனித இராயப்பர் நமது ஆண்டவர் மட்டில் எந்த அளவு அன்புடையவர் என்றால் தான் எப்போதாகிலும் தன் திவ்விய குருவுக்கு பிரமாணிக்கம் தவறி நடக்கக்கூடுமென்கிற நினைவு முதலாய் தன்னிடம் ஆகாதென்று எண்ணினார். பூங்காவனத்துக்குப் போகிற வழியில் திவ்விய இயேசு தமக்குச் சாவு வரப்போகிறதென்றும், அப்போஸ்தலர்கள் தம்மைவிட்டுப் பிரிந்து தம்மை மறுதலிப்பார்களென்றும் அறிவிக்கும் போது, புனித இராயப்பர், ஆண்டவரே! யாவரும் உம்மை மறுதலித்தாலும் நான் உம்மை மறுதலியேன் என்று சொல்லும்போது ஆண்டவர் பிரத்தியுத்தாரமாக: இன்று இரவில் சேவல் கூவுமுன் நீ எம்மை மூன்றுதரம் மறுதலிப்பாய் என்றார். ஆனால் புனித இராயப்பர், நான் உம்மோடு சாகிறதாயிருந்தாலும் உம்மை மறுதலியேன் என்று தடுத்துச் சொன்னார்.

திவ்விய இயேசு இரக்கமும் உருக்கமுமான சிநேகம் நிறைந்த தமது கண்களால் புனித இராயப்பரை நோக்குகிறார். அந்த அப்போஸ்தலர் மனம் இளகி தன் திவ்விய குருவின் வார்த்தைகளை நினைக்கிறார். உடனே வெளியே போய் கைப்பான கண்ணீர் சொரிந்து தேம்பித் தேம்பி அழுகிறார். அதுமுதல் புனித இராயப்பர் அப்போஸ்தலர்கள் கூட்டத்தில் மிகுந்த தாழ்ச்சியாலும் மேலான நன்றியறிதலாலும் தனக்கு இம்மாத்திரம் இரக்கம் காண்பித்த இயேசுவின் திரு இருதயத்தின் பேரில் உருக்கமான அன்பால் விளங்கினார். ஒவ்வொரு நாளும் அதிகாலையில் சேவல் கூவும் போது தன் பாவத்தை நினைத்து எவ்வளவு கண்ணீர் சிந்தி அழுதாரென்றால் அவருடைய கன்னங்கள் இரண்டிலும் சிறு வரிச்சுவடுகள் காணப்பட்டனவென்றும் பாரம்பரையாய்ச் சொல்லி வருகிறார்கள்.

புனித இராயப்பர் மனந்திரும்பின பிற்பாடு இயேசுவின் திரு இருதயமானது அவருக்கு உருக்கமான பட்சத்தைக் காண்பிக்கிறது. ஆண்டவர் அவரை ஒருபோதும் அவர் பாவத்தினிமித்தம் கண்டித்தவரல்ல. அவருடையப் பிரதான அப்போஸ்தலராகவும், திருச்சபைக்குத் தலைவராகவும், இவ்வுலகத்தில் தம்முடைய உன்னத ஸ்தானாதிபதியாகவும் அவரைத் தெரிந்துகொள்ளுகிறார். இந்த உதவி உபகாரங்களெல்லாம் புனித இராயப்பருடைய இருதயத்தில் தனக்கு இவ்வளவு இரக்கமும் பட்சமும் காண்பித்த திவ்விய இரட்சகர் பேரில் சிநேகப்பற்றுதலையும், நன்றியறிதலையும், மட்டற்ற தாழ்ச்சியையும் உண்டு பண்ணினது.

புனித இராயப்பரைப் போல் அல்ல, நாம் அவரைவிட இன்னும் அதிகமாய் சர்வேசுரனுக்குத் துரோகம் செய்திருக்கிறோம். என்றாலும் நம்மையும் திவ்விய இயேசு வெகு இரக்கத்தோடு கண்ணோக்கித் தமது திருக்கரங்களை விரித்து திரு இருதயத்தையும் திறந்து காட்டுகிறார். எதார்த்தமாய் மன்னிப்புக் கேட்போமேயாகில் நமது சகல பாவங்களையும் மறந்து தமது ஏராளமான வரங்களையும் ஆசீர்வாதங்களையும் நமது பேரில் பொழிந்தருள்வார்.

ஆதலால் புனித இராயப்பர் பாவனையாக இனி ஒரு போதும் மனம்பொருந்தி எந்தப் பாவத்தையும் செய்கிறதில்லையென்று பிரதிக்கினை செய்து, நமது ஆண்டவருடைய ஊழியத்துக்கும் அன்புக்கும் நம்மை முழுதும் கையளித்து, நமது கடமைகளை எல்லாம் நிறைவேற்றி பிறர் ஆத்துமங்களையும் இரட்சித்து, இவ்வகையாய் இயேசுவின் திரு இருதயத்துக்கு நமது அன்பையும் நன்றியறிதலையும் காண்பிப்போமாக.

**வரலாறு**

புனித இராயப்பர் திவ்விய இயேசுவோடு ஜீவித்த மூன்று வருடகாலங்களில் அவர் ஆண்டவரிடமாய்க் கண்ட கணக்கற்ற பிறர் அன்பு செயல்களில் சிலவற்றைத் திருச்சபையின் துவக்கத்திலிருந்தே கிறிஸ்துவர்களுக்குச் சொல்லிக் காட்டுவார். அவைகளில் ஒன்றை மட்டும் இங்கு புனித இராயப்பர் சொன்னது போல சொல்லிக் காட்டுவோம். "நாங்கள் ஓர்நாள் சாயந்திரம் திவ்விய இரட்சகரோடு பெத்தானியா ஊருக்குப் போய் மரியமதலேனாள் வீட்டில் இராத்தங்க வேண்டியிருந்தது. அக்காலம் வெகு குளிர்காலம். இரவில் எல்லோரும் அயர்ந்து நித்திரை போகும்போது திவ்விய இயேசு ஒவ்வொருவருடைய படுக்கையின்கிட்ட வந்து கம்பளியால் அவர்களுடைய கால்களை மூடினார். ஆண்டவர் என் கிட்ட வந்ததும் என் இருதய உணர்ச்சியைக் கொஞ்சமும் நான் அடக்கமாட்டாமல் கண்ணீர் சிந்தி அழுதேன். திவ்விய இரட்சகர் என்னைப் பட்சத்தோடு நோக்கி: "இராயப்பா, நீ பார்த்ததை ஒருபோதும் வெளியிடாதே" என்றார். என் திவ்விய குருவின் விருப்பத்துக்கு கீழ்ப்படிந்து அப்போஸ்தலர்களிடம் இதைப் பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் ஆண்டவர் இப்போது மோட்சத்துக்குப் போய்விட்டபடியால் இதை நான் வெளியிடாமலிருக்க எனக்குக் கட்டாயமில்லை; நமது திவ்விய இரட்சகருடைய திருஇருதயத்தின் அளவில்லாத அன்பும் நட்பும் எவ்வளவு என்று உலகமறியும் பொருட்டு நான் இதை வெளியிடுகிறேன்" என்றார்.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

## 30-ம் தேதி



# இயேசுவின் திருஇருதயத்துக்கு உகந்த ஓர் குடும்பம்

இயேசுவின் திரு இருதயத்துக்குத் தங்களைக் காணிக்கையாக ஒப்புக்கொடுக்கும் கத்தோலிக்க குடும்பங்களெல்லாம் நசரேத்தூர் திருக்குடும்பத்தின் புண்ணிய மாதிரிகைகளை உத்தம விதமாய்ப் பின்பற்றப் பிரயாசப்படவேண்டும். அங்கே புனித சூசையப்பரும் மரியன்னையும் கட்டளையிட்டார்கள். திவ்விய இயேசு அவர்களுக்குக் கீழ்ப்படிந்தார். என்றாலும், ஆண்டவருடைய சுபாவந்தான் சகலத்தையும் நடத்திக் கொண்டு வந்தது. அவர்களுடைய ஜெபம், வேலை, அசனம், சம்பாஷனை ஒவ்வொன்றும் ஒவ்வொரு புண்ணிய முயற்சியாகவும், பக்தி முயற்சியாகவும், நன்மாதிரிகைக் குரியதாகவுமிருந்தது. இந்தக் குடும்பத்திலுள்ள மூவரும் தங்கள் சொந்த வீடாகிய தேவாலயத்தில் தங்கள் பாக்கியத்தைக் கண்டடைந்தார்கள். மாலைப் பொழுதில் மூவரும் ஒன்று சேர்ந்து சம்பாஷனை செய்வார்கள். அந்த சாம்பாஷனை பக்திக்கடுத்ததாகவே இருக்கும். திவ்விய இயேசுவின் வார்த்தைகள் அவருடைய திரு இருதயத்திலிருந்து புறப்படும் வார்த்தைகள். அவர் வேதம் போதிக்கும்போது ஜனத்திரளின் இருதயத்தை இளக்கி அவர் பரிசமாய் இழுத்தது அவரது தெய்வீக வார்த்தைகள்தான்.

திவ்விய இயேசு வெளியரங்க வாழ்வில் தமது பிள்ளைகளாகிய அப்போஸ்தலர்கள் நடுவில் இருந்தபோதும், குடும்பத்தின் தகப்பன்மார்களுக்கும் உத்தம மாதிரிகையாய் விளங்கினார். அவர்களுடைய ஆத்தும சரீர நன்மையைப் பற்றி மிக கவலை எடுத்துக் கொள்கிறார். அவர்களுக்குப் போதிக்கிறார். பட்சத்தோடும் உறுதியோடும் அவர்கள் குற்றத்தைக் கண்டித்துத் திருத்துகிறார். அவர்கள் நடுவில் சமாதானமும், தகப்பனுக்கும் பிள்ளைக்குமுள்ள ஒற்றுமையும் குடிகொண்டிருக்கச் செய்கிறார். அவர்கள் ஆத்தும சரீரத்துக்கு அபாயம் வருவிக்கும் எதிரிகளிடத்திலிருந்து அவர்களைக் காப்பாற்றுகிறார். மாறாத பிறரன்போடு அவர்களோடு புழங்குகிறார். கடைசியாய்ச் சகல புண்ணியங்களையும் அனுசரித்து அவர்களுக்கு இடைவிடாமல் நன்மாதிரிகை காண்பிக்கிறார்.

அப்போஸ்தலர்கள் நடுவில் திவ்விய இயேசு நடந்தது போல் நல்ல கத்தோலிக்கக் குடும்பத்திலுள்ள தாய்தந்தையர்களும் தங்கள்

பிள்ளைகளின் நடுவில் நடப்பார்கள். தங்கள் பிள்ளைகளின் படிப்பினைக்கும், ஆத்தும மீட்புக்கும் உத்திரவாதிகளான அவர்கள், தாங்கள் இயேசுக் கிறீஸ்துவின் பதிலாளிகள் என்று எண்ணிக் கொள்ளக் கடவார்கள். அவர்களுடைய இளம்பிராயத்திலேதானே, விசுவாசத்தின் பிரதான சத்தியங்களையும், எங்குமிருந்து எல்லாவற்றையும் பார்க்கிற தேவ சன்னிதானத்தையும், அவர்கள் அடையவேண்டிய மோட்ச பாக்கியத்தின் நினைவையும், விலக்கவேண்டிய நரகத்தின் நினைவையும், ஆத்துமத்துக்குக் கேடு வருவிக்கிற பாவத்தின் மேல் பகையையும், கடைசியில் சகல கிறீஸ்துவப் புண்ணியங்களின் அனுசரிப்பையும் அவர்களுடைய மனதிலும் இருதயத்திலும் பதியும்படி செய்யவேண்டியது.

பிள்ளைகள் தங்கள் பெற்றோர்களின் நற்புத்திமதிகளையும், நன்மாதிரிகைகளையும் எப்போதும் நினைத்துக் கொள்வார்களென்பது ஒரு பக்கத்தில் உண்மையானால், வேறொரு பக்கத்தில் அவர்கள் பெற்றோர்களிடம் கண்ட துர்மாதிரிகைகளும் அவர்கள் ஞாபகத்தைவிட்டு ஒருபோதும் விலகாது. இந்த ஞாபகம் அவர்களுடைய மீட்பு விஷயத்தில் வெகு ஆபத்தான விசாரத்தை விளைவிக்கும்.

இயேசுவின் திருஇருதயப் பக்தியில் விளங்கும் பெற்றோர்கள் தங்கள் குடும்பத்தையும் வீட்டையும் அத்திரு இருதயத்தின் தேவாலயமாக ஏற்படுத்துவார்கள். இந்தத் தேவாலயம் பரிசுத்ததனத்திலும், புனித தனத்திலும் விளங்கும்படி காப்பாற்றுவார்கள்.

## வரலாறு

இயேசுவின் திரு இருதயம் புனித மார்கரீத் மரியம்மாள் வழியாக உலகத்துக்குத் தம்மை அறிவித்த சில வருஷங்களுக்குப் பிற்பாடு பாரலேமோனியால் மடத்தில் ஓர் சிறு ஜெபக்கூடம் கட்டப்படுவதைப் பார்த்து இந்தக் கன்னியாஸ்திரி வெகு ஆறுதலடைந்தாள். என்றாலும் இந்த சொற்ப ஆரம்பத்தோடு அவள் திருப்தியடைந்திருக்கவில்லை. ஆதலால் மடத்தின் எல்லைக்குள் இயேசுவின் திரு இருதயத்துக்குத் தோத்திரமாக வேறோர் பெரிய ஜெபக்கூடம், கூடிய சீக்கிரம் கட்ட உத்தரவாகும்படி மடத்துப் பெரிய தாயாரை வெகுவாய்க் கெஞ்சிக் கேட்டாள். அவளுடைய விண்ணப்பம் பலித்தது. 1688-ம் வருஷம் ஜெபக்கூடம் கட்டி முடிந்து, அநேகங் குருக்கள், கிறிஸ்துவர்கள் கூடியிருக்க வெகு ஆடம்பரமாய் மந்திரிக்கப்பட்டது. பீடத்தின் மேலே வெகு நேர்த்தியாய் சித்தரிக்கப்பட்ட அழகான இயேசுவின் திரு இருதயப்படம் ஒன்று நிறுவப்பட்டிருந்தது. அதைப் பார்த்தவுடன் புனித மார்கரீத் மரியம்மாளுடைய இருதயமானது சந்தோஷத்தால் அகமகிழ்ந்து

பூரித்தது. மந்திரிக்கும் சடங்கு நடக்கும்போது ஜெபக்கூடத்தின் ஓர் மூலையில் முழந்தாட்படியிட்டு பரவசத்திலிருந்தவள் போல் காணப்பட்டாள். திரு இருதய மகிமைக்கு முதல் அடையாளமாக ஏற்பட்ட இந்த ஜெபக்கூடத்துக்கு மார்கரீத் மரியம்மாள் அடிக்கடி வந்து வேண்டிக் கொள்வாள். மாதத்தின் முதல் வெள்ளிகளில் மடத்திலுள்ள சகலரும் இயேசுவின் திரு இருதயத்துக்குத் தோத்திரம் செலுத்த வருவதைப் பார்க்கும்போது, அவள் அனுபவித்த சந்தோஷத்துக்கு அளவில்லை. இந்த ஜெபக்கூடம் இன்னும் இருக்கிறது. திரு இருதய அன்பர்கள் நாளதுவரை அதைப் பக்தியோடு சந்தித்து வருகிறார்கள்.

ஆத்தும இரட்சண்ய ஆவலால் அயராமல் உழைத்து வரும் கோயம்புத்தூர் மிஷனைச் சேர்ந்த வேத போதகர்கள் தற்போது கோயம்புத்தூர் பட்டணத்திலேயே ஓர் அழகான கோவில் இயேசுவின் திரு இருதயத்துக்குத் தோத்திரமாகக் கட்டியிருக்கிறார்கள். இந்த இடம் இயேசுவின் திருஇருதயப் பக்திக்கு ஆஸ்பதமாகி கிறிஸ்துவர்களுடைய புனிதப்படுத்தலுக்கும் பிறமதத்தினர் மனந்திரும்புதலுக்கும் அவசியமான கொடைகளுக்கு ஊற்றாக விளங்கும் என்பதற்கு சிறிதும் சந்தேகமில்லை.

நம் இந்தியாவின் தலைநகரான டெல்லியிலும் இன்னும் பெங்களூர், கும்பகோணம், மங்களூர், வீராப்புள்ளி, கொல்லம், எர்ணாக்குளம், சங்கனாச்சேரி, கொழும்பு, பர்மா, மலாக்கா முதலிய தீவு தீவாந்தரங்களைச் சேர்ந்த மிஷன்களிலும், அநேக நேர்த்தியான தேவாலயங்கள் இயேசுவின் திரு இருதயத்துக்குத் தோத்திரமாகக் கட்டப்பட்டிருப்பதைக் காணலாம்.

இந்த உன்னத இடத்திலிருந்து இயேசுவின் திரு இருதயமானது, கிறீஸ்துவர்களுடைய அர்ச்சிப்புக்காகவும், அஞ்ஞானம் நிறைந்த இவ்விந்திய தேசமும் இதைப் போன்றே மற்றெந்த நாடுகளும் மனந்திரும்பி இரட்சண்யமடையும் படியாகவும் ஓயாமல் வேண்டிக் கொண்டுவருகிறது.

இத்திரு இருதயத்தோடு நாமும் ஒன்றித்து பா.பிரி. வேண்டிக்கொள்வோமாக.

*இயேசுவின் திருஇருதய நவநாள் பக். 134*

*இயேசுவின் இருதய புகழ்மாலை பக். 135*

# முடிவுரை



## இயேசுவின் அன்பு நிறைந்த இருதயமும், புனித மரியாயின் அன்புள்ள இருதயமும்

மே-மாதம் மரியன்னையின் மாசற்ற இருதயத்துக்கும், ஜூன் மாதம் இயேசுவின் திருஇருதயத்துக்கும் தனித்தனியே ஆராதனை தோத்திரம் செலுத்தின பிற்பாடு, இன்று அவ்விரு இருதயங்களுக்கும் சேர்த்து நமது சிநேகப்பற்றுதலைக் காண்பிப்போமாக. இந்த இரண்டு இருதயங்களுக்கும் எவ்வளவு ஒருமைப்பாடு இருக்கிறதென்றால், அவைகளை ஒன்றைவிட்டு ஒன்று பிரிக்கமுடியாது. ஒரு இருதயமானது தன்னிலே நம்மை இன்னொரு இருதயத்துக்கு இட்டுக் கொண்டு போகிறது.

ஓர்நாள் ஒரு பக்தியுள்ள சகோதரி நமது ஆண்டவரை நோக்கி அவருடைய திருஇருதயத்தில் பிரவேசிக்க தான் வெகு ஆசையுள்ளவளாயிருக்கிறதாக வெளியிட்டு, இந்த ஆசை நிறைவேறும்படி, தான் என்ன செய்யவேணுமென்று கேட்டாள். இயேசுக்கிறிஸ்துநாதர் பதிலாக: "நமது இருதயத்தில் நீ பிரவேசிக்கப் பிரியப்பட்டால், மரியன்னையின் வழியாய் நம்மிடம் வா. நமது மாதாதான் நமது இருதயத்துக்கு வாசற்படி" என்றார். ஆதலால் மரியன்னையின் வழியாக இயேசுவின் திருஇருதயத்தை அண்டிப்போவோமாக. புனித மரியாதான் இடையர்களையும் மூன்று அரசர்களையும் திவ்விய பாலகனாகிய இயேசுவிடம் கொண்டு வந்து சேர்த்தாள். மரியன்னை தெரிந்துகொள்ளப்பட்ட சகலரையும் நித்திய பாக்கியமாகிய இயேசுவின் மகிமை நிறைந்த இருதயத்துக்குள் கொண்டுபோய்ச் சேர்ப்பாள். ஆதலால் திருச்சபையானது மரியன்னையை நோக்கி, மோட்சத்தின் வாசற்படி என்று அழைக்கிறது சரியே.

மரியன்னை நமது ஆண்டவருடைய தாயாராயிருக்கிறதைப் பற்றி, சர்வேசுரனுக்குப் பிற்பாடு சகலருக்கும் மேலான மகிமையில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறாள். ஆதாம் என்பவருடைய மக்களுக்குள் புனித கன்னிமரியாயிதான் ஜென்மப்பாவமின்றி ஜென்மித்த விசேஷ சுதந்திரம் பெற்றவள். ஜென்மதோஷமின்றி ஜென்மித்த அந்த க்ஷணத்திலேதானே அவளுடைய இருதயமானது எவ்வளவு ஏராளமான கொடைகளால் அலங்கரிக்கப்பட்டதென்றால், சகல சம்மனசுகளுக்கும் புனிதர்களுக்கும் மேலாய் உயர்த்தி ஸ்தாபிக்கப்பட்டாள்.

இயேசுவின் திருஇருதயத்தினிடம் மரியன்னைக்கு சொல்லொண்ணா செல்வாக்கு இருப்பதால், உனக்கு வரும் சகல துன்பத்திலும், மரியன்னையின் பெயரை உச்சரிக்க கவலைகொள். அவளுடைய திருநாமம் எப்போதும் உன் நாவிலும் இருதயத்திலுமிருக்கட்டும். நமக்கு உதவிபுரிய அவளுடைய சக்தியும் நல்ல மனதும் ஒருபோதும் குறைவுபடாது. ஏனென்றால், அவள் பரலோக இராக்கினி. தேவ குமாரனுடைய தாய், இரக்கமும் உருக்கமான அன்பும் நிறைந்த தாய். அவளே தன் மன்றாட்டால் சர்வ வல்லபமுள்ளவள் என்று புனித பெர்நர்தென்பவர் வெகு தெளிவாய்ச் சொல்லியிருக்கிறார்.

மரியன்னை சர்வேசுரனை மன்றாடுகிறாள். ஏனென்றால் அவள் தெய்வமல்ல. ஆனால் சர்வேசுரனுடைய மகா உச்சிதமான உத்தம சிருஷ்டி. அவளுக்குச் சர்வேசுரன் எப்போதும் செவிகொடுப்பார். அவளுடைய சகல மன்றாட்டும் கொடுக்கப்படும்.

இயேசு தமது அருட்கொடைகளையெல்லாம் மனிதர்களுக்குப் பங்கிட்டுக் கொடுப்பவளாகத் தமது திருத்தாயை நியமித்திருக்கிறார். தம் தாய்மேல் வைத்த சிநேகத்தால், அவள் கையில் தனக்குச் சொந்தமான திவ்விய பொக்கிஷங்களையெல்லாம் ஒப்படைத்து, அவளிஷ்டம் போல் பக்தர்களுக்கு பங்கிட்டுக் கொடுக்கும்படி உத்தரவு பண்ணுகிற ஓர் இளவரசனுக்கு ஒத்தவண்ணம், நமதாண்டவரும் தமது தாய்நாட்டில் நடந்துகொள்கிறார். இவ்வகையாய் எல்லா உபகார சகாயங்களும் அரசரிடமிருந்து வருகிறது. ஆனால் தாயார் அவைகளைப் பங்கிட்டுக் கொடுக்கிறாள். இயேசுக்கிறீஸ்துவின் கொடைகளையும் பலன்களையும் தேவதாய் நமக்கு அளிப்பவளாயிருப்பதால், தேவதாயார் பேரில் பக்தியுள்ளவர்கள் மோட்சபாக்கியத்துக்குத் தெரிந்து கொள்ளப்பட்டவர்களெனலாம். இந்த நல்ல தாயிடத்தில் எவ்வளவு வல்லமையும் இரக்கமும் இருக்கிறதென்றால், யார் யார் தன்னை நோக்கி சிநேகிக்கிறார்களோ அவர்களெல்லோரையும் இரட்சிப்பாள். ஜீவிய காலத்திலும், விசேஷமாய் மரண நேரத்திலும் நம்முடைய சத்துருக்களிடத்திலிருந்து நம்மைக் காப்பாற்றுவாள்.

மேற்சொன்னவைகளையெல்லாம் அறிந்த நாம், மோட்சத்துக்கு இராக்கினியும், சர்வேசுரனுக்கு மாதாவும், கபிரியேல் என்னும் அவ்வளவு மரியாதை வணக்கம் காண்பித்த பரிசுத்த கன்னிகையும், எந்த நல்ல மைந்தனும் தன் தாய்க்குக் காட்டின சங்கைக்கும், சிநேகத்துக்கும் மேலாய் திவ்விய இயேசு சங்கித்தும் சிநேகித்தும் வந்த தமது மாதாவாகிய மரியன்னைக்கு சங்கை செய்வதும், அவளை நோக்கி மன்றாடுவதும் கூடாதென்று மறுதலித்து, இன்னும் அத்தேவதாயை நிந்தனைச் செய்வோரை நாம் என்னென்று சொல்லுவோம்! அவர்கள் பேரில் இரக்கப்பட எவ்வளவு நியாயமுண்டு! தன் தாயின்மேல்

சொன்ன தூஷணம் தனக்கே என்று ஒரு நல்ல குமாரன் எப்போதும் எண்ணிக் கொள்வான். திருக்கன்னிமரியாயைத் தூஷணிக்கிறவர்கள் ஓர்நாள் அவருடைய திருக்குமாரன் இயேசுவின் சிம்மாசனத்துக்கு முன் வந்து நிற்க வேண்டும். அந்நேரத்தில்தான் மனுமக்களுக்குள் மிக்க நேசத்துக்குப் பாத்திரமான திவ்விய இயேசு, தமது தாயின் பேருக்கும் தமது தாயின் பேரோடு இணைபிரியாத தமது சொந்தப் பேருக்கும் பழுது வருவித்தவர்களுக்கு கடின தீர்ப்புச் செய்வார்.

இயேசுவின் திருஇருதயப் பக்தரகளனைவரும் தங்களுக்குச் சொந்தத் தாயாகிய தேவதாயை உண்மையில் சங்கித்துச் சிநேகிப்பார்கள். "இதோ உன் தாய்" புனித அருளப்பரை நோக்கி கல்வாரி மலையில் அவர் சொன்னது போல் அவர்களுக்கும் சொல்லுவார். புனித அருளப்பரைப் போல் பக்திப்பற்றுதலோடு நாமும் அவளை அன்பு செய்வோமாகில், நாம் பாவத்தை விலக்கி புண்ணியத்தைச் செய்ய அவள் நமக்கு உதவிசெய்து தனது நேசகுமாரன் இயேசுவின் திருஇருதயத்திற்குள் நம்மை இட்டுக் கொண்டு போவாள்.

# இயேசுவின் திருஇருதய நவநாள்



கேளுங்கள் கொடுக்கப்படும், தேடுங்கள் அகப்படும், தட்டுங்கள் திறக்கப்படும் என்று திருவுளம் பற்றியிருக்கிற திவ்விய இயேசுவே, தேவரீருடைய இருதயத்தினின்று உற்பத்தியாகி ஆராதனைக்குரிய உமது திருநாளில் உரைக்கப்பட்ட இந்த வாக்குத்தத்தங்களை நம்பிக்கொண்டு உயிருள்ள விசுவாசத்தால் ஏவப்பட்டு உம்முடைய திருப்பாதத்தில் அடியேன் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கித் தாழ்ச்சியுடன் கேட்டுக்கொள்ளும் மன்றாட்டு ஏதென்றால் . . .

*(வேண்டியதை உறுதியோடு கேட்கவும்)*

சகல நன்மைகளுக்கும், பேறுபலன்களுக்கும் வற்றாத ஊரணியாகிய தேவரீருடைய திருஇருதயத்தினின்றல்லாமல் வேறே யாரிடத்தினின்று இதைக் கேட்கப்போகிறேன். தயாள சம்பன்ன ஐசுவரியங்களெல்லாம் அடங்கிய பொக்கிஷத்திலன்றி வேறெங்கே நான் இதைத் தேடப்போகிறேன். தாமே பிரசன்னமாகிறதுமாய் நாங்கள் அவரிடத்திற்குப் போக வழியுமாயிருக்கிற உமது திருஇருதய வாசலிடத்தில் வந்து தட்டாமல் வேறெங்கே நான் தட்டிக் கேட்கப்போகிறேன். ஆகையால் என் நேச இயேசுவின் திருஇருதயமே தேவரீருடைய தஞ்சமாக ஓடிவந்தேன். இக்கட்டு இடைஞ்சலில் என் ஆறுதல் நீரே. துன்ப துயரத்தில் என் அடைக்கலம் நீரே. சோதனைத் தருணத்தில் எனக்கு ஊன்றுகோல் நீரே. தேவரீருக்குச் சித்தமானால் அற்புதம் வேண்டியிருந்தாலும் நடத்தி இந்த வரத்தை எனக்குத் தந்தருளுவீரென்று நம்பியிருக்கிறேன்.

தேவரீர் சித்தம் வைத்தாலே போதும். என் செபம் பிரார்த்தனைகள் அனுகூலமாகும். திவ்விய இயேசுவே, தேவரீருடைய நன்மை உபகாரங்களுக்கு நான் முழுவதும் அபாத்திரவான்தான், ஆகிலும் நான் இதனாலே அதைரியப்பட்டு பின்னடைந்து போவேனல்ல; தேவரீர் இரக்கத்தின் தேவனாகையால் துக்க மனஸ்தாபப்படும் தாழ்ச்சியுள்ள இருதயத்தை தேவரீர் தள்ளுவீரல்ல. உமது இரக்கமுள்ள கண்களால் எங்களை நோக்கியருளும். என் நிர்ப்பாக்கியத்தையும் பலவீனத்தையும் கண்ட மாத்திரத்தில் தேவரீருடைய கிருபை நிறைந்த இருதயம் எனக்கு இரங்காமற் போகாது.

இரக்கமுள்ள திருஇருதயமே! என் விண்ணப் பத்தின்மட்டில் தேவரீர் என்ன தீர்மானம் செய்தாலும் சரியே! தேவரீரை நான் வாழ்த்தி வணங்கி போற்றிப் புகழ்ந்து சேவிக்க நான் ஒருக்காலும் பின்வாங்குவேனல்ல. அன்புக்குரிய இரட்சகரே! ஆராதனைக்குரிய உம்முடைய திவ்விய இருதய தீர்மானத்திற்கு முழுதும் அமைந்து நடக்க நான் செய்யும் சுகிர்த முயற்சியை கிருபையாய்க் கையேற்றுக்கொள்ளும். நானும் சகல சிருஷ்டிகளும் இப்படி உமது சித்தத்தை நாடி நடந்து சதா காலத்திற்கும் இதை நிறைவேற்ற ஆசையாயிருக்கிறேன் - ஆமென்.

# இயேசுவின் திருஇருதயத்திற்குப் புகழ்மாலை



சுவாமி கிருபையாயிரும்
கிறிஸ்துவே கிருபையாயிரும்
சுவாமி கிருபையாயிரும்
கிறிஸ்துவே எங்கள் மன்றாட்டைக் கேட்டருளும்
கிறிஸ்துவே எங்கள் மன்றாட்டை நன்றாக கேட்டருளும்
பரலோகத்திலிருக்கிற பிதாவாகிய சர்வேசுரா
**- எங்களை தயைபண்ணி இரட்சியும் சுவாமி**

உலகத்தை மீட்டு இரட்சித்த சுதனாகிய சர்வேசுரா*

தூய ஆவியாகிய சர்வேசுரா

புனித தமத்திருத்துவமாயிருக்கிற ஏக சர்வேசுரா

என்றும் வாழும் பிதாவின் சுதனாகிய இயேசுவின் திருஇருதயமே

பரிசுத்த கன்னித்தாயின் உதிரத்தில் தூய ஆவியால் உருவான இயேசுவின் திருஇருதயமே, . . .

தேவ வார்த்தையான சுதனோடு ஒரே பொருளாய் ஒன்றித்திருக்கும் இயேசுவின் திரு இருதயமே . . .

அளவற்ற மகத்துவப் பிரதாபம் நிறைந்த இயேசுவின் திருஇருதயமே

இறைவனுடைய அர்ச்சிக்கப்பட்ட ஆலயமாகிய இயேசுவின் திருஇருதயமே . . .

அதிஉன்னத ஆண்டவரின் உறைவிடமான இயேசுவின் திருஇருதயமே...

இறைவனின் இல்லமும் விண்ணக வாசலுமான இயேசுவின் திருஇருதயமே . . .

அன்புத் தீ சுவாலித்தெரியும் சூளையான இயேசுவின் திருஇருதயமே . . .

நீதியும் சிநேகமும் தங்கியிருக்கும் இல்லிடமான இயேசுவின் திருஇருதயமே . . .

தயாளமும் சிநேகமும் நிறைந்த இயேசுவின் திரு இருதயமே . . .

சகல புண்ணியங்களும் முழுமையாக நிறையப் பெற்ற இயேசுவின் திருஇருதயமே . . .

எல்லா ஆராதனை புகழ்ச்சிக்கும் முற்றும் உரிய இயேசுவின் திருஇருதயமே . . .

* எங்களை தயைபண்ணி இரட்சியும் சுவாமி

இருதயங்களுக்கெல்லாம் அரசும் அவைகளின் மைய இடமுமான இயேசுவின் திருஇருதயமே . . .*

ஞானமும் அறிவும் நிறைந்த முழு நிறைச் செல்வமான இயேசுவின் திருஇருதயமே . . .

இறைத்தன்மை முழுமையாக தங்கி வழியும் இயேசுவின் திருஇருதயமே . . .

உமது பிதாவுக்கு உகந்த பிரிய நேசமுள்ள இயேசுவின் திருஇருதயமே . . .

உம்மில் நிறைந்துள்ள நன்மைகளை நாங்கள் அனைவரும் போற்றி மகிழச் செய்யும் இயேசுவின் திருஇருதயமே . . .

நித்திய சிகரங்களின் ஆசையாகிய இயேசுவின் திருஇருதயமே.. .

பொறுமையும் மிகுந்த தயாளமும் உள்ள இயேசுவின் திருஇருதயமே...

உம்மை மன்றாடி வேண்டும் அனைவருக்கும் நிறைவை அளிக்கும் தாராளமான இயேசுவின் திரு இருதயமே . . .

வாழ்வுக்கும் புனித நிலைக்கும் ஊற்றான இயேசுவின் திருஇருதயமே . . .

எங்கள் பாவங்களின் மன்னிப்புக்கேற்ற பரிகாரமான இயேசுவின் திருஇருதயமே . . .

நிந்தை அவமானங்களால் நிறைந்து மிகுந்த இயேசுவின் திருஇருதயமே . . .

எங்கள் பாவச் செயல்களால் வேதனையுற்று வருந்தின இயேசுவின் திருஇருதயமே . . .

மரணம் வரையும் கீழ்ப்படிந்திருந்த இயேசுவின் திருஇருதயமே. . .

ஈட்டியால் குத்தி ஊடுருவப்பட்ட இயேசுவின் திருஇருதயமே . . .

சர்வ ஆறுதல் அனைத்தின் ஊற்றாகிய இயேசுவின் திருஇருதயமே...

எங்கள் உயிரும் உயிர்ப்புமான இயேசுவின் திருஇருதயமே . . .

எங்கள் சமாதானமும் ஒற்றுமையின் இணைப்புமாகிய இயேசுவின் திருஇருதயமே . . .

பாவங்களுக்கு பலியான இயேசுவின் திருஇருதயமே . . .

உம்மிடத்தில் நம்பிக்கை வைக்கிறவர்களுடைய மீட்பரான இயேசுவின் திருஇருதயமே . . .

எல்லா புனிதர்களின் ஆனந்தமாகிய இயேசுவின் திருஇருதயமே...

* எங்களை தயைபண்ணி இரட்சியும் சுவாமி

உலகின் பாவங்களைப் போக்கும் இறைவனின் செம்மறியாகிய இயேசுவே

- எங்கள் பாவங்களைப் பொறுத்தருளும் சுவாமி.

உலகின் பாவங்களைப் போக்கும் இறைவனின் செம்மறியாகிய இயேசுவே

- எங்கள் மன்றாட்டைக் கேட்டருளும் சுவாமி.

உலகின் பாவங்களைப் போக்கும் இறைவனின் செம்மறியாகிய இயேசுவே

- எங்கள் மேல் இரக்கமாயிரும் சுவாமி.

முதல் : இருதயத்தில் தாழ்ச்சியும் சாந்தமும் உள்ள இயேசுவே,

துணை : எங்கள் இருதயம் உமது இருதயத்துக்கு ஒத்திருக்கச் செய்தருளும்.

செபிப்போமாக :

என்றும் வாழும் எல்லாம் வல்ல இறைவா, உமது அன்புத் திருமகன் இருதயத்தையும் அவர் பாவிகளுக்காக உமக்குச் செலுத்தின பரிகாரத்தையும் வணக்க புகழ்ச்சிகளையும் தயைகூர்ந்து, கண்ணோக்கியருளும். உமது இரக்கத்தை மன்றாடுகிறவர்களுக்கு நீர் இரங்கி மன்னிப்பளித்தருளும். உம்மோடு தூய ஆவியின் ஐக்கியத்தில் என்றென்றும் வாழ்ந்து ஆட்சி செய்கின்ற எங்கள் ஆண்டவரும் உம் திருமகனுமாகிய அதே இயேசுகிறிஸ்து வழியாக உம்மை மன்றாடுகிறோம் - ஆமென்.

# இயேசுவின் திரு இருதயத்திற்குக் குடும்பத்தை ஒப்புக்கொடுக்கிற செபம்



இயேசுவின் திருஇருதயமே! கிறிஸ்தவ குடும்பங்களுக்கு தேவரீர் செய்துவரும் சகல உபகாரங்களையும் சொல்லமுடியாத உமது நன்மைத்தனத்தையும் நினைத்து நன்றியறிந்த பட்சத்தோடு உமது திருப்பாதத்தில் சாஷ்டாங்கமாக விழுந்து கிடக்கிறோம். நேசமுள்ள இயேசுவே! எங்கள் குடும்பங்களிலுள்ள சகலரையும் உமக்கு ஒப்புக் கொடுக்கிறோம். தேவரீர் எங்களை ஆசீர்வதித்து, இப்போதும் எப்பொழுதும் உம்முடைய திருஇருதய நிழலில் இளைப்பாறச் செய்தருளும்.

தவறி எங்களில் எவரேனுது உமது திருஇருதயத்தை நோகச் செய்திருந்தால் அவன் குற்றங்களுக்கு நாங்களே நிந்தைப்பரிகாரம் செய்கிறோம். உமது திருஇருதயத்தைப் பார்த்து எங்கள் பரிகாரத்தை ஏற்றுக்கொண்டு . . . (அன்னாருக்கு) கிருபை செய்தருளும்.

இதுவுமின்றி உலகத்திலிருக்கும் சகல குடும்பங்களுக்காகவும் உம்மை மன்றாடுகிறோம். பலவீனர்களுக்கு பலமும் விருத்தாப்பியருக்கு ஊன்றுகோலும், விதவைகளுக்கு ஆதரவும் அனாதைப்பிள்ளைகளுக்கு தஞ்சமுமாயிருக்கத் தயைபுரியும். ஒவ்வொரு வீட்டிலும் நோயாளிகள், அவஸ்தைப்படுகிறவர்கள் தலைமாட்டில் தேவரீர் தாமே விழித்துக் காத்திருப்பீராக!

இயேசுவின் இரக்கமுள்ள திருஇருதயமே! சிறுபிள்ளைகளை எவ்வளவோ பட்சத்தோடு நேசித்தீரே, இந்த விசாரணையிலுள்ள சகல பிள்ளைகளையும் உமக்கு ஒப்புக் கொடுக்கிறோம். அவர்களை ஆசீர்வதியும்.

அவர்களுடைய திருஇருதயத்தில் விசுவாசத்தையும், தெய்வபயத்தையும் வளரச்செய்யும். சீவிய காலத்தில் அவர்களுக்கு அடைக்கலமாகவும், மரண சமயத்தில் ஆறுதலாகவும் இருக்க மன்றாடுகிறோம். திவ்விய இயேசுவே! முறைமுறையாய் உமது திருசினேகத்தில் சீவித்து மரித்து நித்திய காலமும் எங்கள் குடும்பம் முழுவதும் உம்மோடு இளைப்பாற கிருபைபுரிந்தருளும். - ஆமென்.



# இயேசுவின் திரு இருதயத்திற்குத் தங்கள் குடும்பங்களை ஒப்புக் கொடுக்கும் செபம் - 2

இயேசுவின் திரு இருதயமே! கிறிஸ்தவ குடும்பங்களுக்கு நீர் செய்து வரும் / சகல உபகாரங்களையும், அளவற்ற நன்மைத் தனங்களையும் நினைத்து / நன்றி நிறைந்த நெஞ்சமுடன் உம்மைப் போற்றிப் புகழ்ந்து / பாதம் பணிந்து வணங்குகிறோம்.

நேசமுள்ள இயேசுவே! எங்கள் குடும்பங்களிலுள்ள அனைவரையும் உமக்கு ஒப்புக்கொடுக்கிறோம். / நீர் எங்களை அன்புடன் ஆசீர்வதித்து / எங்களுக்குத் தேவையான அனைத்தையும் தந்துதவி / இன்றும் என்றும் / நாங்கள் உமது திரு இருதய நிழலில் இளைப்பாறச் செய்தருளும்.

அன்பு இறைவா! எங்களில் யாராவது உமக்கு விரோதமாய் நடந்து உம்மை மனநோகச் செய்திருந்தால் / அவரது குற்றத்திற்கு, / நாங்கள் மனம் வருந்தி பரிகாரம் செய்கிறோம். / எங்கள் பரிகாரத்தை ஏற்றுக் கொண்டு / அவர்களை தயவாய் மன்னித்தருளும்.

இறைவா! உலகிலுள்ள அனைத்து குடும்பங்களுக்காகவும் உம்மை மன்றாடுகிறோம். / பலவீனர்களுக்குப் பலமும், / முதியோருக்கு ஊன்றுகோலும், / விதவைகளுக்கு ஆதரவும், / ஏழைகளுக்கும் அனாதைகளுக்கும் அடைக்கலமுமாயிருக்கத் தயைபுரியும். / நோயினால் வருந்துவோரின் அருகில் அமர்ந்து ஆறுதல் அளிப்பீராக. /

இயேசுவின் இரக்கமுள்ள திரு இருதயமே! / சிறு பிள்ளைகளை மிகுந்த அன்போடு நேசித்தீரே. / எங்கள் குடும்பங்களிலுள்ள அனைத்துப் பிள்ளைகளையும் / உம்மிடம் ஒப்படைக்கிறோம். / அவர்களை ஆசீர்வதியும். / அவர்களது இருதயத்தில் விசுவாசத்தையும், தெய்வ பக்தியையும் வளரச் செய்யும். / அவர்கள், அறிவிலும் ஞானத்திலும் வளர்ந்து / நற்பண்புகள் உடைய நல்ல பிள்ளைகளாய் வாழ்வில் சிறந்து விளங்க / கிருபை செய்தருளும். அவர்களது வாழ்நாட்களில் / அவர்களுக்கு அடைக்கலமாகவும், வழிகாட்டியாகவும், / துன்ப காலத்தில் ஆறுதலாகவும் இருக்கும்படி உம்மை மன்றாடுகிறோம்.

திவ்விய இயேசுவே! நாங்கள் எப்போதும் / உமது அன்பு பராமரிப்பில் வாழ்ந்து மரித்து / நித்திய காலமும் எங்கள் குடும்பம் முழுவதும் / உம்மில் இளைப்பாற கிருபை செய்தருளும். / ஆமென்.

# இயேசுவின் திருஇருதயத் தொடர் மன்றாட்டு கீதம்

ஆண்டவரே, இரக்கமாயிரும்
கிறிஸ்துவே, இரக்கமாயிரும்
ஆண்டவரே, இரக்கமாயிரும்
கிறிஸ்துவே மன்றாட்டைக் கேட்டருளும்

1. பரத்தைப் படைத்த பிதா சர்வேசுரா,
உலகத்தை மீட்ட சுதன் தேவா,
பரிசுத்த ஆவி இறைவனே
எங்கள் மேல் இரக்கமாயிரும்

2. நித்திய பிதாவின் சுதனான
நிர்மல தந்தையின் மகனான
இயேசுவின் மதுர இருதயமே - *எங்கள் . . .

3. நித்திய பிதாவின் சுதனான
நிர்மல தந்தையின் மகனான
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

4. தேவ வார்த்தையாம் சுதனோடு
ஒரே பொருளாய் ஒன்றித்திருக்கும்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

5. அளவில்லா மாட்சிமை மிகும்
இறைவனின் புனித ஆலயமாம்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள்

6. அதி உன்னதராம் ஆண்டவரின்
அழகிய உறை விடமான
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள்

7. இறைவனானவரின் இல்லமும்
வானகத்தின் வாயிலுமாகும்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

8. பரம அன்பின் எரி உலையாய்
சுடர் விட்டெரியும் தீபமாம்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

* எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்

9. நீதியும் அன்பும் இணைந்துறையும்
நித்தியமான இல்லிடமாம்
இயேசுவின் மதுர இருதயமே, - * எங்கள் . . .

10. நன்மைத் தனங்கள் நிறைந்தொளிரும்
சகல புண்ணியங்களின் பூரணமாம்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

11. இருதயங்களுக்கெல்லாம் அரசாய்
அனைத்துப் புகழ்ச்சிக்கும் முற்றும் உரிய
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

12. ஞானமும் அறிவும் நிறைந்தொளிரும்
பூரண தெய்வ பொக்கிஷமாம்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

13. இறைமையின் நிறைவெல்லாம் உறைந்து
தந்தை உம்மில் பூரிப்படையும்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

14. உம்மில் நிறைந்துள்ள நன்மைகளை
அனைவரும் பெற்று மகிழச் செய்யும்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

15. என்றும் நிலைபெறும் குன்றாய் விளங்கும்
பொறுமை தயாளத்தின் நிறைவாம்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

16. உம்மை வேண்டி மன்றாடுவோர்
அனைவர்க்கும் வளமார்ந்த நிறைவளிக்கும்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

17. வாழ்வுக்கும் புனிதத்துக்கும் ஊற்றாகும்
ஆறுதல் அனைத்துக்கும் புகலிடமாகும்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

18. அளவில்லா எம் பாவங்களின்
மன்னிப்புக் கேற்ற பரிகாரமாகும்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

* எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்

19. நிந்தை மிகு அவமானங்களால்
நிறைந்து வழிந்து துயருற்ற
இயேசுவின் மதுர இருதயமே, - * எங்கள் . . .

20. எங்கள் தீய செயல்களுக்காய்
நொந்து வருந்தி அவதிப்பட்ட
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

21. சாவையும் ஏற்க கீழ்ப்படிந்து
ஈட்டியால் குத்தி பிளக்கப்பட்ட
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

22. ஆறுதல் அனைத்திற்கும் ஊற்றாகும்
எங்கள் வாழ்வும் உயிர்ப்புமாகும்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

23. எங்கள் உண்மை சமாதானமும்
ஒப்புரவு ஒற்றுமை பந்தனமுமாம்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

24. பாவியர் எமக்காய் பலியாகி
நம்பினோர்க் கென்றும் ஈடேற்றமாகும்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

25. உம்மில் இறப்போரின் நம்பிக்கையாகும்
புனிதர் அனைவரின் மகிழ்ச்சியாகும்
இயேசுவின் மதுர இருதயமே, - எங்கள் . . .

உலகத்தின் பாவங்களைப் போக்கும்
உத்தம இறைவனின் செம்மறியே
உன்னத இயேசு கிறிஸ்துவே

1. எங்கள் பாவங்களைப் போக்கியருளும்,
2. எங்கள் மன்றாட்டைக் கேட்டருளும்
3. எங்கள் மேல் இரக்கமாயிரும்

